# நாயனம்
# சௌந்தரவடிவு



அரு. ராமநாதன்

எழுதியது

பிரேமா



பிரசுரம்
சென்னை 24.

 ரூ. 1—25.

## உள்ளே அத்தியாயங்கள்

**அத்தியாயம்:** **பக்கம்:**

## அரு. ராமநாதன்
## எழுதிய நூல்கள் :

---

**நாடகம் :**

இராஜராஜ சோழன்
[மேடைப் புகைப் படங்களுடன்] ரூ. 2—25

**நாவல் :**

நாயனம் சௌந்தர வடிவு ரூ. 1—25
அசோகன் காதலி ரூ. 1—50

**கதைக் களஞ்சியங்கள் :**

1 கதாநாயகி ரூ. 1—25
2 அம்பிகாபதி ரூ. 1—25
3 பழையனூர் நீலி ரூ. 1—25
4 கோழிப் பந்தயம் ரூ. 1—25
5 வேதாளம் சொன்ன கதைகள் ரூ. 1—25
6 மனோரஞ்சிதம் ரூ. 1—50

**சிந்தனையாளர் வரிசை :**

(வரலாறும் நூற்சுருக்கங்களும் அடங்கியது)

1 பிளேட்டோ ரூ. 1—25
2 பெஞ்சமின் பிராங்ளின் ரூ. 1—25

**பொன் மொழிகள் வரிசை :**

1 ஔவையார் ரூ. 0—50
2 புத்தர் ரூ. 0—50
3 மகாத்மா காந்தி ரூ. 0—50

# ஏ. பி. நாகராஜன்.

அத்தியாயம் : 1

## அவள் யாரோ ?

*சித்தினி ஜாதிக்குள் அவள் ரத்தினப் பெண்*
*ஐயா ஸ்வாமி !* —அபிநயப் பாடல்.

பத்து வருஷங்களுக்கு முன்னால் குளத்துமலை சகோதரர் களின் நாயனம் என்றால் தமிழ் நாடெங்கும் பிரசித்தமா யிருந்தது.

குளத்துமலை சகோதரர்களில் மூத்தவரான சிவக்கண்ணு தோடி வாசிப்பதில் அபாரமான கியாதி பெற்றிருந்தார். இளை யவரான மருதக் கண்ணுவுக்கு மகுடிக் கண்ணு என்று பெயர் வழங்கியது. மருதக்கண்ணு நாயனத்தை எடுத்து மகுடி வாசிக்க ஆரம்பித்துவிட்டால் சுற்றி நிற்கும் கூட்டம் நாகபாசத் தால் கட்டுண்டதுபோல் மெய்மறந்து நிற்குமாம். நாயனத்தி லிருந்து உதிரும் மகுடியின் அபூர்வமான ஸங்கதிகளெல்லாம் ரஸிகர்களின் நெஞ்சில் அமுங்கிக் கிடக்கும் விதவிதமான உணர்ச்சிகளை படமெடுத்து ஆடச் செய்யுமாம்.

குளத்துமலை சகல கலைகளுக்கும் உறைவிடமாகும். நாய னத்தில் மட்டுமல்ல, நடனம், நட்டுவம், வாய்ப்பாட்டு, கொன் னக்கோல், புல்புல்தாரா ஒவ்வொன்றிலும் பிரக்கியாதி பெற்ற இசை மன்னர்களெல்லாம் குளத்துமலையில் தான பிறந்திருக் கிறார்கள். பெரிய மேளமாகட்டும் சின்ன மேளமாகட்டும் குளத்துமலையிலிருந்து வந்தால்தான் ஜனங்களுக்குப் பிடிக்கும். குளத்துமலையில் கால்தவறி வழுக்கி விழுந்தால் பெரிய

மேளம் அல்லது ஒரு சின்ன மேளம் வீட்டுக்குள்தான் விழ வேண்டும்!

குளத்துமலையே ஒரு ரஸிகரஞ்சகமான ஊர். அந்த ஊரிலுள்ள அத்தனை ஜனங்களும், பல் முளைக்காத பாலர்கள் முதற்கொண்டு தெருவெல்லாம் எந்நேரமும் இசைக்கலை முழக்கிக் கொண்டிருப்பார்கள். தண்ணீர் தூக்கப்போகும் பெண்களுக்குள் காரசாரமான சச்சரவுகள் ஏற்பட்டுவிட்டால், தாளம் ஸ்ருதி இறங்காமல் அனுபல்லவி சரணங்களுடன்தான் திட்டிக் கொள்வார்கள்! குழந்தைகளை நீலாம்பரி ராகத்தில்தான் தாலாட்டுவார்கள்! கணவனோடு கோபித்துக் கொண்டால், முகாரி ராகத்தில்தான் அழுவார்கள். காலை பத்துமணி வரை தூங்கும் தங்கள் அருமைப் புருஷர்களை பூபாளம் பாடிக் கொண்டுதான் தட்டி எழுப்புவார்கள்! குளத்துமலையில் ஓடும் ஆற்று ஜலமும் காற்றில் அசையும் இலைகளுங்கூட ஆரோகணம் அவரோகணத்தில் தான் சலசல என்று சப்தம் செய்யும் என்றால் குளததுமலையின் இசைக்கலை வளர்ச்சியைப் பற்றி அதிகம் வர்ணிக்க வேண்டியதில்லை.

குளத்துமலை சகோதரர்கள் உண்மையில் உடன் பிறந்த சகோதரர்களல்ல. ஒரே ஊரில் ஒரே தெருவில் பிறந்து நாயனத்தில் ஒரே மாதிரி கைதேர்ந்தவர்கள் என்பதைத் தவிர, அவர்களில் இளையவரான மகுடி மருதக்கண்ணு இரண்டு வருஷங்களுக்கு முன் காலமாகிவிட்டார். அவர் அகாலத்தில் மரித்ததைப்பற்றி இன்னும் குளத்துமலையில் பலவிதமான வதந்திகள் உலாவுகின்றன. மூத்தவரான தோடி சிவக்கண்ணுமட்டும் உயிரோடு இருந்தார். ஆனால் தம் சகா பிரிந்த பிறகு அவர் கச்சேரிகளுக்கும் திருவிழாக்களுக்கும் நாயனம் வாசிக்கப் போவதில்லை; வீட்டோடு அடைபட்டுக் கிடந்தார்.

குளத்துமலையில் மேளத்தெரு ஊருக்கு மத்தியில் இருந்தது. மேளத்தெருவில் மொத்தம் இருபத்து நான்கு வீடுகள் உண்டு. இருபத்து நான்கு வீடுகளிலும் நாயனக்காரர்களிருந்தார்கள். தெருவின் கோடியிலுள்ள கீற்றுக் கூரையோட்டுமாடி வீடுதான் தற்போதிருக்கும் தோடி சிவக்கண்ணுவின் வீடு. அதற்கு எதிர்ப்புறமுள்ள ஒரு மொட்டைமாடி வீடு காலஞ்சென்ற மகுடி மருதக் கண்ணுவின் வீடாகும்.

இரவு அஸ்தமிக்கத் தொடங்கிவிட்டால், அடுத்த மாட வீதியிலிருந்து சின்ன மேளங்களின் 'தா தை தா' என்ற ஜங்கார நாதங்கள் கிளம்பிவிடும். பொழுது விடியத்தொடங்கி விட்டால், மேளத் தெருவிலிருந்து நாயனங்களின் 'பீ பீ பீ'

என்ற சப்தம் வானைக்கிழிக்கும். சாதகம் செய்வதற்காக, அதி காலை நான்கு மணிக்கே இருபத்து நான்கு வீடுகளிலுள்ள அத்தனை நாயனக்காரர்களும் எழுந்து நாயனம் ஊதத் தொடங்கி விடுவார்கள். நடுநடுவே ஊருக்கு ஒதுப்புறத்திலிருந்து காட்டு நரிகளின் ஊளைகளும் நாயனங்களுக்கு ஒத்து ஊதும்!

நாதஸ்வர வித்வான் சிவக்கண்ணுப்பிள்ளைக்கு மோகனம் என்று ஒரு பெண் உண்டு. மோகனம் சற்று மொத்தமாக இருப்பாள். மனதில் சூதுவாது ஒன்றுமில்லாததால் வஞ்சனையின்றி வளர்ந்திருந்தாள். மோகனம் எதைக் கண்டாலும் ஓர் அசட்டுச் சிரிப்பு சிரிப்பாள். எதைக்கேட்பினும் மெல்ல இரண்டொரு வார்த்தையில் பதில் சொல்லிவிட்டு ஊமைபோல் இருந்துவிடுவாள், மோகனத்தை எல்லோரும் வீட்டில் 'மக்கு' என்றே சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

சிவக்கண்ணுவின் சகாவான மகுடி மருதக்கண்ணுவுக்கும் மோகனத்தின் வயதில் ஒரு பெண் இருந்தாள். பெயர் சௌந்தரவடிவு. பெயருக்கேற்ப அழகில்மட்டுமல்ல, புத்திசாலித்தனத்திலும் சௌந்தரவடிவு அதிருஷ்டசாலிதான். சௌந்தரவடிவு மகாவாயாடி; சூடிக்கையான பெண். மகுடி மருதக்கண்ணு காலமாவதற்கு முன்னால், தம் மகள் சௌந்தரவடிவுக்கு நாதஸ்வரக்கலையைச் சம்பூர்ணமாகச் சிக்ஷை சொல்லி வைத்திருந்தார். சௌந்தரவடிவு அலாதியான பிர்க்காக்களுடன் ராக சஞ்சாரம் செய்து அபூர்வமாக நாயனம் வாசிப்பாள். நாயனம் சௌந்தரவடிவின் பெயர் நாடெங்கும் அடிபட்டது. பெண் நாயனம் என்றால் அதற்குக் கிடைக்கும் வரவேற்பும் மதிப்பும் அலாதிதானே?

தோடி சிவககண்ணு பிள்ளையும் தம் மகள் மோகனத்துக்கு நாயனம் சொல்லிக் கொடுத்துத் தமக்குப்பின் அவளைப் பிரபலமடையச் செய்யவேண்டுமென்று எவ்வளவோ பிரயாசைப்பட்டார். ஆனால் அது வீணாயிற்று. மோகனத்துக்குக் காற்றை வாயில் அடக்கி நாதஸ்வரத்தை ஊதவே வரவில்லை. கடைசியில் சிவக்கண்ணுபிள்ளை நீண்ட நாட்கள் யோசித்துவிட்டுத் தம் மகளுக்கு நன்றாகத் தவுல் அடிக்கச் சொல்லிக் கொடுத்தார். அவள் உருவத்திற்கும் திறமைக்கும் தவுல் ஒன்றுதான் ஏற்றதாயிருந்தது! மோகனத்தின் கைகளில் நூறு யானைகளின் பலமிருந்ததால் தவுலை நொறுக்கித் தள்ளிவிடுவாள். நாயனம் சௌந்தரவடிவோடு கச்சேரிகளுக்கு மோகனம் தவுல் அடிக்கப்போவது வழக்கம். நாயனம் சௌந்தரவடிவின் பெயரோடு தவுல் மோகனத்தின் பெயரும் ரஸிகர்களிடையே நன்றாக அடி

பட்டுக்கொண்டிருந்தது! சிவக்கண்ணுவுக்கு என்னதான் தம் பெண் தவுலில் தேர்ந்திருந்தாலும் தமக்குப் பின் தம்முடைய நாயனத்தின் பெயரை நாட்டில் பரப்ப மார்க்கமில்லாமல் போய் விட்டதே என்று உள்ளூர வருத்தந்தான்.

மோகனத்துக்கு நாயனம் வாசிக்கவராது என்று நிச்சயித்த பிறகு, சிவக்கண்ணு பிள்ளை, தம் தமக்கை மகன் பொன்னையனை வரவழைத்துத் தமக்குத் தெரிந்த நாதஸ்வர வித்தையையெல் லாம் அவனுக்குக் கற்பித்தார்.

பொன்னையன் சூடிக்கையான பையன். வெகு விரைவில் எந்த வித்தையையும் எளிதில் கிரகிக்கும் சக்தி வாய்ந்தவன். குரு ஸ்தானத்திலிருந்த சிவக்கண்ணு பிள்ளை, நாயன வாசிப் பில் தாம் கையாளும் அபூர்வமான ஸங்கதிகளெல்லாம் பிற் காலத்தில் பொன்னையனின் நாயனத்தில் உருவாகித் தம் பந்தா நிலைத்து நிற்கவேண்டுமென்று பாடுபட்டுக் கற்றுக் கொடுத்ததால், பொன்னையன் குறுகிய காலத்திற்குள் பெரிய வித்வான்களுககுரிய சகல வித்வாம்சங்களையும் பெற்றுவிட் டான். அவனுடைய வாசிப்பில் கர்நாடகப் பாணியும் புதுப் பந்தாக்களும் கலந்திருந்ததால், பெருவாரியான ரஸிகர்களின் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளத் தொடங்கியது.

ஐந்து வருஷங்களுக்குள் தமிழ் நாடெங்கும் நாயனம் பொன்னையனின் பெயர் சங்கீத வட்டாரங்களுக்குள் பிரபல மாக அடிப்பட்டது. ஏகப்பட்ட கச்சேரிகளுக்கும் திருவிழாக் களுக்கும் அவனுடைய நாயனத்துக்கு ஓயாமல் அழைப்பு வந்த வண்ணமாகவே இருந்தன.

ஆனால், பொன்னையன் போக்கே ஒரு விதமானது. அவனுக்கு ஓய்வு ஒழிச்சல் இல்லாமல் கச்சேரிகளுக்குப் போவது பிடிக்கவில்லை. அவன், நாதஸ்வரத்தை ஒரு தொழி லாக்க விரும்பவில்லை; பொழுது போக்காவே கருதினான். அதனால், வடக்கே கலகாபாத் சமஸ்தானத்திலிருந்து அழைப்பு வந்ததும், ஏற்றுக்கொண்டு அந்தச் சமஸ்தானத்துக்கு சமஸ் தான நாதஸ்வர வித்வானாகப் போய்விட்டான். பிறகு மூன்று வருஷங்கள் வரை குளத்துமலைப் பக்கம் திரும்பவில்லை.

குளத்து மலையில் சித்திரைத் திருவிழா வந்தது. திருவிழா பத்து நாட்கள் நடக்கும். அந்தப் பத்து நாட்களும் ஊரே ஏக அமர்க்களமாயிருக்கும். எங்கெங்கிருந்தோ வெல்லாம் நாயனக் காரர்களும், பரதநாட்டியக் கலாமணிகளும், சங்கீத வித்வான் களும் குளத்துமலையில் தங்கள் வித்தையைக் காட்ட வருவார்கள்.

அந்த வருஷம் திருவிழாவுக்கு வரும்படி பொன்னையனுக்குச் சிவக்கண்ணு பிள்ளை கடிதம் எழுதினார். பொன்னையனின் வாசிப்பைக் கேட்க குளத்துமலை ஜனங்கள் விரும்புவதாகவும் அம்மனுக்குக் காப்புக் கட்டும் முதல் நாளன்றே அவன் அவசியம் வரவேண்டுமென்றும் வற்புறுத்தி எழுதியிருந்தார். பொன்னையன் பெரியவரின் வார்த்தையைத் தட்ட முடியாமல் வெகு தொலைவிலுள்ள சமஸ்தானத்திலிருந்து சங்கடப்பட்டுக்கொண்டு குளத்துமலைக்கு வந்து சேர்ந்தான்.

அந்த வருஷம் குளத்துமலைத் திருவிழாவுக்குப் பொன்னையனை வரவழைத்ததில் சிவக்கண்ணு பிள்ளைக்கு இரண்டுவித நோக்கங்கள் இருந்தன. தம் மகள் மோகனத்தைப் பொன்னையனுக்குக் கட்டிக் கொடுப்பதுபற்றி பேசிமுடித்துக் கொள்ள வேண்டும் என்பது அந்த இரண்டு நோக்கங்களில் முக்கியமானது.

பொன்னையன் காப்புக் கட்டுவதற்கு முதல் நாள் சாயந்திரம் நாதஸ்வரம் சகிதமாக ஜில் ஜில் என்று மயிலைக்காளை பூட்டிய வண்டியில் வந்து சிவக்கண்ணு பிள்ளையின் வீட்டு வாசலில் இறங்கினான்.

இறங்கும்போது எதிர் வீட்டில் யாரோ படீர் என்று தெருக் கதவைச் சாத்தும் சப்தம் கேட்டது.

பொன்னையன் திரும்பிப் பார்த்தான், சாயம்போன துணிச் சேலையைத் தரித்திருந்த ஓர் இளம் பெண், தெருக் கதவைச் சாத்திக்கொண்டு குடு குடுவென்று உள்ளே ஓடினாள். அந்தப் பெண் ஏன் பொன்னையனைப் பார்த்ததும் உள்ளே ஓடவேண்டும்? பொன்னையன் ஒன்றும் புரியாமல் ஏதேதோ யோசித்துக் கொண்டு பிள்ளையின் வீட்டினுள்ளே போனான்.

சிவக்கண்ணுவோடு திண்ணையில் உட்கார்ந்துகொண்டிருக்கும்போது அடிக்கடி எதிர்வீட்டு ஜன்னல் பக்கம் ஜாடையாகத் திரும்பிப் பார்த்தான், சந்திரோதயமாகுமா என்றுதான்! ஒரு சமயம் அந்த ஜன்னல் கதவு மெல்லத் திறந்தது. அந்த ஜன்னலில் அவன் நினைத்தபடி சந்திரோதயமாயிற்று!

ஓர் அழகான பெண்ணின் முகம் தெரிந்தது! அந்த முகத்தில் கருவண்டுகள் போல் குறு குறுவென்று இரண்டு பெரிய கண்கள் பொன்னையனை நோக்கி வட்டமிட்டுக் கொண்டிருந்தன. அவள் கூந்தலில் கனகாம்பரம் சூடியிருந்தாள். அது கனகாம்பரமா அல்லது அந்தப் பெண்ணின் முகமா என்று பொன்னையன் ஆராயத் தொடங்கினான். ஆனால்

அதற்குள் ஜன்னலில் கண்ட சந்திரோதயம் திடீரென மறைந்து விட்டது. அந்தப் பெண் ஜன்னல் கதவை மூடிக்கொண்டு உள்ளே போய்விட்டாள்.

அவள் யார்......?

அத்தியாயம் : 2

## ஏன் பள்ளிகொண்டீர், ஐயா?

*ஏன் பள்ளி கொண்டீரையா ஸ்ரீரெங்க நாதரே-நீர்*
*ஏன் பள்ளி கொண்டீரையா? —கீர்த்தனை.*

அன்றிரவு பொன்னையன் தெருத் திண்ணையில் படுத்திருந்தான்.

எதிர் வீட்டில் கண்ட பெண்ணைப் பற்றிய எண்ணம் அவன் மனதில் சுழன்று சுழன்று வந்தன.

அப்போது மோகனம் கையில் பால் டம்ளருடன் அங்கு வந்து ஊமைபோல் நிலைப்படியில் நின்று கொண்டிருந்தாள். பொன்னையன் அவளைப் பார்த்தான்.

"என்ன மோகனமா?" என்று கேட்டான்.

"உம்! அம்மா இந்தப் பாலை உங்களிடம் கொடுக்கச் சொல்லிச்சு" என்று மோகனம் பால் டம்ளரைப் பொன்னையனிடம் நீட்டினாள். பொன்னையன் பாலை வாங்கிக்குடித்துவிட்டு மோகனத்தை ஏற இறங்க வெகுநேரம் உற்றுப்பார்த்தான்.

"மோகனம்! முந்திப் பார்த்ததற்கு இப்போ என்ன அடியோடு இப்படி மாறிப்போயிட்டாய்? முந்திப் பூச்செண்டு மாதிரி இருந்தாய், இப்பத் தவுல் மாதிரி இருக்கிறாயே?"

"ஆமாம்; அம்மாவும் நான் ரொம்ப மாறிப்போயிட்டேன்னு சொல்லுது" என்று மோகனம் அசடு போல் சிரித்தாள்.

"இப்போ நீ எப்படி இருக்கிறாய் தெரியுமா? அசல் திருவாரூர் தேர்தான்!" என்று பொன்னையன் விஷமமாகக் கூறினான். அதற்கும் மோகனம் ஓர் அசட்டுச் சிரிப்புதான் சிரித்தாள்.

"மோகனம், என்னை மாமா எதுக்காக இங்கே வரவழைச்சுது தெரியுமா?"

"ஆரூர் திருவிழாவிலே கச்சேரி செய்ய!"

"அதுக்கு மட்டுமில்லே, உன்னை எனக்குக் கட்டிக் கொடுக்கிறது பற்றிப் பேச்செடுக்கவுந்தான்! ஆமா, உனக்கு என்னைக் கட்டிக்கிறது சம்மதந்தானே?"

அதைக் கேட்டதும் மோகனம் உணர்வற்றவள் போல் நிலையைப் பிடித்துக்கொண்டு பேசாமல் நின்றாள். அவள் கண்களில் நீர்த்துளிகள் நிறைந்தன. கண் நிறைந்த கணவன் எதிர்பாராமல் கிடைக்கும் அதிர்ஷ்டத்தை எண்ணி உள்ளம் உருகுகிறாள் என்று பொன்னையன் நினைத்தான்.

"உன்னை நான் கட்டிக்கிட்டா நான் நாதஸ்வரம் வாசிக்கும் போது நீ தவுல் அடிக்க உதவியாயிருக்கும்!" என்று பொன்னையன் சிரித்தான்.

அப்போது எதிர்வீட்டு ஜன்னலின் கதவு திறந்தது. பிரகாசமான வெளிச்சத்தில் பளபளவென்று பச்சைப் பட்டுப் புடவை கட்டிக்கொண்டு சந்திரோதயம்போல் அந்தப் பெண் நின்றுகொண்டிருந்தாள். அந்தப் பெண்ணைப்பற்றிய விபரங்களைச் சுத்த அசடான மோகனத்திடமிருந்து விசாரித்துத் தெரிந்து கொள்வது சுலபம் என்று பொன்னையன் நினைத்தான்.

"எதிர்வீட்டில் யார் இருக்கிறாங்க?" என்று பொன்னையன் மோகனத்தைக் கேட்டான்.

"நாயனம் செளந்தரவடிவுன்னு கேள்விப்பட்டிருக்கீங்களா? அவ பேருதான் உலகமெல்லாம் அறிஞ்சிருக்கே!"

"ஆமா, கேள்விப்பட்டிருக்கிறேன். அவள் பெரிய ஊத்துக்காரி என்றுதான் சொல்லுறாங்க. பெண் பாடகி, பெண் மேளம் என்றால் ஜனங்களிடம் ஒரு தனி மௌஸ் இருக்கே!"

"அந்த நாயனம் செளந்தரவடிவும் அவள் அம்மாவுந்தான் எதிர்வீட்டில் இருக்கிறாங்க."

"அது காலமான நம்ப மருதக்கண்ணுவின் வீடல்லவா? செளந்தரவடிவுக்கு அந்த வீட்டை வாடகைக்கு விட்டிருக்கா?"

"மருதக்கண்ணு மாமாவின் சாக்ஷாத் மகள்தானே செளந்தரவடிவு! அவள் எதுக்குத் தன் சொந்த வீட்டுக்கு

வாடகை கொடுக்கணும்?' என்று மோகனம் அசட்டுச் சிரிப்பு சிரித்தாள்.

"மருதக்கண்ணு பிள்ளைக்குக் கடைசிவரை கலியாணமே ஆகலே! அவருக்கு எப்படி ஒரு பொண்ணு பிறந்தது?" என்று ஆச்சரியத்தோடு பொன்னையன் கேட்டான்.

"நம்ப மருத மாமா ரொம்ப காலமா திருக்கோகர்ணத்திலே பரத நாட்டியம் சரஸ்வதியை எடுத்து வைச்சிருந்திச்சு. அந்த அம்மாளுக்குப் பொறந்த பொண்ணுதான் எங்க சௌந்தர வடிவு."

"நான் மூணு வருஷத்துக்கு முன்னாலே இங்கே இருந்த போது உங்க சௌந்தரவடிவை எதிர் வீட்டில் பார்த்த தில்லையே!"

"ரொம்ப காலமா என்ன காரணத்தாலோ நம்ப மருத மாமா பரத நாட்டியம் சரஸ்வதியம்மாளையும் சௌந்தரவடிவை யும் திருக்கோகர்ணத்திலேயே ரகசியமா வைச்சிருந்திச்சு. மூணு வருஷத்துக்கு முன்னாலே, நீங்கள் கலகாபாத் சமஸ் தானத்துக்குப் போன மறு மாசம், அவுங்களை பகிரங்கமாகவே கூட்டிவந்து இங்கே தன் வீட்டில் வைச்சுக் கொண்டிச்சு!"

"ஓகோ! சௌந்திரவடிவு நன்றாக நாயனம் வாசிப் பாளா?"

"அதுதான் ஊரறிஞ்சதாச்சே! அவள் மோகனம் வாசிச்சா, இன்னைக்கிப் பூராக் கேட்டுக்கொண்டிருக்கலாம்!" என்றாள் மோகனம்.

"அப்போ அவள் வாசிப்பு பிரமாதமின்னு சொல்லு. உனக்கு அவள் சினேகிதமோ?"

"உயிருக்குயிரான சினேகிதம்! அவள் நாதஸ்வரம் வாசிக்கப் போற இடத்துக்கெல்லாம் நான்தான் அவளுக்குத் தவுல் அடிக்கப் போவேன்!"

"ஆனா சௌந்தரவடிவு பார்க்கிறதுக்குப் பக்கரையாக இருப்பாள் போலிருக்கு! நீயே மாநிறம். அந்த சௌந்தர வடிவு உன்னைவிடக் கறுப்பாய் இருக்கிறாள்!"

"இல்லையே! என்னைவிட அவள் எவ்வளவோ உசத்தி! செக்கச் செவேலென்று செவந்திப்பூ மாதிரி இருப்பாள். சிகப் புப் பட்டுச் சேலையைக் கட்டிக்கொண்டு அவள் அலங்காரமாய் இருக்கும்போது பார்த்தால், எங்க சௌந்தரவடிவை இன்னைக் கிப் பூரா பார்த்துக்கொண்டிருக்கத் தோணும்."

"ஆனு கொஞ்சம் முரட்டுச் சுபாவம் உள்ளவள் போலி ருக்கு. நான் மாட்டு வண்டியைவிட்டு இறங்கிற சமயம் பார்த் துப் பேயைக் கண்டவள்போல் படீர்னு தெருக்கதவைச் சாத்தி ஞள் !" என்ருன் பொன்னையன்.

"அவள் எதிரில் இப்படிச் சொல்லிவிடாதீங்க ! அவள் ரொம்ப துடுக்குக்காரி. லேசில் உங்களை விடமாட்டாள்."

இவர்கள் இவ்வாறு பேசிக்கொண்டிருக்கும்போது எதிர் வீட்டு ஜன்னல் சாத்தப்பட்டது. உள் விளக்கும் அணைந்தது.

"சரி நேரமாச்சு. நான் போகிறேன்" என்று மோகனம் பால் கொணடுவந்த டம்ளரை எடுத்துக்கொண்டு வீட்டுக்குள் போய் கதவைச் சாத்தித் தாழ்ப்பாள் போட்டுக் கொண்டாள்.

பொன்னையன் ஜமுக்காளத்தை விரித்துக்கொண்டு படுத் தான். ரயிலில் நீண்ட தூரம் வந்ததால், அவன் உடலெங்கும் அசதி தட்டியது. ஆனல் சிவக்கண்ணு பிள்ளையின் வீட்டில் உபசாரத்தோடு அளவுமீறி சாப்பிட்டதால், அவன் உடலெங் கும் கனம் இருந்து அவனைத் தூங்கவிடாமல் செய்தது. அதோடு குளத்து மலையின் மகா மகா வித்வான்களான கொசுக்கள் ராக ஆலாபனையோடு கூட்டமாய் வந்து பொன்ன யனை கடிக்கத் தொடங்கின. பொன்னையன் அங்கவஸ்திரத்தை விரித்துப் போர்த்திக்கொண்டான். அப்படியும் மகா வித்வான் கள் அவனைத் தூங்கவிடவில்லை. மேலும், அவனுடைய எதிர் காலத்தைப் பற்றிய சிந்தனைகள் அவன் மூளையைக் குழப்பிக் கொண்டிருந்தன. அப்படியும் இப்படியுமாகப் புரண்டு படுத் துக் கடைசியாக மூன்றரை மணிக்குத்தான் கண்ணயர்ந்தான். ஆனல், அவன் கண்ணை மூடி அரை மணிகூட ஆகியிராது. அதற்குள் எதிர் வீட்டிலிருந்து 'பீபீபீ' என்று வந்த நாதஸ் வரத்தின் சப்தம் அவன் காதைக் குடைந்தது. பொன்னையன் திடுக்கிட்டு எழுந்தான். 'நன்ருக அசந்து தூங்கும்போது இதேதடா சப்தம்!' என்று அவனுக்கு எரிச்சலாயிருந்தது. தூரத்திலிருநது நரிகளும், ஊளையிடத் தொடங்கிவிட்டன. இனித் தூங்க முடியாது! பொன்னையனுக்கு நெற்றிக் கண் ணிருந்தால் குளத்துமலைப் பனங் காட்டையும் எதிர் வீட்டையும் பஸ்மீகரம் செய்துவிடலாம் போலிருந்தது. மறுபடி படுககை யில் படுத்து அங்கவஸ்திரத்தை, கால்வரை நன்ருக இழுத்துப் போர்த்திக் கொண்டான். அப்படியும் தூக்கம் வரவில்லை. எதிர் வீட்டிலிருந்து வந்த நாதஸ்வரத்தின் சப்தம் அவனைத் தூங்கவிட்டால் தானே ?

நாதஸ்வரத்திலிருந்து இனிமையான பாட்டு வந்தாலும் அதை ரஸித்துக்கொண்டே தூங்கலாம். ஆனால் எதிர் வீட்டில் அதிகாலையில் எழுந்து சாதகம் செய்யும் சௌந்தரவடிவின் நாதஸ்வரங்கள் தூக்கக் கலக்கத்தில் பொன்னையனுக்கு எப்படி இனிமையாக இருக்கும்? சௌந்தரவடிவு ஒரு வழியாக சுர இழுப்புகளை முடித்துக்கொண்டு சில்லரை உருப்படிகளைப் பாடத் தொடங்கினாள். முதல் பாட்டு 'மேரே புல்புல்' என்ற ஹிந்தி ட்யூன்! இரண்டாவது பாட்டு ரத்தனில் வரும் 'பியாகர் ஆஜா ஆஜா' என்று கேட்டுக் கேட்டுக் காது புளித்துப்போன ஹிந்திப் பாட்டு. 'சில்லரை உருப்படிகள்தான் பாடுகிறாளே, இந்த சௌந்தரவடிவுக்கு ஒரு தமிழ் உருப்படி கூடத் தெரியாதுபோலிருக்கு!' என்று பொன்னையன் ஆத்திரத்தோடு ஆத்திரமாய் நினைத்தான். அடுத்த கணம் சௌந்தரவடிவின் நாயனத்திலிருந்து ஒரு தமிழ் உருப்படி கிளம்பி வந்தது. 'உள்ளுக்குள்ளே நீங்க பலே ஆளு!' என்ற பாட்டுதான் அது. பிரபலமான ஒரு கர்நாடக நாதஸ்வர வித்வான் காதில் அந்தச் சினிமாப் பாட்டு எவ்வளவு நாராசமாய் பாயும் என்று சௌந்தரவடிவு கொஞ்சங்கூட யோசிக்கவில்லை!

எதிர்வீட்டுத் திண்ணையில் பொன்னையன் படுத்திருக்கிறானென்று சௌந்தரவடிவுக்குத் தெரியும்! அப்போது நாயனம் வாசிப்பதில் தமிழ் நாடெங்கும் பிரபல்யமாய் இருந்தவர்கள் இருவர்தான். நாயனம் பொன்னையனும் நாயனம் சௌந்தரவடிவுந்தான்! தனக்குப் போட்டியாக விளங்கும் பொன்னையனைத் தூங்கவிடாமல் சித்திரவதை செய்ய வேண்டுமென்று எண்ணம் சௌந்தரவடிவுக்கு உண்டாயிற்றோ என்னவோ! மட்டரகமான சினிமாப் பாட்டுகளையே பாடி கர்நாடக சங்கீத வித்வானின பொன்னையனின் காதைக் குடைந்து விடுவதென்று தீர்மானித்தாள் சௌந்தரவடிவு!

தமிழ் நாட்டுச் சினிமாக்களில் வரும் காமிக் ஜோடிகளின் கோமாளித்தனமான பாட்டுகளையெல்லாம் வாசித்துத் தீர்த்த பிறகு, 'டீயோ டேன்னா டேயன்னா டுனா டௌன்னா ட்டன்னா' என்ற பாட்டை ஊத ஆரம்பித்தாள். பொன்னையனால் பொறுக்க முடியவில்லை! அவன் காதுகளில் நூறு அண்டா ஈயத்தைக் காய்ச்சி ஊற்றுவது போலிருந்தது.

சௌந்தரவடிவு அதோடு விடவில்லை. 'என்பேரு பிளேட்டு. எனக்கு நடுவிலே ஒரு ஓட்டை' என்ற பாட்டையும் நாயனத்தில் ஊதத் தொடங்கினாள். பொன்னையனின் ஆத்திரம் எல்லையை மீறிவிட்டது. அந்தக் கச்சடாவான

பாட்டை வாசிப்பவள் கன்னத்தில் அறைய வேண்டும்போல் தோன்றியது பொன்னையனுக்கு! சௌந்தரவடிவின் கையி லிருக்கும் நாதஸ்வரத்தைப் பிடுங்கி முறித்துவிட்டுதான் மறு வேலை பார்ப்பது என்ற முடிவோடு பொன்னையன் அங்க வஸ்திரத்தைத் தூக்கித் தோள்மீது போட்டுக்கொண்டு விறு விறு வென்று போய் சௌந்தரவடிவின் தெருவாசல் கதவைப் பட பட வென்று தட்டினன்.

அப்போது, "தெருவில் வாராண்டி, வேலன் தேரில் வாராண்டி" என்ற பாட்டு பொன்னையனின் காதில் வந்து விழுந்தது.

பொன்னையனின் சர்வ நாடியும் ஒடுங்கியது!

இங்கே இந்த சமயத்தில் 'வேலன் யார்?' என்று யோசித்துக் கொண்டே சௌந்தரவடிவின் வீட்டுக் கதவை தட்டினன்.

## அத்தியாயம்: 3

## விழித்திருந்த கண்கள்!

*வேலவரே, உமைத்தேடி ஒரு மடந்தை*
*விடியுமளவும் காத்திருக்கிற வகை யென்ன?*
*—பதம்.*

தெருவாசல் கதவைப் பொன்னையன் படபட வென்று தட்டும் சப்தம் சௌந்தரவடிவின் காதில் விழுந்தது. அவள் நாதஸ்வரத்தைக் கீழே வைத்துவிட்டு, தன் முகத்தை நிலைக் கண்ணுடியில் ஒரு தடவை பார்த்துக்கொண்டு, வேகமாய் போய் கதவருகில் நின்றுகொண்டு "யாரது?" என்று கேட்டாள்.

"கதவைத் திறங்கள்!"

"நடு ராத்திரியில் யார் இப்படி வீட்டுக் கதவைப் போட்டு இடிக்கிறது?"

"நான்தான்!" என்ருன் பொன்னையன்.

"நான்தான் என்ருல் ஊர் பேர் இல்லையா?" என்று கேட்டுக்கொண்டே சௌந்தரவடிவு தெருக் கதவைத் திறந் தாள். 'இதேதடா பெரிய வம்பாயிருக்கிறது? இவள் பெரிய

துடுக்குக்காரியாயிருப்பாள் போலிருக்கே? இவளுடைய நாதஸ்வரத்தை எப்படிப் பறித்து முறிக்க முடியு'மென்று யோசித்துக்கொண்டே பொன்னையன் எதிரே ஏறிட்டுப் பார்த்தான்.

சிவந்த பூர்ணச் சந்திரன்போல் செளந்தரவடிவு சிவந்த பட்டுச் சேலை உடுத்திக் கொண்டு நின்றுகொண்டிருந்தாள். மங்கலான விளக்கின் வெளிச்சம் லேசாக அவள் முகத்தில் விழுந்துகொண்டிருந்தது. பொதுவாகவே, மங்கலான வெளிச்சத்தில் பெண்கள் மிகவும் அழகாயிருப்பார்கள். அதுவும் சர்வ அலங்காரங்களுடன் விளங்கும் செளந்தரவடிவோ கோஹினூர் வைரம் மாதிரி மின்னிக் கொண்டிருந்தாள். அந்த மின்னலின் கவர்ச்சியில் பொன்னையன் வந்த காரியத்தை மறந்துவிட்டான்.

"ஓ, நீங்களா?" என்று கேட்டாள் செளந்தரவடிவு.

"ஆமாம், நான்தான்! சிவக்கண்ணு பிள்ளையின் மருமகப் பிள்ளை. பொன்னையன்னு கேள்விப் பட்டிருப்பீர்களே? ஆருந் திருவிழாவிலே நாதஸ்வரம் வாசிக்கிறதுக்காக வந்திருக்கிறேன்!"

"நானும்தான் ஆருந் திருவிழாவிலே நாதஸ்வரம் வாசிக்கப் போறேன்!" என்று செளந்தரவடிவு வெடுக்கென குறும்புப் புன்னகையுடன் சொன்னாள்.

"ஐயோ!" என்று முனுகினான் பொன்னையன்,

"இன்னேரத்திலே இங்கே எதுக்காக வந்தீங்க?" என்று செளந்தரவடிவு சற்று கோபமாகவே கேட்டாள்.

எதுக்காக வந்தேன் என்று எப்படி சொல்லுவது? இவ்வளவு அழகாயிருக்கும் ஒரு பெண்ணிடம் 'உன் நாயனம் நன்றாக இல்லை, தூக்கம் கெடுகிறது, வாசிப்பதை நிறுத்து!' என்று சொல்ல முடியுமா? பொன்னையனுக்கு அப்படிச் சொல்ல மனசு வரவில்லை.

"சும்மா, உங்களிடம்தான் வந்தேன். வந்து...வேறொன்றுமில்லை......" என்று இழுத்தான்.

"இன்னேரத்தில் உங்களுக்கு என்னிடம் என்ன வேலை? வழி தவறி வந்திருக்கீங்க போலிருக்கு. இது மாடத் தெருவில்லே!" என்று முகத்தைக் கடுமையாக வைத்துக்கொண்டு கூறினாள் செளந்தரவடிவு. பொன்னையனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. குற்றமே செய்யாதவன்மீது வேண்டுமென்றே நூதன்மான குற்றத்தைச் சுமத்தினால் எப்படியிருக்கும்?

"நீங்கள் நாதஸ்வரம் வாசிப்பதை நிறுத்துங்கள் என்று சொல்ல வந்தேன்!" என்றான் பொன்னையன் துணிந்து.

"நான் வாசித்தால் உங்களுக்கென்ன?"

"என்னால் தூங்க முடியவில்லை!"

"அட பாவமே, இந்தத் தெருவில் விடிய நாலு மணியானால் யாருமே தூங்க முடியாது! கொஞ்ச நேரம் போனால் இந்த தெருவில் உள்ள எல்லாரும் ஊதத தொடங்கி விடுவார்கள். உங்கள் வீட்டில்கூட கொஞ்ச நேரம் போனால் மோகனம் எழுந்து டொம் டொம் என்று தவுல் அடிக்க ஆரம்பித்து விடுவாள். இனிமே நீங்க தூங்கவே முடியாது!"

"அதற்காக இல்லை! நானும் ஒரு நாதஸ்வர வித்வான் தான்! நீங்கள் வாசிக்கும் இந்த சினிமாப் பாட்டுகளை என்னால் சகிக்க முடியவில்லை."

"நான் உங்களுக்காக வாசிக்கவில்லை. ஊர் ஜனங்களுக்காக வாசிக்கிறேன். அவர்களுக்கு இது மாதிரியான சினிமாப் பாட்டுகள்தான் பிடிக்கிறது. நான் என்ன செய்வது?"

"ஓகோ, அதுதான் பார்த்தேன், இரண்டு வருஷங்களுக்குள் எப்படி ஒரு பெண்பிள்ளை ஜனங்களிடம் புகழ் வாங்க முடிந்தது என்று?"

"சரி, உங்களோடு கொஞ்ச நேரம் சர்ச்சை செய்துதான் உங்கள் அபிப்பிராயத்தை மாற்றவேண்டும். உள்ளே வாருங்கள்."

"ஏன்?"

"இந்த நடுச் சாமத்தில் நாமிருவரும் தெருவாசல் படியில் நின்று கொண்டிருப்பதை யாரும் பார்த்தால் வீண் சந்தேகம் உண்டாகும். இந்த ஊரே ஒரு மாதிரி. ஒரு ஆணும் பெண்ணும் தனியாகப் பேசிக்கொண்டிருப்பதைப் பார்த்தாலே இந்த ஊர் ஜனங்கள் அதற்குக் கண்ணு காது மூக்கெல்லாம் வைத்துக் கதைகட்டி விடுவார்கள்!" என்றாள் சௌந்தரவடிவு.

அவள் பின்னால் பொன்னையன் மௌனமாக வீட்டுக்குள் நுழைந்தான். சௌந்தரவடிவு தெருக்கதவை சாத்தி உள்ளே தாழ்ப்பாள் போட்டுவிட்டு, பொன்னையனைத் தான் நாயனம் வாசிக்கும் அறைக்குள் அழைத்துக்கொண்டு போனாள்.

"இப்படிப் பாயில் உட்காருங்கள். வெத்திலை போடுகிறீர்களா?" என்று சொல்லிக்கொண்டே சௌந்தரவடிவு வெத்திலைத் தட்டைப் பொன்னையன் பக்கம் நீட்டினாள். அப்போது

அவளது சிவந்த கைகளில் குலுங்கிய கண்ணாடி வளையல்களின் ஓசை பொன்னையன் மனதில் வாஞ்சை மயமான மோகனக் கனவுகளை எழுப்பியது. அப்போது உலகத்திலே உன்னதமான இசை எது என்று அவனைக் கேட்டிருந்தால், பெண்கள் கையில் குலுங்கும் வளையல்களின் ஓசைதான் என்று சொல்லி யிருப்பான்.

"ஏன் வெத்திலை போட யோசிக்கிறீர்கள்? வெத்திலையில் ஒண்ணும் நான் மயக்க மருந்து வைச்சிருக்க மாட்டேன்!" என்று சௌந்தரவடிவு குறும்பாகச் சிரித்தாள். அந்தத் துடுக்கான பேச்சும் கபடமற்ற சிரிப்பும் பொன்னையனின் நெஞ்சை அள்ளின.

"வெத்திலையில் பெண்களாகிய நீங்கள் மயக்க மருந்து வைக்கவேண்டிய அவசியமில்லை. உங்கள் கைகளால் மடித்துக் கொடுத்தாலே போதும். அது நூறு பலம் மயக்க மருந்து செய்கிற வேலையைச் செய்துவிடும்!" என்று சிரித்தான்.

சௌந்தரவடிவு ஏதோ கொஞ்ச நேரம் யோசித்தாள். பிறகு, "கொஞ்சம் இருங்கள். இதோ வருகிறேன். அதற்குள் வெத்திலை போட்டுக்கொண்டு விடாதீர்கள்" என்று சொல்லி விட்டு சமையலறையை நோக்கி ஓடினாள். சிறிது நாழிகைக்குள் ஒரு கப் சூடான காப்பியுடன் திரும்பி வந்து பொன்னையனிடம் நீட்டினாள்.

"இதென்ன?"

"ஒரு கப் ஸ்பெஷல் காப்பி! விலை அணா இரண்டரை. உங்களுக்குத்தான் காப்பி என்றால் ரொம்பப் பிடிக்குமே? மோகனம் சொன்னாள்!"

"நீங்களும் காப்பி குடிக்க வில்லையா?" என்று பொன்னையன் கேட்டான்.

"இல்லை, நான் காப்பியைத் தொடமாட்டேன். எங்க அம்மாவும் சாப்பிடாது!" என்றாள் சௌந்தரவடிவு.

"பின்னே இங்கே யார் காப்பி சாப்பிடறது?"

"ஒருத்தருமில்லே!"

"பின்னே இங்கே எப்படி காப்பிப் பவுடர் இருந்தது?"

"நேற்று ராத்திரி வாங்கிவந்து வைத்தேன்."

பொன்னையன் காப்பி சாப்பிடுவான் என்று மோகனத்தினிடமிருந்து தெரிந்து கொண்ட பிறகு தான் அவள் நேற்று இரவே காப்பி பவுடர் வாங்கிவந்து வைத்திருக்கிறாள். தன்னிடம் அவ

ளுக்கு என்ன அப்படி அக்கரை என்று பொன்னையன் யோசித்தான்.

"நான் காப்பி சாப்பிடுவேன் என்று உங்களுக்கு எப்படித் தெரியும் ?" என்று பொன்னையன் கேட்டான்.

"மோகனம் சொன்னாள், நீங்கள் ஒரு நாளைக்கு நாலஞ்சு தடவை காப்பி சாப்பிடுவீர்களாம் !"

"நல்ல வேளை ! நான் எத்தனை தடவை பல் விளக்குவேன் ? எத்தனை தடவை தலை சீவிக் கொள்வேன் என்று சொல்லாமல் போனாளே ?"

"அதுவுந்தான் சொனனாள். நீங்கள் ஒரு தடவை பல் விளக்குவீர்களாம் ! நூறு தடவை தலை சீவிக்கொள்வீர்களாம் !" என்று சௌந்தரவடிவு சிரித்தாள். அந்தச் சிரிப்பு மடை திறந்த வெள்ளம்போல், சலசல வென்று பொன்னையனின் மனசில் பாய்ந்து இன்பக் குமிழிகள் கிளப்பின.

"நான் சினிமாப் பாட்டுகள் வாசிக்கிறதைப் பத்தி உங்களுக்கு தப்பான அபிப்பிராயம் இருக்கு. பிரபலமடைய விரும்பும் நாதஸ்வர வித்வான்கள் கர்நாடக சங்கீதம் வாசிப்பதோடு கன்னா பின்னான்னு சினிமாப் பாட்டுகளும் வாசிக்கத்தான் வேண்டியிருக்கு. உதாரணமாக, ராத்திரி புறப்படும் சுவாமி, கோயில் ஊரணியைச் சுற்றிவந்து சேர்க்கை சேரப் பொழுது விடிந்துவிடும். அந்தக் கடைசி சாமத்தில் சுவாமியின் வாகனத்தைத் தூக்கும் கூலி ஆட்களும் தீவட்டிகாரர்களும் மட்டுந்தான் இருப்பார்கள். அந்தச் சமயத்தில் சபை ரசிக்க வேண்டுமானால் இது மாதிரியான கெக்கறே பிக்கறே என்ற சினிமாப் பாட்டுகள் தானே வாசிக்க வேண்டும் ? என்ன நான் சொல்வது ?" என்று கேட்டாள் சௌந்திரவடிவு. பொன்னையன் மூக்கின் மேல் விரலை வைத்தான். ஜனங்களுடைய மனப் போக்குகளை ஆராய்ந்து தன் கலைஞானத்தைப் பரப்புகிறாளே என்று ஆச்சரியப்பட்டான்.

"எங்கே முத்துத்தாண்டவர் கீர்த்தனை ஒன்று பாடுங்கள், கேட்கலாம் ! உங்களைப் பற்றி கேள்விப் பட்டிருக்கிறேனேயொழிய உங்கள் வாசிப்பை நான் அனுபவித்ததில்லை !" என்றான் பொன்னையன்.

சௌந்திரவடிவு நாயனத்தை எடுத்து முத்துத் தாண்டவரின் கீர்த்தனையை வாசித்தாள். அந்த ஒரே பாட்டில் தன் சுர ஞானம், ராக சஞ்சாரம், சம்பூர்ணமான சங்கீத ஞானம் சகல வற்றையும் காட்டி விட்டாள். அவளுடைய பிர்க்கா ஒவ்

வொன்றும் வான வெளியில் நூற்றுக் கணக்கான நட்சத்தி ரங்கள் சிதறி உதிர்வது போலிருந்தன. சங்கீதம் என்றாலே கல்லும் உருகிவிடும். இயற்கையிலே சங்கீதப் பித்துள்ள பொன்னையன் உருகியதில் ஆச்சரியமில்லை. அதுவும் அழகான ஒரு பெண் அலாதியான பாணியோடு நாயனம் வாசிக்கிறு ளென்றால் கேட்கவா வேண்டும்? பொன்னையன் இசைக் கடலில் மூழ்கி பொருள் புரியாத ஓர் இன்ப உலகில் மிதந்து கொண்டிருந்தான். சௌந்திரவடிவு வாசித்த பாணியும் பந் தாவும் பொன்னையனுக்கு அவள் மீது அளவற்ற மதிப்பையும் அலாதியான வாஞ்சையையும் உண்டாக்கின.

பொன்னையன் சௌந்திரவடிவை ஏறிட்டுப் பார்த்தான். அவன் பார்வையில் ஒரு புதிய ஒளி பிரகாசித்தது.

பொன்னையன் அவளை உற்று நோக்கினான். மஞ்சள் திடல் போன்ற முகம், மஞ்சள் விரட்டுக் காலைகள் போன்ற பெண் மையின் பூரிப்புகள! பொன்னையனின் உள்ளத்திலிருந்த யௌவனம் என்னும் பால் குடம் பொங்கியது!

அவளுடைய வெத்திலைக் காவி படிந்த அந்தச் சிவந்த உதடு! அந்தச் சிவந்த உதட்டிலிருந்து நூற்றுக் கணக்கான ரோஜா மொட்டுக்கள் பறிக்க வேண்டும் போலிருந்தது!

பொன்னையன் சௌந்திரவடிவின் பாட்டைக் கேட்டான். கிறுகிறுத்துப் போனான். அவள் அழகை உற்றுப் பார்த்தான். மெய் மறந்து போனான்......

சௌந்திரவடிவு நாயனத்தைத் தொட்டு வாசிக்க ஆரம் பித்த நாளிலிருந்து பொன்னையனைப்பற்றி எவ்வளவோ கேள் விப் பட்டிருந்தாள். அவனுடைய நாதஸ்வர வாசிப்புப் பதிவாகி யிருந்த ஒரு கிராமபோன் ரிகார்ட்டைக் கேட்டது முதல், அவ ளுக்கு அவளையறியாமலே பொன்னையன் மீது ஒரு விதமான மானசீகக் காதல் உண்டாகி யிருந்தது. இனம் விளங்கவில்லை. எவேனா அவள் அகம் தொட்டு விட்டான்! அன்று மாலை பொன் னையனை வண்டியை விட்டு இறங்கும் சமயம் பார்த்த போது, தன் மானசீகக் காதலன் இவ்வளவு அழகா யிருப்பானென்று அவள் சிறிதும் எதிர்பார்க்க வில்லை. இத்தனை நாளாய் தன் நித் திரையில் வந்து வந்து இன்ப சுகம் தந்துபோன மாயக் கள்வனை, எப்படியும் தன மணவாளனாக அடைந்துவிட வேண்டுமென்று தீர்மானித்தாள்.

“உங்கள் வாசிப்பை நான் இதுவரை கேட்டதில்லை, ரொம்பப் பிரமாதமாயிருக்கிறது. மருதக்கண்ணு பிள்ளையின் பந்தா அப்படியே என் கண் முன் வந்து நிற்கிறது. எங்கே

இன்னும் இரண்டொரு பாட்டுகள் வாசியுங்கள் ! காது குளிரக் கேட்கலாம் !" என்றான் பொன்னையன்.

சௌந்திரவடிவு பொன்னையனைக் கடைக் கண்ணால் பார்த்தாள். ஆசாமி மதுக் கிண்ணத்தில் சிறகறுந்த வண்டு போலாகி விட்டான் என்று அறிந்து கொண்டாள். இனிக் கவலையில்லை!

சங்கீதத்துக்கு இரண்டு யௌவன உள்ளங்களை ஒன்றாக ஒட்டும் சோந்தின் சக்தி இருக்கிறதென்பதும் அவளுக்குத் தெரிந்து விட்டது. மெள்ள, "முருகன் என்றதுமே ஒரு மயக்கம் தோன்றுதம்மா !" என்ற பாட்டை வாசித்தாள். அந்தப் பாட்டின் மூலம் தன் இதயத்தின் தாபங்களை யெல்லாம் விவரித்தாள்.

பிறகு, "சிந்தையறிந்து வாடி, செந்தூர் வேலனிடம்" என்ற பாட்டை வாசித்தாள். சினிமாவில் சக்கையாக அடிபட்டுப் புளித்துப்போன பாட்டுத்தான் அது. ஆனாலும், அந்த இருட்டு நேரத்தில், இரண்டு உள்ளங்கள் ஒருவர் சிந்தையை ஒருவர் அறியத் துடிக்கும் சமயத்தில், அந்தப் பாட்டு இருவர் சிந்தைகளையுமே ஓர் இன்ப உலகத்துக்குச் சுருட்டிக் கொண்டு போய் விட்டது.

அந்தப் பாட்டில், "கன்னி வயதில் என்னை மாலையிட்டானே !" என்ற இரண்டு அடியை இரண்டு தடவை அழுத்தி வாசித்தாள். அப்போது பொன்னையனுக்கு உடனே தோட்டத்துக்குப் போய் பூக்களைப் பறித்து வந்து பூமாலையாகக் கட்டி சௌந்தரவடிவின் கழுத்தில் போடவேண்டும் போலிருந்தது.

'சிந்தையறிந்துவாடி' முடிந்ததும் 'தாயே யசோதா' என்ற பாட்டை எடுத்தாள். அது பொன்னையனுக்கு மிகவும் பிடித்தமான பாட்டு. 'அதில் பாலனென்று தாவி அணைத்தேன், மாலையிட்டவன் போல் வாயில் முத்தமிட்டாண்டி !' என்ற அடியை நாலைந்து முறை திருப்பித் திருப்பி வாசித்தாள். அந்த இரண்டு அடியும், இருவர் கண் முன்னும் கிருதாயுகத்தைக் கொண்டு வந்து நிறுத்தியது. அந்த யுகத்தில் பொன்னையன் அந்தப் பாலனாகவும் சௌந்திரவடிவு யசோதாவிடம் முறையிடும் கோபிகாஸ்திரீயாகவும், அந்தப் பாலன் முத்தமிட்ட வாய் சௌந்திரவடிவின் சிவந்த உதடாகவும் தோன்றியது!

கடைசியாக பாரதியாரின் 'தீராத விளையாட்டுப் பிள்ளை' என்ற பாட்டை வாசித்தாள். 'தின்னப் பழங் கொண்டு வருவான், பாதி தின்கின்ற போதே, அதை எச்சிற்படுத்திக் கடித்தே கொடுப்பான் !' என்ற அடியை வாசிக்கும் போது சௌந்திர

வடிவுக்குப் பொன்னையன் வெத்திலையை மடித்து அதை எச்சிற் படுத்திக் கடித்தே கொடுக்க மாட்டானா என்று தோன்றியது. பொன்னையனும் அந்தப் பாட்டில் சொக்கிப் போனான்.

இசையிலே பிறந்து இசையிலே வளர்ந்த அவர்களுடைய உணர்ச்சி வெள்ளங்கள் மடை திறந்து பாய்ந்தன.

உலகமே அயர்ந்து உறங்கும் இருட்டு நேரம். தனிமை. சங்கீதமயமான சூழ்நிலை. பல வருஷங்களாக ஏங்கிக் கிடந்த ஒரு பெண்ணுள்ளமும், நாத வெள்ளத்தில் பரவசமாகி யிருக்கும் ஓர் ஆண் உள்ளமும் இன்னது செய்வதென்று புரி யாமல் தத்தளித்துக் கொண்டிருந்தன. காலக் குதிரை கன வேகமாய் பறந்து கொண்டிருந்தது.

"சௌந்தரவடிவு!" என்று கூப்பிட்டான் பொன்னையன் கரகரத்த குரலில். அந்தக் குரலில் தொனித்த தாபமும் போதையும் சௌந்தரவடிவை செயலற்றவளாக்கி விட்டது. பேசச் சக்தியற்று ஊமை போலிருந்தாள்.

பொன்னையன் அவள் கையிலிருந்த நாதஸ்வரத்தை வாங்கி கீழே வைத்துவிட்டு, அளவற்ற வாஞ்சையோடு சௌந்தர வடிவின் முகத்தை தன் இரு கைகளாலும் ஏந்தி நிமிர்த்தினான்.

அப்போது தெரு வாசல் கதவை யாரோ படபடவென்று தட்டும் சப்தம் கேட்டது.

## அத்தியாயம் : 4

## பெண்ணை நம்பாதே!

"கைப்பிடி நாயகன் தூங்கையிலே அவன் கையை எடுத்து
அப்புறந்தன்னில் அசையாமல் முன்வைத்து அயல்வளவில்
ஒப்புடன் சென்று துயில்நீத்துப் பின் வந்து உறங்குபவளை
எப்படி நான் நம்புவேன், இறைவா கச்சி ஏகம்பனே?"

—பட்டினத்தார்.

---

கதவைத் தட்டியது யார்?

சௌந்தரவடிவும் பொன்னையனும் பரபரப்புடன் எழுந்து சென்று தெருவாசல் கதவைத் திறந்தார்கள். அங்கே வாசத்

படியில் முகத்தைச் சுளித்துக்கொண்டு மோகனம் நின்று கொண்டிருந்தாள்! பொன்னையனுக்குத் தூக்கிவாரிப்போட்டது. பூஜை வேளையில் கரடி நுழைந்தது மாதிரி மோகனம் அங்கே ஏன் வந்தாள்? இன்னும் ஒரு கணம் தாமதித்து வந்திருக்கக் கூடாதா? அப்போது அபூர்வமான இசைச் சுழல்களை எழுப்பும் சௌந்தரவடிவின் வெத்திலைக் காவி படிந்த உதடு எவ்வளவு மிருதுவானது என்று அறிந்திருக் கலாமே? அபூர்வமான நாயனம் வாசித்துக்கொண்டிருக்கும் போது தவுல்காரனிடமிருந்து ஓர் அபஸ்வரம் விழுவது போலிருந்தது, பொன்னையனுக்கு மோகனம் அந்த இன்ப வேளையில் வந்தது.

மோகனம் அவ்விளங்காதலர்கள் இருவரையும் ஓரக் கண்ணால் பார்த்துக் குறும்பாகச் சிரித்துக்கொண்டே, "அடடா! என்ன இது? மதுரை மீனாக்ஷியம்மன் கோயிலிலே இருக்கிற ரதி மன்மதன் கற்சிலைகள் மாதிரி திகைச்சு நிற்கிறீங்க? நான் மக்கு! சந்தர்ப்பம் தெரியாமல் கதவைத் தட்டிவிட்டேன்!" என்றாள். பொன்னையனுக்கு வாய்திறந்து பேச வரவில்லை. சௌந்தரவடிவு தலை குனிந்துகொண்டு நின்றாள்.

"சௌந்தரவடிவு! எனக்குத் தாலி கட்டவந்திருக்கிற எங்க அத்தானை என்னமோ சொக்குப்பொடிப்போட்டு மயக்கி விட்டாயே? அந்தச் சொக்குப்பொடியில் எனக்குக் கொஞ்சம் கொடு, தேவையாயிருக்கிறது!" என்றாள் மேலும் மோகனம் சிரித்துக்கொண்டே.

பொன்னையனால் பொறுக்க முடியவில்லை. சௌந்தர வடிவின் மீது தான் காதல் கொண்டிருப்பது மோகனத்துக்கே தெரிந்துவிட்டதே, என்ன செய்வது என்று பயந்தவாறே மோகனத்தின் வாயை அடக்க முயன்றான்.

"உஷ், மோகனம், உளராதே! இந்த நடுச்சாமத்திலே இங்கே எதுக்காக வந்தே?" என்று கேட்டான் பொன்னையன்.

"இது நடுச்சாமமில்லை, பொழுது விடியப்போவுது! காதலர்கள் கூடினால் ஒரு யுகம் ஒரு நிமிஷமாகத் தோணும் போலிருக்கு!" என்று மோகனம் சௌந்தரவடிவுக்கு மட்டும் தெரியும்படி மெல்லச் சிரித்தாள்.

"உஷ்! மோகனம்! என்ன இது, காதல் கீதல்னு உளறிக் கிட்டு? என்னடா ஊரெல்லாம் புகழராங்களேன்னு, வந்து சௌந்தரவடிவின் வாசிப்பைக் கொஞ்சநேரம் அனுபவித்தேன். அவ்வளவுதான்!" என்று முழுப் பூசனிக்காயையும் சோற்றில் வைத்து மறைக்கப் பார்த்தான் பொன்னையன்.

"எதை அனுபவிச்சா, எனக்கென்ன ? மாமா உங்களைக் கூப்பிடுது. அதுக்காகத்தான் வந்து கதவைத் தட்டினேன்," என்றாள் மோகனம்.

"மாமா, எங்கே?" என்று கேட்டான் பொன்னையன் கலவரமடைந்த குரலில். "அதோ தெருத் திண்ணையின்மீது உட்கார்ந்துகிட்டு பல் விளக்கிட்டு இருக்கு!" என்று மோகனம் சுட்டிக்காட்டினாள். எதிரே தெருத் திண்ணையின்மீது உட்கார்ந்துகொண்டு தோடி சிவக்கண்ணு பிள்ளை பல் விளக்கிக் கொண்டிருப்பது அந்த மை இருட்டில் தெரிந்தது.

பொன்னையன் பீதியடைந்த உள்ளத்தோடு மோகனத்திற்குப் பின்னால் சென்று, சிவக்கண்ணு பிள்ளையின் வீட்டு வாசற்படியில் ஏறினான்.

"பொன்னையா, கொஞ்சம் நில்லு!" என்றார் சிவக்கண்ணு பிள்ளை. பொன்னையன் மனசு திக்கென்றது. மாமா எத்தகைய அம்பைத் தன்மீது எறியப் போகிறாரோ ?

"மோகனம், நீ சத்தே உள்ளே போம்மா. பொன்னையனோடு கொஞ்சம் தனியாய்ப் பேசணும்!" என்றார் சிவக்கண்ணு பிள்ளை. மாமாவும் எதிர்கால மருமகப்பிள்ளையும் என்ன பேசிக்கொள்ளப் போகிறார்கள் என்பதை ஒட்டுக் கேட்பதற்காக நின்ற மோகனம் முகத்தைச் சுளித்துக்கொண்டவண்ணம் தெருக்கதவைப் படீரென்று சாத்திக்கொண்டு உள்ளே போனாள்.

"பொன்னையா, ஆறும் திருவிழாவிலே உன் கச்சேரி இருக்கு. காலங்காத்தாலே எழுந்திருச்சுக் கொஞ்சம் சாதகம் பண்ணாமே எதிர் வீட்டில் போய் குந்திக்கொண்டு இருக்கயே?" என்றார் பிள்ளை முகத்தை ஒருவிதமாகச் சுளித்துக்கொண்டு.

"ஒண்ணுமில்லே, மாமா! சௌந்தரவடிவு அபாரமாக வாசிக்கிறாள் என்று ஊரெல்லாம் ஒரே புரளியாக இருக்கே, அந்த அபாரமான வாசிப்பைத்தான் அவளைக் கொஞ்சம் வாசிக்கச் சொல்லிக் கேட்கலாமே என்று போனேன்!"

"வாசிப்பைக் கேட்க என்னேரத்திலே போறது ? தெருத் திண்ணையிலே தூங்கிக்கொண்டிருந்தவன் நடுச் சாமத்திலே எழுந்திருச்சா ? அதுவும் ஆண்பிள்ளைகள் இல்லாத வீட்டுக்கு ஒரு வயசுப் பையன் போனால் ஊரிலே என்ன பேசுவாங்க ? இது கலகாபாத் சமஸ்தானமில்லே தம்பி, சுத்தப் போக்கிரிப் பய ஊரு. ஒண்ணுமில்லாததுக் கெல்லாம் கண்ணு காது

மூக்கு எல்லாம் வைச்சு கதை கட்டி விடுவாங்க!'' என்றார் பிள்ளை. பொன்னையன் தலை குனிந்துகொண்டு நின்றான்.

'' தம்பி இதுக்குத்தான் பெரியவங்க சொன்னாங்க, அந்தந்த வயசிலே பையன்களுக்குக் கலியாணத்தைச் செய்து வைடா, இல்லையானால் வயசுப் பிள்ளைகள் கெட்டழிஞ்சு போகும்னு'' என்றார் பிள்ளை. சிக்ஷை சொல்லிக் கொடுக்கும் காலத்தில் பொன்னையனைக் கண்டிக்கும்போது கையாளும் பேச்சுத் தோரணையையே சிவக்கண்ணு பிள்ளை இப்போதும் கையாண்டார். அது பள்ளிக்கூடத்து டிராயிங் வாத்தியார் தன்னிடம் படித்த பையன் பின்னால் பெரிய ஜில்லா உத்தியோகஸ்தரான பின்னும், அவரைப் பார்த்து, ''டேய், லாஸ்ட் பாய், பெஞ்சி மேல் ஏறு!'' என்று சொல்லுவது போலிருந்தது.

'' நான் ஒன்றும் அப்படியில்லை. எதிர் வீடும் அப்படிப் போகக்கூடாத இடமல்ல. அது நம்ம சௌந்தரவடிவு வீடு தானே?'' என்று முணு முணுத்தான் பொன்னையன்.

'' தம்பீ, அந்தச் சௌந்தரவடிவோடு உறவு வைச்சுக்கிறது நல்லதல்ல! இன்றோடு அவளோடு வைத்திருக்கிற சம்பந்தத்தை நறுவிசா மறந்துவிடு.''

'' மாமா, நீங்க பேசிக்கொண்டு வருகிற தினுசைப் பார்த்தால், நம்ம சௌந்தரவடிவைக் கோயிலுக்குப் பொட்டுக் கட்டிய சதுர்க்காரி என்றல்லவா வைத்துப் பேசுகிறீர்கள்?''

'' அவள் நடவடிக்கைகளைப் பார்த்தால் அதைவிட மோசமாய்த் தோணுது, தம்பீ!''

பொன்னையனுக்கு ஆத்திரம் எல்லையை மீறியது. அன்பிற்குரிய ஒரு பெண்ணை அபாண்டமாகப் பழி கூறினால் கோபம் வரத்தானே செய்யும்?

'' மாமா, உங்கள் நெனப்பு இப்போ தெரிந்து போச்சு. உங்கள் அசட்டு மோகனத்தை எனக்குக் கலியாணம் செய்து வைக்கிறதுக்காக என்னை இங்கே வரவழைச்சிங்க. எங்கே சௌந்தரவடிவின் சங்கீத ஞானத்தையும் அழகையும் கண்டு மயங்கி உங்கள் மோகனத்தைக் கலியாணம் செய்து கொள்ள மாட்டேனோ என்ற நெனப்பாலேதான் இப்படி சௌந்தரவடிவைப் பற்றித் தாறுமாறாகச் சொல்றீங்க. இது முறையல்ல'' என்று பொன்னையன் படபடவென்று பொழிந்தான், நிதானத்தை இழந்து.

'' பொன்னையா, இங்கே பாரு. இஷ்டமிருந்தா நீ என் மோகனத்தைக் கலியாணம் செய்துகொள். இல்லையானால்

வேறே உனக்கு இஷ்டமான எந்தப் பெண்ணையாவது தங்க மாகக் கலியாணம் செய்துகொள். அதுக்காக என் மகளை அசடு கிசடுன்னு சொல்லாதே. நாளைக்கி கலியாணம் பண்ற பெண்ணு!'' என்றார் பிள்ளை.

"அப்போ நீங்க மட்டும் சௌந்தரவடிவைப் பத்தி இல்லா ததும் பொல்லாததும் சொல்லலாமா? அவள் மட்டும் நாளைக்கி கலியாணம் பண்ற பொண்ணு இல்லையோ?''

"பொன்னையா, ஒரு நாள் ராத்திரிக்குள்ளேயே நீ என்ன இல்லாததையும் பொல்லாததையும் கண்டுபிட்டே? அந்த ஊரறிஞ்சு கெட்ட மகளை எவன் கலியாணம் செய்து கொள் வான்?'' என்றார் சிவக்கண்ணுபிள்ளை மீசை துடிக்க. பொன்னை யனுக்கு அதைவிட ஆத்திரம் பொங்கியது.

"மாமா, அவளை நானே கலியாணம் செய்துகொள்ளப் போறேன்!'' என்றான் பொன்னையன்.

சிவக்கண்ணு பிள்ளை ஆத்திரத்தை அடக்கிக்கொண்டு சாந்தமாகப் பேச ஆரம்பித்தார்.

"பொன்னையா, நான் உனக்கு சங்கீத சிக்ஷை சொல்லிக் கொடுத்த குரு மட்டுமல்ல, உன் க்ஷேமலாபங்களில் அக்கறை யுள்ள மாமன் என்பதையும் மறந்துவிடாதே. நான் வேற்றாளி யல்ல, உனக்கு நல்லத்தைத்தான் சொல்லுவேன். இந்தச் சௌந்தரவடிவு யார் தெரியுமா?'' என்றார் பிள்ளை.

"தெரியும்! கூடப்பிறந்த சகோதரரைப்போல உங்க ளோடு பழகி, உங்களோடு சேர்ந்து நாயனம் வாசிச்சுக் குளத்துமலே சகோதரர்கள் என்ற பிரக்கியாதியை உண்டாக் கிய நம்ம மருதக்கண்ணு மாமாவின் மகள்தானே, இந்தச் சௌந்தரவடிவு?''

"இல்லே, தம்பி, இல்லே!''

"நீங்க சொல்லப் போவது தெரியும். சௌந்தரவடிவு மருதக்கண்ணு பிள்ளையின் சொந்த மகள் இல்லே. திருக் கோகர்ணத்திலே அவர் வெகுகாலமாக எடுத்து வச்சிருந்த பரதநாட்டியம் சரஸ்வதி மூலம் அவருக்குப் பிறந்தவள் என்று தானே சொல்லப் போறீங்க?''

"இதில் பெரிய இடத்து விஷயமெல்லாம் சம்பந்தப்பட் டிருக்கிறதினாலே அப்படிக் கதை திரிச்சிருக்காங்க. உண்மை யில், சௌந்தரவடிவு காலஞ்சென்ற சோளபுரம் ஜமீந்தார் மகள்!''

பொன்னையன் உண்மையில் திடுக்கிட்டுப் போனான்.

"என்ன மாமா, நிஜமாகவா?" என்று கேட்டான் ஆச்சரியத்தோடு.

"ஆமாம், தம்பீ. அது ஒரு பெரிய கதை. சொல்லுகிறேன் கேளு. அந்தக் காலததிலே திருக்கோகர்ணத்திலே பரதநாட்டியம் சரஸ்வதியின், பேரு பிரமாதமாக இருந்தது. ஒரு நாள் நானும் மருதக்கண்ணும் திருக்கோகர்ணத்துககுக் கச்சேரிசெய்யப் போயிருந்தோம். அங்கே சதிராட வந்த சரஸ்வதி, தம்பியின் வாசிப்பைக் கேட்டு மயங்கிடுச்சி. அந்தச் சந்தர்ப்பத்திலிருந்துதான் நம்ம மருதக்கண்ணுக்குப் பரதநாட்டியம் சரஸ்வதியின் தொடர்பு ஏற்பட்டது. ஆனல் ஏற்கனவே காலஞ்சென்ற சோளபுரம் கிழ ஜமீந்தாருக்கும சரஸ்வதியின் வீட்டுக்கும் அதிகப் போக்குவரவு உண்டாம். அவர் மூலமாகப் பிறந்த செளந்தரவடிவு அப்போது கைக்குழந்தையாயிருந்தாளாம். நம்ம மருதக்கண்ணு எபபடியோ சரஸ்வதியின் மனசைக் கலெச்சு அவளைத் திருக்கோகர்ணத்திலே ஜமீந்தாருக்குத் தெரியாமல் ரகசியமாக வைத்திருந்துச்சு. இதற்கிடையில் ஜமீந்தார் ரப்பர் தோட்ட விஷயமாக மலேயாவுக்குப் போய்விட்டார், பல வருஷங்கள் ஆச்சு. கைக்குழந்தையாக இருந்த செளந்தரவடிவு பெரிய பெண்ணாச்சு. மலேயாவுக்குப் போயிருந்த பெரிய ஜமீந்தார் ஊருக்குத் திரும்பி வந்தார். பழைய வாசனைகள் மனுஷனைப் பிறந்தவனை விட்டுப் போகுமா? பழையபடி திருக்கோகர்ணத்துக்கு சரஸ்வதி வீட்டுக்கு ஜமீந்தார் அடிக்கடி போய்வரத் தலைப்பட்டார். இது நம்ம மருதக்கண்ணுவுக்குப் பிடிக்கவில்லை. திருக்கோகர்ணத்தில் இருந்தால்தானே இந்த வம்பு என்று சரஸ்வதியையும் செளந்தரவடிவையும் நம்ம குளத்துமலைக்கு அது வீட்டுக்கே கூட்டி வந்து பகிரங்கமாக வைச்சுக்கொண்டது. இங்கேயும் ஜமீந்தார் உபத்திரவம் நிற்கவில்லை. சரஸ்வதி மூலமாகச் சொல்லி ஜமீந்தார் தன் வீட்டுக்கு வருவதை மருதக்கண்ணு எத்தனையோ தடவை தடுத்துச்சு. ஆனல் ஜமீந்தார் வருவது நிற்கவில்லை......" என்று கொஞ்சம் நிறுத்திக் கனைத்தார் சிவக்கண்ணு.

"நிஜமாகவா, மாமா?" என்று கேட்டான் பொன்னையன்.

"ஆமாம், அதற்கு அத்தாட்சி கூட இருக்கு" என்று சிவக்கண்ணு பிள்ளை எழுந்து உள்ளே சென்று கடிதம் ஒன்றைக் கொண்டுவந்து கொடுத்தார். அது மருதக்கண்ணு சரஸ்வதிக்

குத் தன் கைப்பட எழுதிய கடிதம். பொன்னையன் அந்தக் கடிதத்தைப் பிரித்துப் படித்தான்.

" அன்புள்ள சரஸ்வதி,

உனக்கு எத்தனையோ தடவை சொல்லியிருக்கிறேன். பெரிய ஜமீந்தார் உன்னைப் பார்க்க நம் வீட்டிற்கு அடிக்கடி வருவது கொஞ்சங்கூட நன்றாக இராது. ஊரில் புரளி உண்டாகும். நீ விபரம் தெரிந்தவள். யூகித்து வேண்டியதைச் செய்யவும்.

உன் அன்புள்ள

மருதக் கண்ணு "

அந்தக் கடிதத்தைப் படித்ததும் பொன்னையனுக்கு செளந்தரவடிவின் கிழத்தாயின் மீது வெறுப்பு உண்டாயிற்று. ஆனால் தாய் எப்படி இருந்தாலென்ன, சேற்றில் செந்தாமரை பிறப்பதில்லையா என்று பொன்னையன் சமாதானமடைந்தான். ஆனால் சிவக்கண்ணு பிள்ளை அவன் மனதைச் சமாதானமடைய விடவில்லை.

" அதுமட்டு மில்லே தம்பி! மருதக்கண்ணு ரெண்டு வருஷத்துக்கு முன்னடி ஒருநாள் தன் வீட்டுக் கொல்லையில் செத்துக்கிடந்தது. அது முகம் உடலெல்லாம் விஷம் குடிச்சது போல் நீலம் பாய்ஞ்சிருந்தது. அதுக்கு காரணம் என்ன தெரியுமா, தம்பீ! எதிர் வீட்டு ராட்சஸிகள் தான்! கேளு கதையை. மருதக்கண்ணு எவ்வளவு தடுத்தும் சரஸ்வதி ஜமீந்தார் உறவை விடவில்லை. இருவருக்கும் மருதக்கண்ணு இருப்பது இடைஞ்சலாக இருந்தது. அதைத் தீர்த்துக் கட்டி விடுவதென்று குடிக்கிற பாலில் விஷத்தைக் கலந்து கொடுத்து சரஸ்வதி மருதக்கண்ணுவைக்கொன்றுவிட்டாள் என்று ஊரிலே பராபரியாக வதந்தி. பெரிய இடத்துச் சமாசாரமாச்சே, கொலை விஷயம் வெளியே வராமெ அமுங்கிப் போச்சு. அபூர்வமான வாசிப்புக்காரன் ஒருத்தன் உசிரைக் குடிச்ச விஷப் பாம்பு அந்தச் செளந்தரவடிவின் தாயார்!" என்றார் சிவக்கண்ணு பிள்ளை.

பொன்னையனின் தேகம் பயத்தால் புல்லரித்தது. இவ்வளவு குரூரமான ஒரு ஸ்திரீயும் உலகத்தில் உண்டா என்று நடுங்கினான். ஆனால் செளந்தரவடிவின் களங்கமற்ற முகத்தை நினைக்கும்போது அவனுக்குப் பச்சாத்தாபம் ஏற்பட்டது.

"சௌந்தரவடிவின் தாய்தானே அப்படி? சௌந்தர வடிவைப்பற்றி ஒன்றும் குறையில்லையே, மாமா?" என்று பொன்னையன் கேட்டான்.

"பொன்னையா, சௌந்தரவடிவின் சிரிச்ச முகமும் சாகஸ குணமும் உன்னை அவ்வாறு எண்ணச் சொல்லுகிறது. ஆனால் உண்மையில் அந்தச் சௌந்தரவடிவும் ஒழுங்கானவளல்ல. கேளு கதையை. காலமான சோளபுரம் ஜமீந்தாருக்கு சின்னத் தம்பி என்று ஒரே மகன் உண்டு. வயசுப் பையன். பெண் சபல முள்ளவன். அவன் நம்ம சௌந்தரவடிவு வீட்டிற்கு வாரத்துக்கு ஒரு முறை சோளபுரத்திலிருந்து வந்து போகிறான். இவளும் சில சமயங்களில் தாயைக் கூட்டிக்கொண்டு ஜமீனுக்குப் போய் வருவதுண்டு......" என்று இழுத்தார் பிள்ளை.

"நிஜமாகவா மாமா?" என்று குரல் தழதழக்கக் கேட்டான் பொன்னையன்.

"தம்பீ, நான் ஒரு தகவலையும் பூதிப்படியாகச் சொல்ல மாட்டேன். நீ வேணுமானால் சோதனை செய்து பார். சௌந்தரவடிவின் வீட்டில் மச்சுப்படிக்குப் பக்கத்திலுள்ள சுவரில் ஒரு கிழவனாரின் போட்டோ படமும், சிரித்த முகத்துடன் இருக்கும் ஒரு வயசுப் பையனின் போட்டோ படமும் தங்கச் சட்டம் கண்ணாடி போட்டு மாட்டப்பட்டிருக்கிறது. கிழவனார் படம் சோளபுரம் ஜமீந்தார். அதற்குப் பக்கத்தில் உள்ள வாலிபனின் படம், ஜமீந்தாரின் மகன், தற்போது சோளபுரம் ஜமீனை ஆளும் சின்னதம்பியினுடையது. நீ சௌந்தரவடிவின் வீட்டுக்கும் போய் நான் சொன்னபடி படங்கள் இருக்கிறதா இல்லையா என்று பார்!" என்றார் பிள்ளை.

பொன்னையன் மனம் கலவரமடைந்தது. "மாமா, ஜமீந்தார் மகன் சின்னதம்பிக்கும் நம்ம சௌந்தரவடிவுக்கும் தொடர்பு உண்டு என்கிறது உங்களுக்கு நிச்சயமாகத் தெரியுமா?" என்று கேட்டான்.

"சந்தர்ப்பங்களைப் பார்க்கும்போது நிச்சயமினு தோணுது, தம்பி! சோளபுரத்துக்குப் பக்கத்திலுள்ள மஞ்சள் திடலும், பத்து ஏக்ரா நஞ்சை நிலமும் முன்னே சோளபுரம் ஜமீனுக்குச் சொந்தமாயிருந்தது. இப்போ பரதநாட்டியம் சரஸ்வதியின் பேருக்கு மஞ்சள் திடலும், சௌந்தரவடிவின் பேருக்கு நஞ்சை நிலமும் மாற்றலாகி பத்திரம் பதிந்திருக்கிறது. சௌந்தரவடிவின் வீட்டில் ஏராளமான நகைகளும், வெள்ளிப் பாத்திரங்களும் இருக்கின்றன. அவற்றில் எல்லாம் சோளபுரம் ஜமீன்

விலாசமான "க. சி." என்று விலாசம் பொறித்திருக்கிறது. இதை நீ உன் கண்ணுலே பார்க்கலாம், சௌந்தரவடிவு போட்டிருக்காளே வைர நெக்லஸ். அதில் சி. த என்ற விலாசம் வெட்டியிருக்கிறது. சி. த. என்ற விலாசம் சின்னதம்பி என்கிறதுக்காக. சின்னத்தம்பி எதுக்காக ஆறாயிரம் ரூபாய் மதிப்புள்ள நெக்லஸை சௌந்தரவடிவுக்குக் கொடுக்கவேண்டும்? யோசிச்சுப் பார்!"

"ஒரு வேளை......சோளபுரம் ஜமீந்தார்கள் சங்கீதப் பிரியர்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறேன. ஒருவேளை...... மருதக்கண்ணு மாமாவின் நாதஸ்வர கலையை மதித்து அபிமானத்திற்காக அவருடைய குடும்பத்திற்காக இவ்வளவும் செய்திருக்கலா மல்லவா?"

"கலையபிமானத்திற்காக இவ்வளவு சொத்துப் பத்துக்களை யாராவது அள்ளிக்கொடுப்பார்களா? என் வாசிப்பில்கூட அந்த ஜமீந்தார்களுக்கு அதிக மதிப்புண்டு. அதுக்காக மருதக்கண்ணுவின் சகாவான எனக்கு ஏதாவது செய்தார்களா? மருதக்கண்ணுவுக்கும் அவர்கள் ஒன்றும் கொடுக்கவில்லே. அது எடுத்து வைச்சிருந்த பரதநாட்டியம் சரஸ்வதி அம்மாளுக்கும் அவள் மகளுக்குந்தானே நிலபுலன்களை எழுதி ரிகார்டு செய்து வைத்திருக்கிறார்கள்? சின்னத் தம்பி நுழைஞ்சு திருவிளையாடல் செய்யாத பெண் வீடில்லே என்று ஊரெல்லாம் சொல்லுகிறது. இதை யெல்லாம் யோசித்துப் பார், தம்பி!" என்றார் பிள்ளை.

"மாமா, அந்த ஜமீந்தார் மகன் சின்னத்தம்பி சௌந்தரவடிவு வீட்டுக்கு எந்தச் சமயங்களில் வருகிறான்?" என்று பொன்னையன் கேட்டான்.

"வாரத்துக்கு ஒருமுறை, ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் ஜமீந்தார் மகன் சௌந்தரவடிவு வீட்டுக்குத் தவறாமல் வருகிறான். ராத்திரி பத்து மணிச் சுமாருக்கு ஜமீந்தார் வீட்டு சவர்லெட் கார் ஊருக்கு ஒதுப்புறமுள்ள மொளப்பொட்டலில் வந்து நிற்கும். ஊர் அடங்கிய பிறகு சின்னத்தம்பி மட்டும் காரைவிட்டு இறங்கித் தலையில் முக்காட்டைப் போட்டுக் கொண்டு சௌந்தரவடிவின் வீட்டுக்குள் வருவான். சௌந்தரவடிவு அண்ணைக்குமட்டும் தெருவாசல் கதவைத் தயாராய் தாழ்ப்பாள் போடாமல் வெறுமனே சாத்தி வைத்திருப்பாள்." என்றார் பிள்ளை.

பொன்னையன் மனதில் விபரீத சந்தேகங்கள் நிறைந்தன. ஒருபுறம் துக்கமும் ஒருபுறம் ஆத்திரமும் அவன் மனதைச்

சல்லடையாகத் துளைத்தன. சௌந்தரவடிவின் களங்கமற்ற முகம் வெறும் நடிப்புத்தானே? சிரித்துச் சிரித்து ஏமாற்றி விட்டாளா? அல்லது, சிவக்கண்ணுப்பிள்ளை தன் மனதைக் கலக்கவேண்டுமென்பதற்காக இவ்வாறு கட்டுக் கதைகளைக் கூறுகிறாரா? ஒவ்வொன்றையும் அத்தாட்சியோடு கூறுகிறாரே, அவைகளை வெறுங்கட்டுக் கதைகள் என்று தள்ளிவிட முடியுமா? ஒவ்வொன்றையும் சோதனை செய்து பார்த்தால்தான் உண்மை புலப்படும்! சௌந்தரவடிவின் வீட்டில் அந்தப் போட்டோ படங்களும், க. சி. விலாசம் பொறித்த வெள்ளிச் சாமான்களும் நகைகளும் இருக்கின்றனவா என்று பார்க்க வேண்டும். சௌந்தரவடிவு அணிந்திருக்கிற வைர நெக்லஸையும் நாசூக்காக வாங்கி, அது ஜமீந்தார் மகன் கொடுத்ததா என்று ஆராய வேண்டும். அவைமட்டும் போதாது. நாளை வெள்ளிக்கிழமை இரவு கண் விழித்திருந்து ஜமீந்தார் மகன் வருகிறானா, சௌந்தரவடிவின் வீட்டில் என்ன நடக்கிறது என்று பார்க்கவேண்டும் என்றவாறு சிந்தனைகளில் மூழ்கியவண்ணம் நெஞ்சம் புண்ணாகிக் கொண்டிருந்தான் பொன்னையன்.

---

அத்தியாயம் : 5

## ஆசையும் ரோசமும்

ஆசை கொண்டாலும் மன
ரோசம் வேண்டாமோ சாமி? —பதம்.

---

சந்தேகம் என்ற பேய் மனிதனைப் பிடித்துக்கொண்டால் அது மனதைச் சதா அரித்துக் கொண்டேயிருக்கும். திசை தெரியாத கடலில் அகப்பட்ட மாலுமியைப்போல், எதை நம்புவது எதை நம்பக்கூடாது என்று திண்டாடுவான். அந்தத் திரிசங்குவின் நிலைக்குத்தான் பொன்னையன் வந்துவிட்டான்.

சௌந்தரவடிவின் வீட்டைச் சுவர்க்கம் என்று எண்ணியிருந்தோம். அதை நரகம் என்று காட்டி அதற்குள் மாமா தள்ளிவிட்டாரே என்று ஏங்கினான். மாமா சொல்வதெல்லாம் உண்மையா? சௌந்தரவடிவின் குடும்பம் இப்படி விவஸ்தை கெட்ட குடும்பமாயிருக்குமா? பிரக்யாதி பெற்ற மகுடி மருதக் கண்ணுப்பிள்ளையின் சாவிற்கு சௌந்தரவடிவும் அவள் தாயும்

பொறுப்பாளிகள் என்று மாமா சொல்கிறாரே? இப்படியும் பாதகச் செயல்புரியும் பெண்கள் உலகத்தில் உண்டா? அது உண்மையானால், சௌந்தரவடிவை மணப்பதை அடியோடு மறந்துவிடவேண்டும். இல்லையெனில், எந்தச் சமயத்தில் சௌந்தரவடிவு தரும் பாலில் விஷங்கலந்திருக்கிறதோ என்று பயந்துகொண்டேயிருக்க நேரிடும்! ஒரு வேளை சௌந்தரவடிவைக் கலியாணம் செய்துகொண்டு ஒருவருக்கும் தெரியாமல் கலகாபாத் சமஸ்தானத்துக்கு கூட்டிக்கொண்டு போய்விட்டால் என்ன? ஆனால் ஏற்கனவே கெட்டுப்போனவளையா கலியாணம் செய்துகொள்வது? ஊஹூம் கூடாது! சௌந்தரவடிவு ஏன் ஜமீந்தார் மகனோடு உறவு வைத்துக்கொண்டாள்? அவன் தரும பணத்தின் பளபளப்பில் மனதைப் பறிகொடுத்துப் பாழானாளா? அபூர்வமான கலைஞானம் படைத்த ஒரு பெண் இப்படியும் ரகசியமாக விவஸ்தை கெட்ட வாழ்க்கை வாழ்வாளா? ஐயோ சௌந்தரவடிவு, உன்னோடு சேர்ந்து நாடெங்கும் நாதஸ்வரக் கச்சேரிகள் செய்யப் போகலாம், ஏராளமான பொருள் குவிக்கலாம், எந்த நேரமும் இணைபிரியாமல் வாழலாம் என்று என்னென்னவோ ஆகாசக் கோட்டைகளெல்லாம் கட்டினேனே! அவ்வளவும் தரை மட்டமாய் இடிந்து விழுந்து விடும்போலிருக்கிறதே? என்று பொன்னையன் புலம்பினான்.

எந்நேரமும் சிரித்த முகமும் கள்ளங்கபடற்ற வாஞ்சையும் காட்டும் சௌந்தரவடிவு திரை மறைவில் இவ்வளவு மோசமான வாழ்க்கை நடத்தக் கூடியவளாயிருப்பாளா என்று ஓர் எண்ணமும் பொன்னையன் மனதில் இடையிடையே உண்டாயிற்று. ஏன் இருக்காது? பெண்ணை மாயை என்றும், சபல புத்தி படைத்தவள் என்றும், எந்தத் தீச்செயலுக்கும் பெண்தான் ஆதிமூலம் என்றும் படித்த புராணங்களும் கதைகளும் உள்ளங்கை நெல்லிக கனிபோல் எடுத்துக் காட்டுகின்றனவே? இந்தச் சௌந்தரவடிவும் ஒரு பெண்தானே? உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் சாகஸம் இவளுக்கும் ஏன் இருக்கக்கூடாது? சௌந்தரவடிவின் தாய் ஈரநெஞ்சமற்ற அரக்கி என்று அவளுக்கு மருதக்கண்ணு பிள்ளை 'ஜமீந்தார் உறவு வேண்டாமென' எழுதிய கடிதத்திலிருந்து தெரிகிறது. தாயைப்போல் சேய் என்ற நீதி வாக்கின்படி மகளும் அப்படித் தானே இருப்பாள்? அப்போது சௌந்தரவிடிவின் கள்ளங்கபடமற்ற முகம், வாஞ்சையான பேச்சு எல்லாம், பொய்யா? ஐயோ! என்ன முயன்றும் அவளுடைய அந்த மயக்கும் விழிகளையும், வெத்திலைக் காவிபடிந்த உதடுகளையும், எந்நேரமும்

சிரிக்கும் கன்னங்களையும், ஆசை பொங்கக் கேலிசெய்யும் குறும்பான பேச்சுகளையும் மறக்க முடியவில்லையே? பொன்னையனால் பொறுக்கமுடியவில்லை! சௌந்தரவடிவைப் பற்றி மாமா கூறிய அவதூறுகள் உண்மையா பொய்யா என்று பரிசோதித்துப் பார்த்துவிட்டுத்தான் மறு காரியம் பார்ப்பது என்று சௌந்தரவடிவின் வீட்டிற்குப் போனான்.

சௌந்தரவடிவு உள் தாழ்வாரத்தில் உட்கார்ந்து நன்றாகச் சோப்பு போட்டு அலம்பிய முகத்தில டால்கம் பவுடரைப் பூசிக்கொண்டிருந்தாள். சோப்பின் மணமும் பவுடரின் வாசனையும் தாழ்வாரமெங்கும் கம்மென்று வீசின.

பொன்னையன் பூனைபோல் தன் பின்னால் வந்து நிற்பதைச் சௌந்தரவடிவு பாரத்தாள். அவனை ஆசை பொங்க ஓரக் கண்ணால் பார்த்துக்கொண்டே, "ஓகோ! வந்துவிட்டீர்களா? என்னடா போன மச்சான் பூ மல்லிகையோடு திரும்பவில்லையே என்று இன்னேரம் காத்துக்கொண்டிருந்தேன்!" என்று சிரித்தாள். அவள் சிரித்தபோது சதைப் பிடிப்பான அவள் கன்னங்களில் அதிர்ஷ்டக குழிகள விழுந்தன. அந்தக் கள்ளங்கபடற்ற சிரிப்பும் சிவக்கும் கன்னக் குழிகளும் பொன்னையன் மனதை ஒரு கணம் மெய்மறக்கச் செய்துவிட்டன.

"என்ன சௌந்தரம், இப்போ பிரமாதமாக இருக்கிறாயே, அப்ஸரஸ் மாதிரி!" என்றான் பொன்னையன்.

"உஷ்! சத்தம் போடாதீர்கள். சமையலறையில் தூங்கும் என் அம்மா 'என்னடி இடிகிடி விழுந்து விட்டதோ' என்று எழுந்து வந்துவிடப்போகிறாள்!" என்று கடைக்கண்ணால் பொன்னையனைப் பார்த்தாள்.

"சௌந்தரம், நிஜமாக நீ ரொம்ப அழகாயிருக்கிறாய்!' பெரிய பெரிய ராஜாக்கள் ஜமீந்தார்கள் கண்டால் உன்னைக் கொத்திக் கொண்டுபோய் விடுவார்கள்!" என்றான் பொன்னையன், சௌந்தரவடிவை ஊடுருவிப் பார்த்த வண்ணம்.

ஜமீந்தார்கள் என்றதும் சௌந்தரத்தின் முகம் சட்டென்று மாறியது. ஆனால் உடனே சமாளித்துக்கொண்டு, "ஆமா, இந்த ஆண்களுக்கு வேறே என்ன வேலை? பொழுது போகாத போது பெண்களிடம் வந்து நீ ரொம்ப அழகு கிழகுன்னு புகழ்வார்கள். அந்தச் சமயத்தில் பெண்கள் சொல்லுகிறபடியெல்லாம் ஆடுவார்கள். அப்புறம் ஆளை கண்ணாலேகூட பார்க்க முடியாது. எல்லாம் தெரிஞ்சதுதானே?" என்றாள் சௌந்தரம் எதார்த்தமாக. அதைக்கேட்டதும் பொன்னையன் மனசு திக்

சென்றது. இருண்டவன் கண்ணுக்கு மருண்ட தெல்லாம் பேயாகத்தானே தோன்றும்?

சௌந்தரவடிவின் முக அலங்காரம் முடிந்ததும், குங்குமச் சிமிழைத் திறந்து நெற்றியில் காலணு அளவு குங்குமப் பொட்டு இட்டுக்கொண்டாள். அதைப் பார்த்ததும் பொன்னையனுக்கு ஆத்திரம் பொங்கியது.

"என்ன சௌந்தரம், இப்படிக் காலணு அளவு குங்குமப் பொட்டு இட்டுக் கொள்கிறாய், மாடத்தெரு நித்ய கல்யாணிகள் மாதிரி?" என்று பாதிச் சிரிப்பும் பாதி வருத்தமுமாகப் பொன்னையன் கேட்டான்.

"எந்தெந்த நெற்றிக்கு எடுக்குமோ அந்தந்த மாதிரி தானே பெண்கள் பொட்டு இட்டுக் கொள்வார்கள்?"

"நீ அப்படிப் பொட்டு இட்டுக் கொள்வது எனக்குப் பிடிக்கவில்லை!"

"நான் உங்களுக்காகப் பொட்டு இட்டுக் கொள்ள வில்லை!"

"பின்னே யாருக்காகப் பொட்டு இட்டுக் கொள் கிறாய்?"

"யாருக்காகவோ! அதை யெல்லாமா உங்களிடம் சொல்ல வேண்டும்?" என்றாள் சௌந்தரம், பொன்னையனை கடைக் கண்ணால் பார்த்துச் சிரித்துக் கொண்டே. சந்தேகம் என்ற நோயால் குருடாயிருக்கும் பொன்னையனுக்கோ அவ ளுடைய கடைக் கண் பார்வையின் அர்த்தம் புலப்படவில்லை. எதையோ தன்னிடமிருந்து மறைக்கிறாள் என்று நினைத்தான்.

"சௌந்தரம்! தாகமாயிருக்கு. கொஞ்சம் தண்ணீர் கொண்டுவந்து தருகிறாயா?" என்றான் பொன்னையன். அவன் நினைத்தது போல் சௌந்தரம் உள்ளே ஓடிச் சென்று ஒரு வெள்ளி டம்ளரில் தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தாள். பொன்னையன் தண்ணீர் குடிப்பது போல் அதை வாங்கி டம் ளரில் என்ன விலாசம் பொறித்திருக்கிறது என்று உன்னிப் பாய் பார்த்தான். மாமா சொன்ன 'க. சி.' என்ற விலாசந்தான் அதில் பொறித்திருந்தது. டம்ளரில் மட்டுமல்ல. அங்கு மேலோட்டமாகப் பார்த்த ஒவ்வொரு வெள்ளி பாத்திரத்தி லுமே 'க. சி.' என்ற பெயர்தான் வெட்டியிருந்தது. மாமா சொன்ன ஓர் அடையாளம் உண்மையாகி விட்டது! பொன் னையனின் முகம் பேயறைந்தவனைப் போல் ஆயிற்று!

" சௌந்தரம்! இந்த டம்ளரிலும் இங்குள்ள வெள்ளிப் பாத்திரங்களிலும் ' க. சி. ' என்ற விலாசம் வெட்டியிருக்கிறதே. இது யாருடைய விலாசம்?" என்று கேட்டான்.

சௌந்தரவடிவின் முகத்தில் கலவரக் குறிகள் தென்பட்டன. ஆனால் உடனே சமாளித்துக் கொண்டு, " அது யாருடைய விலாசமாயிருந்தால் உங்களுக்கென்ன?" என்று சிரித்து மழுப்ப முயன்றாள்.

" உம்!" என்று இழுத்தவாறே பொன்னையன் தலை குனிந்தான். அப்போது சௌந்தரவடிவின் கழுத்தில் அணிந்திருந்த வைரக் கண்டசரம் பொன்னையன் கண்களில் தைத்தது.

" சௌந்தரம், உன் சிவந்த கழுத்துக்கு இந்த வைரக் கண்டசரம் ரொம்பப் பிரமாதமாயிருக்கிறதே! எங்கே கழற்றிக் கொடு, பார்க்கலாம்!" என்றான்.

" வைர நகைகள் பெண்கள் அணிந்திருக்கும் போதுதான் பிரமாதமாயிருக்கும். கழற்றி தனியாகப் பார்த்தால் நகைகளின் அழகு குறைந்து விடும்!" என்றாள் சௌந்தரம், கன்னங்குழி விழச் சிரித்துக் கொண்டே.

" அந்த வைரக் கண்டசரம் ரொம்ப விலையுள்ளதாயிருக்குமே, என்ன விலை?"

" ஆயிரம் ரூபாய்!",

" அப்பாடா! எவ்வளவு காரட் வைரம்?"

" காரட் கருணைக் கிழங்கெல்லாம் எனக்குத் தெரியாது!"

" பின்னே யாருக்குத் தெரியும்!"

" வைர வியாபாரிகளுக்கு!"

" இங்கே இப்படி கழற்றிக் கொடு, நிஜ வைரமா, வெறும் போலி கல்சர் வைரங்களா என்று பார்க்கலாம்!" என்று பொன்னையன் கேட்டான்.

சௌந்தரம் தயங்கியவாறே கழுத்திலணிந்திருந்த வைரக் கண்டசரத்தைக் கழற்றி பொன்னையன் கையில் கொடுத்தாள். பொன்னையன் அந்த கண்ட சரத்தை அவளிடமிருந்து வாங்கி விலாசம் ஏதாவது வெட்டியிருக்கிறதா என்று இப்படியும் அப்படியுமாக அதைத் திருப்பிப் பார்த்தான். பச்சை மயில்போல் கட்டிய பச்சைக் கல் டாலருக்குப் பின்னால் தங்கத் தகட்டில் விலாசம் ஒன்று பொறித்திருந்தது. பொன்னையன் பதை பதைப்புடன் அதிலிருந்த அழுக்கைத் தன் கைக் குட்டையால் துடைத்துவிட்டு உற்றுப் பார்த்தான். மாமா சொன்ன

'சி. த.' என்ற விலாசந்தான் வெட்டியிருந்தது. பொன்னையனின் உதடுகள் ஆத்திரத்தால் பட படவென்று துடித்தன.

" இந்த சி. த. என்கிறது யாருடைய விலாசம்?" என்று பொன்னையன் சௌந்திரவடிவைக் கேட்டான்.

சௌந்திரத்தின் மனம் புண்பட்டது. மனசில் உள்ளதை ஸ்பஷ்டமாகச் சொல்லாமல் எதையெதையோ கிண்டிக் கிளறுகிறாரே என்று பொன்னையன் மீது சௌந்தரத்திற்கு ஆத்திரமுண்டாயிற்று. " அது யாருடைய விலாசமாயிருந்தால் உங்களுக்கென்ன?" என்று சௌந்தரம் கேட்டாள்.

" எனக்கென்னவா? அது எனக்குத் தெரிய வேண்டும்!"

" அது யாருடைய விலாசமென்று உங்களுக்குத் தெரிய வேண்டிய அவசியமில்லை!"

" எனக்குத் தெரியாது என்று நினைக்காதே. எல்லாம் எனக்குத் தெரியும்!"

" அப்போ தெரிந்திருந்தால் என்னை ஏன் கேட்கிறீர்கள்? நான் உண்மை சொல்லுகிறேனு என்று பார்க்கவா? எனக்கு இந்த துப்பறியும் வேலைகள் கொஞ்சங்கூடப் பிடிக்காது!"

" ஆமா பிடிக்காது தானே? இல்லையென்றால் ரஸாபாஸமாகி விடுமல்லவா?"

" எது ரஸாபாஸம்?"

" அது கிடக்கட்டும். உங்கள் வீட்டுக்கு மச்சுப்படி எங்கே இருக்கு?"

" வாருங்கள் காட்டுகிறேன். மச்சில் ஒன்றும் கள்ள மார்க்கெட் இல்லை!"

சௌந்தரவடிவு முன்னே செல்ல பொன்னையன் அவள் பின்னால் சென்று மச்சுப்படியை அடைந்தான். அந்தப் படிக்கு பக்கத்திலுள்ள சுவரில்...ஐயோ, அதென்ன? மாமா சொன்னபடி ஒரு கிழவனின் படமும் ஒரு வாலிபனின் படமும் தொங்குகின்றனவே! பொன்னையன் ஒரு கணம் மரம்போல் திகைத்து நின்றான். நாக சர்ப்பம் போல் அவன் உள்ளம் சீறியது. " அந்தப் படங்களிலுள்ள கிழவனும் கிராதகனும் யார்?" என்று கத்தினான்.

மதிப்புக்குரியவர்களைக் கிழவன் கிராதகன் என்றால் யாருக்குத்தான் கோபம் வராது? கள்ளங் கபடற்ற துடியான பெண்களுக்கு வெடுக்கென்று பேசும் சுபாவம் இருக்குமல்லவா?

"அவை யாருடைய படங்களாயிருந்தால் உங்களு கென்ன?" என்று செளந்திரவடிவு வெடுக்கென்று கேட்டாள்.

"செளந்தரம், யாருடைய படமென்று சொல்லப் போகி றாயா, இல்லையா?"

"சொல்ல முடியாது! தாலி கட்டின மனைவியை பய முறுத்துகிற மாதிரியல்லவா அதிகாரம் செய்கிறீர்கள்?"

'கவலைப் படாதே! நான் அந்த துர்ப்பாக்கிய நிலைக்கு வரமாட்டேன்! நீ சொல்லா விட்டாலும் அவை யாருடைய படங்களென்று எனக்குத் தெரியும்!"

"யாருடைய படங்கள், சொல்லுங்களேன் பார்க்கலாம்!"

"கிழவரின் படம் காலஞ் சென்ற சோளபுரம் ஜமீந்தாரின் போட்டோ. பக்கத்திலுள்ள படம் ஜமீந்தாரின் மகன் சின்னத் தம்பியின் போட்டோ? நான் சொன்னது சரியா?"

"ரொம்பச் சரி! அவர்களின் படங்களைத்தான் நான் சுவற்றில் மாட்டியிருக்கிறேன்!"

"எதற்காக!"

"எதற்காக என்று நீங்கள் கேட்கவுங் கூடாது. நான் சொல்லவும் மாட்டேன்" என்று படபடவென்று பொழிந் தாள் செளந்தரவடிவு.

"செளந்தரம், பூனை கண்ணை மூடிக்கொண்டால் உலகம் இருண்டு விடாது. நீயாகச் சொல்லாவிட்டாலும், எனக்கு எல்லாம் தெரிந்து விட்டது!"

"என்ன பிரமாதமான ரகசியத்தைக் கண்டுபிடித்து விட்டீர்கள்? சொல்லுங்களேன் பார்க்கலாம்!"

"வெள்ளிப் பாத்திரங்களிலுள்ள க. சி. என்ற விலாசம் ஜமீன் விலாசம். உன் வைர நெக்லஸிலுள்ள சி. த. என்பது சின்னத்தம்பியின் விலாசம். செளந்தரம்! அந்தக் கிழட்டு ஜமீந் தார் உன் தாயின் ஆசை நாயகன். பக்கத்து படத்திலுள்ள அந்தக் கிராதகன் உன்னுடைய........."

"உஷ், நிறுத்துங்கள். தலை கால் தெரியாமல் மனசிலுள் ளதையெல்லாம் கொட்டிவிடாதீர்கள். கொட்டிவிட்டால் அப் புறம் பொறுக்க வராது!"

"செளந்தரம், உன் தாயின் குற்றத்திற்கு உன்னைக் குறை கூற முடியாது. நீ ஜமீந்தார் மகன் சின்னத் தம்பியோடு உறவு வைச்சுக்கிறது எனக்குக் கொஞ்சங்கூட பிடிக்கவில்லை."

" உங்களுக்குப் பிடிக்கவில்லை என்றால் அதற்காக அவரை இங்கே வரவேண்டா மென்று நான் தடுக்க முடியாது."

" அவன் இனி ஒருமுறை இங்கே காலடி எடுத்து வைத்தால் நான் உன் வீட்டிற்கு வர மாட்டேன்."

" உங்களுக்கு இஷ்டம் இருந்தால் என் வீட்டிற்கு வாருங்கள். இல்லையென்றால் அதற்காக சின்னத்தம்பி வருவதை நிறுத்த முடியாது."

" சௌந்தரம், சொல்வதைக் கேள். முதலில் அந்தக் கிராதகன் படத்தைக் கழற்றித் தெருவில் விட்டெறி."

" சின்னத்தம்பியின் படத்தைக் கழற்றி தெருவில் விட்டெறிவதென்றால், இங்குள்ள தியாகராஜ சுவாமிகள் படம், நடராஜ மூர்த்தி படம் எல்லாவற்றையும் கழற்றி தெருவில் விட்டெறிய வேண்டியது தான் !"

" சௌந்தரம், ஜமீந்தார்கள் தரும் பணத்தைக் கண்டு உன் மனம புழுங்கி விட்டது. பணம் கொடுப்பவனைத் தெய்வமாகக் கும்பிடும் மாடத்தெரு தாசியாகி விட்டாய் !"

" உஷ், வாயை அடக்கிப் பேசுங்கள். எனக்கு கோபம் வந்தால் நான் என்ன செய்வேன் என்று எனக்குத் தெரியாது !"

" என்ன செய்வாய் ? சின்னத்தம்பியின் ஆட்களைவிட்டு என்னை அடிக்கச் சொல்லுவாய் !"

" வீணாக ஊரில் கிளம்பியிருக்கிற வதந்திகளை நம்பிக் கொண்டு எங்கள் குடும்பத்தை வீணாக சந்தேகப்படாதீர்கள் !"

" பின்னே, உண்மையைச் சொல்லேன். இந்த ஜமீந்தார் உறவு உங்கள் குடும்பத்திற்கு எதற்கு ?"

" எப்படிச் சொல்லுகிறது ?' எனக்கு மனம் கூசுகிறது! என்றாவது ஒரு நாள் சமயம் வரும்போது அம்மா சம்மதித்தால் உங்களிடம் சொல்லுகிறேன் !" என்று கண்களில் நீர் வடியக் கூறினாள் சௌந்தரம்.

" என்னைக்கு வேண்டுமானாலும் சொல். அதுவரை அந்த சின்னத்தம்பிப்பயல் உன் வீட்டு வாசற்படி ஏற விடாதே !"

சௌந்தரத்திற்கு மறுபடியும் கோபம் வந்துவிட்டது.

" நாய் வாலையும, சந்தேகப்படுபவர்களின் சுபாவத்தையும் ஒரு நாளும் மாற்ற முடியாது ! உங்களுக்கு இஷ்டமிருந்தால்

எங்கள் வீட்டிற்கு வாருங்கள். வந்தால் ஜமீந்தார் பேச்சை எடுக்கக்கூடாது!" என்றாள் கண்டிப்பான குரலில், சௌந்தரம்.

பொன்னையனால் பொறுக்க முடியவில்லை. "சீச்சீ! நீ இவ்வளவு கேவலமானவள் என்று நான் கனவிலும் நினைக்கவில்லை. இனி உன் முகத்தில் விழித்தால்கூட பாவம்!" என்று கோபக் கனல் பறக்கக் கூறிவிட்டு சௌந்தரவடிவின் வீட்டினின்று வெகு வேகமாக வெளியேறினான்.

சௌந்தரவடிவின் மனதில் அடக்க முடியாத துக்கம் உண்டாயிற்று. கண்கள் கலங்கின. ஓடிச்சென்று பட்டு மெத்தையில விழுந்து விம்மி விம்மி அழுதாள்.

அழுகைதானே பெண்களின் ஆறாத் துயருக்கு அரிய மருந்தாக ஆறுதல் தருகிறது?

---

அத்தியாயம் : 6

## இவன் யாரோ!

இவனாரோ அறியேனே—சகியே
யாதொன்றும் தெரியேனே! —பதம்.

அன்றைப் பொழுது முழுதும் பொன்னையன் மதங்கொண்ட யானைபோல் சிவக்கண்ணு பிள்ளையின் வீட்டிற்குள் திரிந்து கொண்டிருந்தான். மாமா சொன்ன அடையாளங்கள் அனைத்தும் உண்மையாகிவிட்டனவே என்று புலம்பினான். அன்று சப்ரிஜிஸ்ட்ரார் ஆபீஸில போய் விசாரித்து வந்ததில், சோளபுரம் ஜமீனுக்குரிய மஞ்சள் திடல் சௌந்தரவடிவின் தாய் சரஸ்வதி அம்மாள் பேருக்கும், ப. சி. நஞ்சை நிலம் சௌந்தரவடிவின் பேருக்கும் மாறிவிட்டதாகத் தெரிந்தது. அப்போதும் சௌந்தரவடிவு களங்கமுள்ளவள் என்று அவனால் பூரணமாக நம்பமுடியவில்லை. தாய் ஒரு வேளை குற்றமுள்ளவளாக இருக்கலாம். மகளும் அப்படியிருப்பாளா? ஆனால் ஜமீந்தார் மகன் எதற்காகச் சௌந்தரவடிவின் வீட்டிற்கு வெள்ளிக் கிழமைதோறும் வருகிறான்? அவன் தன் வீட்டிற்கு வருவதை சௌந்தரவடிவு ஏன் அளவற்ற மதிப்போடும் உற்சாகத்தோடும் வரவேற்கிறாள்?

பொன்னையன் சிவக்கண்ணு பிள்ளை வீட்டின் உள் கூடத்திலுள்ள சுவரில் மாட்டியிருந்த காலண்டரைப்' பார்த்தான். அன்று வெள்ளிக்கிழமை! ஆம், இன்றிரவும் ஜமீந்தார் மகன் சௌந்தரத்தின் வீட்டிற்கு வருவானல்லவா? ஜமீந்தாரின் செவர்லெட் கார் ஊருக்கு ஒதுப்புறமுள்ள மொளப் பொட்டலில் வந்து நிற்கும் சப்தத்தைக் கவனிக்கவேண்டும்!

ஜமீந்தார் மகனும் சௌந்தரவடிவும், சௌந்தரத்தின் வீட்டிற்குள் எந்த நிலையில் இருக்கிறார்கள் என்பதை ரகசியமாகத் துப்பறிய வேண்டும். அவற்றையும் பார்த்துவிட்டால் உண்மையைப் பூரணமாகப் பார்த்துவிடலாம்! இன்றிரவு முழுதும் தூங்ககூடாது! இந்த தீர்மானத்தோடு அன்றிரவு பொன்னையன் தெருத் திண்ணையில் இனம் விளங்காத ஓர் இருண்ட மூலையில் பாயை விரித்துக்கொண்டு படுத்திருந்தான்.

இரவு பத்துமணி ஆகும் சமயம்.

ஊர் அடங்கிவிட்டது.

சௌந்தரவடிவின் வீட்டில் எல்லாம் ஒரே இருட்டாக இருந்தது. அன்றிரவு விடி விளக்குகூட அவள் வீட்டில் எரியவில்லை.

பொன்னையன் மெல்ல எழுந்து சென்று சௌந்தரவடிவின் தெருவாசல் கதவின்மீது மெல்ல கைவைத்து அழுத்திப் பார்த்தான். பொன்னையனுக்கு கபீரென்றது. மாமா சொன்னபடி அந்தக் கதவு உள்புறம் தாளிடாமல் வெறுமனே சாத்தி வைக்கப்பட்டிருநதது. ஐயோ, சௌந்தரவடிவு யாருக்காகத் தயாராய் தெருவாசல் கதவைத் தாழிடாமல் சாத்தி வைத்திருக்கிறாள்? அந்த ஜமீந்தார் மகனுக்காகத்தானே? பொன்னையன் மனம் இடிந்தவனைப்போல் திரும்பிவந்து தன் மாமாவின் வீட்டுத் தெருத் திண்ணையில் படுத்தான்.

ஊர்க் கோயில் மணி டாண் டாண் என்று பத்து அடிக்கும் சப்தம் கேட்டது. ஊருக்கு ஒதுப்புறமுள்ள மொளப் பொட்டல் பக்கமிருந்து நரிகள் ஊளையிடும் சப்தம் வந்தது. அந்த மொளப் பொட்டலில் ஏதாவது மோட்டார் கார் வந்து நிற்கும் சப்தம் கேட்கிறதா என்று பொன்னையன் காதைத் நீட்டி வைத்துக் கொண்டான்.

அப்போது மேலரஸ்தாவிலிருந்து டபடப வென்று ஒரு கார் கனவேகமாய் வரும் சப்தமும், மொளப்பொட்டல் பக்கம் வந்ததும் அந்தக் காரின் சப்தம் நிற்கும் ஓசையும் கேட்டது.

அந்த . ஒரு கணத்திற்குள் பொன்னையன் உடலெங்கும் நூறு பூகம்பங்கள் உண்டான பிரமை தட்டியது.

பொன்னையன் இடையில் சொருகியிருந்த கொத்துச் சாவியை எடுத்து அதிலிருந்த பேனுக் கத்தியைக் கழற்றிக் கையில் தயாராய் வைத்திருந்தான். அந்தப் பேனுக் கத்தியின் முனை ஈட்டிபோல் மிகவும் கூர்மையாக இருந்தது. சௌந்தர வடிவின் வீட்டிற்குள் எவனாவது தலையில் முக்காடு போட்டுக் கொண்டு உள்ளே நுழைந்தால் அவன் கன்னப்பொட்டில் பேனுக் கத்தியால் குத்திக் கொன்று விடுவது என்று நினைத் தான், பழிவாங்கும் மனப் பான்மையுடன்! சூழ்நிலைகளின் உணர்ச்சிக்கு வசப்படுபவர்கள் ஒரு கணத்திற்குள் சிறு குழந்தைகள்போல் எவ்வளவோ பயங்கரமான திட்டங்களிடு கிறார்கள்?...அந்த மனப்போக்கோடுதான் கொலைகாரனைப் போல் பொன்னையன் சிவக்கண்ணுபிள்ளை வீட்டுத் திண்ணை யில் இருண்ட மூலையில் படுத்திருந்தான்.

யாராவது தலையில் முக்காடோடு சௌந்தரவடிவின் வீட்டிற்குள் நுழைகிறார்களா என்று அவன் கண்கள் சௌந்தர வடிவின் வீட்டு தெருவாசல் கதவின் பக்கம் ஆணியறைந்தது போல் பதிந்திருந்தன.

அப்போது, தெரு மூலையில் மெல்ல யாரோ வரும் சப்தம் கேட்டது. அதைத் தொடர்ந்து தலையில் அங்கவஸ்திரத்தால் விரித்து மூடிக்கொண்டு, தெருவில் யாராவது கவனிக்கிறார் களா என்று திரும்பிப் பார்த்துக்கொண்டே யாரோ ஒரு ஆசாமி வந்தான். வந்தவன் சௌந்தரவடிவின் வீட்டு வாசலில் ஒரு கணம் மௌனமாக நின்றான். பிறகு பூனைபோல் படிகளில் ஏறி சௌந்தரவடிவின் வீட்டுத் தெரு வாசல் கதவை மெல்லத் திறந்து திருடனைப்போல் உள்ளே நுழைந்தான்.

அத்தியாயம் : 7

## ஒருவனும் ஒருத்தியும்

*ஒருமடமாது ஒருவனுமாகி இன்பசுகந்தரு*
*அன்பு பொருந்தி உணர்வு கலங்கி —பதம்*

தலையில் முக்காடு போட்டுக் கொண்டிருந்த ஆசாமி, சௌந்தரத்தின் வீட்டு படிக்கட்டுகளில் ஏறி தெருவாசல் கதவின்மீது கைவைத்துத் தள்ளியதும், தயாராய் சிமனி விளக்குடன் வளையலணிந்த ஒரு பூங்கரம் அந்த ஆசாமியை எதிர்கொண்டழைத்தது.

மினுக்கு மினுக்கென்று எரியும் சிம்னியின் வெளிச்சத்தில் ஒரு க்ஷணம் புன்முறுவல் பூக்கும் சௌந்தரவடிவின் முகமும், 'உள்ளே வாருங்கள்' என்பதுபோல் ரகசியமாகச் சைகை காட்டும் சௌந்தரத்தின் கண்ஜாடையும் தெரிந்தது.

அதைப் பார்த்ததும் எதிர் வீட்டுத் திண்ணை மறைவில் படுத்திருந்த பொன்னையன், புற்றைக் கலைத்ததும் புறப்படும் விஷப்பாம்பைப்போல் கையில் பேனாக் கத்தியுடன் சீறிக் கொண்டு எழுந்தான். அந்தப் பேனாக் கத்தியால் தெருவாசலிலே அந்த இரண்டு மானமற்ற ஜடங்களையும் கன்னப் பொட்டுகளில் குத்திக் கொன்றுவிட வேண்டுமென்று துடித்தான். அதற்குள் மற்றொரு விநோதமான சம்பவம் நடந்து விட்டது. கருநிறக் காஷ்மீர் போர்வையால் உடல் முழுவதையும் ஓர் அங்குலங்கூடத் தெரியாமல் போர்த்திக்கொண்டு கன்னங் கரேலென்ற மற்றொரு உருவம் சௌந்தரவடிவின் வீட்டு கொல்லைப்புறம் நோக்கிப் பாய்ந்துசென்று இருளில் மறைவது போன்ற பிரமை பொன்னையன் கண்களில் விழுந்தது. கல்லாகுமாறு சபிக்கப்பட்டவனைப்போல் பொன்னையன் அப்படியே தெருத் திண்ணையில் திகைத்து நின்றுவிட்டான். அதற்குள் சௌந்தரவடிவின் வீட்டு தெருவாசல் கதவு சாத்தப்பட்டு உள்ளே தாழிடப்பட்டு விட்டது! நல்லகாலமாக, கொலை பாவச் செயலினின்றும் பொன்னையன் தப்பினான்!

கொல்லை வழியாக சௌந்தரத்தின் வீட்டிற்குள் நுழைந்த கரிய உருவம் யார்? தெருவாசல் வழியாக சௌந்தரத்தின் வீட்டினுள் நுழைந்த ஆசாமி யார்? இவர்களில் யார் ஜமீந்தார்

மகன்? சரிகை அங்கவஸ்திரத்தையும் மிடுக்கான நடையையும் சௌந்தரம் பரிவுடன் வரவேற்ற பாவனையையும் யோசித்தால், தெருவாசல் வழியாக நுழைந்தவன்தான் ஜமீந்தார் மகன் என்று தோன்றுகிறது. அப்படியானால் கொல்லை வழியாக நுழைந்த உருவம்? ஒருவேளை சிந்தாமணி படத்தில் வரும் 'அப்பன் வருவான், அவன் பின்னால் மகன் வருவான்' என்ற வாசகத்தின் வடிவமாயிருக்குமோ? அல்லது ஜமீந்தார் மகனின் மெய்க்காப்பாளனாயிருக்குமோ? ஒன்றுமே புரியவில்லையே! எல்லாம் மர்மமாக வல்லவோ இருக்கிறது? இவ்வாறு பொன்னையன் பலவாறாக சிந்தித்து மனங்குழம்பினான்.

அன்றிரவு எந்தக் காரியத்தையும் செய்வதற்கு முன்னால் நன்றாக யோசித்து ஆராய்ந்து திட்டமிட்டே செய்ய வேண்டு மென்று எண்ணி சிந்திப்பதற்காகப் படுக்கையின்மீது போய் மறுபடி அமர்ந்தான். ஆனால் தொடர்ச்சியாய் எதையும் சிந்திக்க முடியவில்லை. சௌந்தரத்தின் சிரிக்கும் கண்களும், அதே சமயத்தில் ஜமீந்தார் பேச்சை யெடுத்ததும் கபடமயமாக மாறிய அவளுடைய அனல்கக்கும் விழிகளும் சுழன்று வந்தன. பிறகு ஏங்கித் தவிக்கும் மோகனத்தின் கள்ளங் கபடற்ற கண் களும், சிவக்கண்ணுபிள்ளையின் அர்த்த புஷ்டி நிறைந்த கண்களும் சுழன்றுவந்தன. இப்படி மாறி மாறிப் பொன்னையன் கண்முன் நூறாயிரம் கண்களாக வட்டமிட்டுக் கொண்டிருந்தன. மோகனத்தைப்பற்றி நினைத்ததும் அன்று மாலை நிகழ்ந்த சம்பவம் பொன்னையனுக்கு ஞாபகம் வந்தது.

அன்று காலை சௌந்தரத்தைப்பற்றி மாமா கூறிய பழிச் சொல் உண்மையா என்று ஆராய அவள் வீட்டிற்குச்சென்று, சௌந்தரத்தின் பேச்சு நடவடிக்கைகளினால் மேலும் சந்தேகம் அதிகரிக்கப்பட்டவனாய் திரும்பி வந்த பொன்னையன், "நீங்கள் வராவிட்டாலும் ஜமீந்தார்மகனின் போக்குவரவைத் தடுக்க மாட்டேன் என்று கூறும் இவளும் ஒரு பெண்ணா? சீச்சீ!" என்று அன்று மாலை முழுதும் மனத்திற்குள் உறுமிக்கொண் டிருந்தான்.

சௌந்தரத்தின்மீது அளவற்ற வெறுப்பும் துவேஷ மனப் பான்மையும் கொண்டிருந்த அந்த நேரத்தில் பொன்னையனுக் குக் காபி கொடுக்கவந்த சிவக்கண்ணு பிள்ளையின் மனைவி, அவனிடம், "தம்பி, உன் மாமா நெனப்பு உனக்குத் தெரியு மில? நம்ம மோகனத்தை உன் கையிலே ஒப்பிகக வேணுமினு நினைக்கிறாரு. அவர் நெனப்பை அழிச்சுடாதே தம்பி! வயசான காலத்திலே மனசுடைஞ்சு போயிடுவாரு. அவரு எத்தனையோ

ராப்பகலாக் கஷ்டப்பட்டு உனக்கு சங்கீதம் சொல்லிக்கொடுத் தாரு. நீ நல்லபிள்ளை. அதையெல்லாம் மறந்திட மாட்டே. என பொண்ணு மோகனம் மத்த பெண்ணுகபோலே தளுக்கு மினுக்கு சிரிப்பு குலுக்கு ஒண்ணுமில்லாட்டியும் தங்கமான பொண்ணு. நீ கல்மிஷமில்லாமெ நல்லா வாழணுமினு, எங்க மோகனம் ஒருத்திதான் உன் குடும்பம் நடத்த லாயக்கான பொண்ணு! என்ன தம்பீ, நான் சொல்றது, சரிதானே? நல்லா மாமா பெண்ணைக் கட்டிக்கிறேன்னு வாய்திறந்து ஒரு வாக்கு சொல்லேன். எங்க எல்லார் மனசும் குளிர்ந்து விடும்!'' என்றாள் தழதழத்த குரலில்.

அப்போது பொன்னையன் சௌந்தரத்தின்மீது கொண் டிருந்த சந்தேகத்தாலும் துவேஷத்தாலும், கள்ளங்கபடு இல்லாத மோகனத்தின் தோற்றத்தாலும், ஒத்த பாவனையாக 'உம்' என்று தலையை ஆட்டினான்.

மோகனத்தின் தாய் அளவற்ற மகிழ்ச்சியோடு போய் இந்தச் செய்தியை ஊரெங்கும் பரவவிட்டாள்.

ஆம், மோகனம் ஒரு சூதுவாது தெரியாத பெண்! அவள் அசடாயிருந்தால் என்ன? சிரிக்கும் கண்கள் படைத்த சௌந்தரத்தைக் கட்டிக்கொண்டு சிரிப்பிற்கிடமான மானங் கெட்ட வாழ்க்கை நடத்துவதைவிட மோகனத்தை மணம் புரிவது எவ்வளவோ மேல்! ஆம்! இன்றிரவு எப்படியும் சௌந்தரம் ஜமீந்தார் மகனோடு சரசமாடும் கண்ணராவிக் காட்சியைத் தன் கண்களாலே பார்த்துவிட வேண்டும். கண் முன்னால் பார்த்துவிட்டால் சௌந்தரத்தை அடியோடு மறந்து விடமுடியும். பிறகு மோகனத்தைக் கலியாணம் செய்து கொள்வதைப்பற்றி முடிவு கட்டலாமென பொன்னையன் எண்ணமிட்டான்.

பிறகு சௌந்தரத்தின் வீட்டிற்குள் எப்படி நுழைவது, எப்படி யெப்படி யெல்லாம் துப்பறிவது என்று தான் சிறுவயதில் படித்த துப்பறியும் நாவல்களை யெல்லாம் ஞாபகத்திற்குக் கொண்டுவந்து ஆராய்ந்து பார்த்தான். தான் செய்யப்போகும் துப்பறியும் வேலைகளை யாராவது கவனிப்பார்களோ என்று சுற்றுமுற்றும் பார்த்தான். சிவக்கண்ணு பிள்ளையின் வீட்டில் எல்லோரும் நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தார்கள். மாடி மீதிருந்து ராக ஆலாபனை செய்வதுபோல் தோடி சிவக்கண்ணு பிள்ளை விடும் குறட்டைச் சப்தமும் அதற்கு சுருதி லயம் சேர்ப்பதுபோல் அவருடைய தர்மபத்தினி தூக்கத்தில் பிதற்றும் முனகல் சப்தமும் கலந்து வந்து பொன்னையன் காதுகளில்

நாராசமாய்ப் பாய்ந்தது. அவர்களுடைய செல்வப் புதல்வி மோகனமோ அன்று திட்டு. கொல்லைப்புறமுள்ள அறையில் இழுத்துப் பூட்டிக்கொண்டு படுத்திருப்பாள்!

பொன்னையன் எதிர்வீட்டுக்கு எழுந்து சென்று சாவகாச மாக எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் துப்பறிந்து கொண் டிருக்கலாம்! யாரும் கவனிக்க மாட்டார்கள். இந்த எண்ணத் தோடு பொன்னையன் படுக்கையைவிட்டு எழுந்து பூனைபோல் அடிமேல் அடிவைத்துத் தெருவைக் கடந்து சௌந்தரவடிவின் வீட்டு வலதுபுறத் திண்ணைமீது ஏறினான்.

சௌந்தரவடிவும் அவளுடைய தாயும் வழக்கமாகப் படுக்கும் அறையின் ஜன்னல் அந்த வலது திண்ணைப் பக்க மிருந்தது. பொன்னையன் விரல் நுனியால் இலேசாக மூடி யிருந்த ஜன்னலை மெல்லத் தள்ளி உள்ளே கூர்ந்து நோக்கினான். மாட விளக்கின் சிறு வெளிச்சத்தில் ஒரு பாயின்மீது சௌந்தர வடிவின் தாய் வாயைப் பிளந்துகொண்டு பிணம்போல் தூங்கு வது தெரிந்தது அவளுக்குப் பக்கத்திலிருந்த, சௌந்தரவடிவு வழக்கமாய் படுக்கும் பர்மாப் பாயின்மீது...ஐயோ, அதென்ன அங்கே சௌந்தரவடிவைக் காணோமே!...அவளுக்குப் பதில் ஒரு நீளமான தலைகாணியை வைத்துக் கம்பிளியால் போர்த்தி வைத்துவிட்டுக் கிளம்பிப் போயிருக்கிறாளே! பாசாங்குக்காரி! அதனால்தான் அறையின் விளக்கை இனந் தெரியாதபடி மங்கலாக வைத்திருக்கிறாளோ? ஐயோ, சௌந்தரவடிவு! உன் தாயே மானமிழந்தவள், அவள் கண்ணிலும் நீ மண்ணைத் தூவி விட்டு ஒரு கிராதகனுக்காக நடுச் சாமத்தில் படுக்கையை விட்டுத் திருட்டுத்தனமாய் எழுந்து செல்வதென்றால் அது எவ் வளவு மானமற்ற ஈனமற்ற செயலாய் இருக்கவேண்டும்?

தலையில் முக்காடு போட்டுக்கொண்டு வந்த ஆசாமியும் சௌந்தரவடிவும் அந்தப் பயங்கரமான வீட்டின் எந்தப் பாழான மூலையில் சரசமாடுகிறார்களோ தெரியவில்லையே? பொன்னை யன் தலைரோமங்களைப் பிய்த்துக் கொண்டான். கொல்லைப் புறம்போய்ப் பார்க்கலாமென்று காலடி எடுத்து வைத்தான். ஆனால் அப்போது அவனுக்குக் கபீரென்று பயம் ஒன்று தட்டியது. சில நாழிகைக்கு முன்னால் கொல்லைப்புறம் நோக்கிப் பாய்ந்து சென்ற கரிய உருவம் அந்த ஜமீந்தார்மகனின் மெய்க் காப்பாளனாகவோ விரோதியாகவோயிருந்து, கொல்லைப் புறத்தில் எங்காவது பதுங்கியிருந்து, தான் வருவதைப் பார்த்த தும் தன் மென்னியைப் பிடித்துத் திருகிவிட்டால் என்ன செய்வது என்று பயந்தான். ஆனால் தன் காதலுக்குரியவள்

மாசுடையவளா மாசற்றவளா என்று தெரியாமல் சந்தேகப் பட்டுப் பல தடவைகள் செத்துக்கொண்டிருப்பதைவிட ஒரே தடவையில் குத்துண்டு சாவது மேலென்று பொன்னையனுக்குப் பட்டது. சாகத் துணிந்தவனுக்குச் சமுத்திரமும் முழங்கால் அளவுதானே? அதனல் முன் வைத்த காலை பின் வைக்காமல் சுற்றுமுற்றும் இருட்டில் கண்களை செலுத்திய வண்ணம் உடம் பெல்லாம் வெட வெடவென்று நடுங்க ஒரு வழியாக கொல்லைப் புறத்தை அடைந்தான் பொன்னையன். பிறகு மெல்ல கொல்லைக் கதவின்மீது கைவைத்து அழுத்தினன்.

மாட்டுக் கொட்டகையிலிருந்த பசுமாடு 'அம்மா' என்று அலறியது பொன்னையனுக்குத் தூக்கி வாரிப்போட்டது. கருங்கும்மென்ற இருட்டு, சுவர்க் கோழிகளின் கிரீச் கிரீச் சென்ற சப்தம், கரிய உருவம் எந்த நேரம் தன்மீது பாய்ந்து பிச்சுவாக்கத்தியால் குத்துமோ என்ற பீதி, எமன் வருகையை நினைவூட்டுவதுபோல் 'அம்மா' என்று பரிதாபகரமாக அலறும் பசுமாட்டின் குரல் எல்லாம் சேர்ந்து, தலையை ராட்டினத்தில் வைத்துச் சுற்றுவதுபோன்ற உணர்ச்சியை பொன்னையனுக்கு உண்டாக்கியது. ஆனலும் அவன் நடுங்கிய கரங்களை எடுக்காமல் என்ன வந்தாலும் வரட்டும் என்று கதவை உட்புறம் நோக்கித் தள்ளினன்.

ஆனல் கதவு திறக்கவில்லை, உட்புறம் அது தாளிடப் பட்டிருந்தது! இனி என்ன செய்வது? வீட்டிற்குள் நுழைய வழியில்லையே? ஒரு வேளை தன் உள்ளத்தைக் கவர்ந்திருந்த சௌந்தரவடிவோடு ஜமீந்தார்மகன் சரசமாடும் துர்ப்பாக்கிய மான காட்சியைப் பார்க்க முடியாது போய்விடுமோ? நெற்றி யில் திரண்ட வியர்வை யெல்லாம் வியர்த்தமாகிவிடுமோ? கருங் கும்மென்ற இருட்டில், பூச்சிப்பொட்டு ஊரும் நேரத்தில் கதவுக்கு முன்னல் நின்று கொண்டிருப்பதால் என்ன பிரயோ ஜனம்? திரும்பிப் போய் விடலாமா என்று பொன்னையன் நினைத்தான். அப்போது வீட்டிற்குள்ளிருந்து கொல்லைப்புறக் கதவை நோக்கி யாரோ இருவர் மெல்ல வரும் காலடி ஓசைகள் கேட்டன. பொன்னையனின் சப்த நாடியும் ஒடுங்கியது! கதவருகிலே கற்சிலைபோல் சமைந்து நின்றன்!

கதவுப்புறம் நோக்கி வந்த காலடி ஓசைகள் கதவுக்கு உட்புறமுள்ள சமையற்கட்டுக்குள்ளேயே நின்றுவிட்டன. காலடி ஓசைகளோடு வளையல்கள் குலுங்கும் ஓசையும், தீக் குச்சியைக் கிழித்து அரிக்கேன்லாந்தரை ஏற்றும் ஓசையும் பொன்னையன் காதில் விழுந்தன. திக்பிரமையோடு பொன்னை

யன் கதவின் சாவித் துவாரத்தின் வழியாக உள் கூடத்தை ஊடுருவிப் பார்த்தான்.

மங்கலான வெளிச்சத்தில் கொஞ்ச நேரம் கழித்து ஒரு சமயம் செளந்தரவடிவின் கவலை தோய்ந்த முகமும், கொஞ்ச நேரங் கழித்து பேனுக் கீரல்போல் அழகான சிறு நறுக்கு மீசையுள்ள ஒரு யெளவன புருஷனின் பீதி நிறைந்த முகமும் தெரிந்தது. அந்த வாலிபன்தான், அந்த அயோக்கியன் ஜமீந்தார் மகன் சின்னத்தம்பியாக இருக்க வேண்டும்! அந்தக் கிராதகனும் பாசாங்குக்காரக் கள்ளி செளந்தரவடிவும் சமையற்கட்டைச் சரசகூடமாக மாற்ற அங்கே வந்திருக்கிறார்கள் போலும்! பாப ஜென்மங்கள்! என்றெல்லாம் பொன்னையன செளந்தரவடிவை நூறுயிரம் தடவை மனதிற்குள் சபித்துக்கொண்டான். அதற்குப் பிறகு சாவித் துவாரத்தின் வழியாக ஒன்றும் தெரியவில்லை. மேலும் ரஸபேதமான காட்சிகளைப் பார்ப்பதற்குள் அந்தப் பாசாங்குக்காரி கூடத்திலிருந்த அரிக்கனலாந்தரை ஊதி அணைத்துவிட்டாள். பொன்னையன் கண்களில் நூறுயிரம் தேள்கள் சேர்ந்தாற்போல் கொட்டுவது போன்ற வேதனை உண்டாயிற்று!

அதற்குப் பிறகு கொஞ்ச நேரம் கூடமெங்கும் நிசப்தம் நிலவியது. சில நாழிகைகளுக்குப் பிறகு குறுக்கும் நெடுக்கும் நடக்கும் காலடி ஓசைகளும், பெருமூச்சுகளும் குசுகுசுவென்று பேச்சுக் குரல்களும் கேட்டன. யாரோ ஒரு பெண் துக்கம் தாளாமல் மெல்ல விம்மி அழுவதுபோன்ற சப்தம் கேட்டது. செளந்தரவடிவு ஏன் அழுகிறாள்? ஜமீந்தார் மகனிடம் ஏதாவது நகைகள் பறிக்கலாமென்ற சாகஸமா? அதற்குள் அந்த ஆடவனும் அவளும் ரகசியமாகப் பேசும் சம்பாஷணைகள் பொன்னையன் காதுகளில் விழுந்தன. பொன்னையன் சாவித் துவாரத்தின் மீது வைத்த காதுகளை எடுக்காமல் மிகவும் உன்னிப்பாய் கவனித்தான்.

"ஏன் முத்து இப்படி அழுகிறே? பார் அழுது அழுது உன் தொண்டையெல்லாம் கட்டிப் போயிருக்கு. நான்கூட அடையாளம் தெரிந்துகொள்ள முடியாதபடி உன் உடல் மட்டுமல்ல உன் குரல்கூட மாறிப்போயிருக்கிறதே?" என்றான் ஜமீந்தார் மகன் சின்னத்தம்பி.

"பின்னே பெண் ஜன்மம் வேறே என்ன செய்யமுடியும்?" என்றாள் அந்தப் பாசாங்குக்காரி அழுது அழுது தொண்டை கட்டிய குரலில்,

"அழாதே, முத்து! நானும் எத்தனையோ பெண்களோடு பழகியிருக்கிறேன். முன்பெல்லாம் எவளாவது என் கண் முன்னால் அழுவதைப் பார்த்தால், 'சீச்சீ, நீ மகா பதிவிரதை தான்! அழுது பிராணனை வாங்காமல் தொலையடி!' என்று காட்டுமிராண்டிபோல் சொல்லியிருப்பேன். ஆனால் இப்போது நீ விம்மி விம்மி அழுவதைப் பார்த்தால் என் மனசு கேட்க வில்லை. முத்து அழாதே!" என்றான் சின்னத்தம்பி மிகுந்த பரிவோடு.

"என்னை நீங்கள் எந்தக் காலத்திலும் கைவிட மாட்டீர்களே" என்றாள் அவள் நம்பிக்கையும் அவநம்பிக்கையுங் கலந்த குரலில்.

"அதைக் கனவிலும் நான் நினைக்கமாட்டேன், முத்து! சென்ற வருஷம் உன்னைச் சந்தித்தது, என்னுடைய புனர் ஜன்மத்திற்கு வழியாயிற்று. உன் கள்ளங் கபடற்ற அன்பைப் பெற்ற பிறகு மிருகமாயிருந்த நான் மனிதனாகிவிட்டேன்! உன்னோடு பழகிவந்த பிறகு என் சுபாவமே அடியோடு மாறி விட்டது, முத்து! இந்த உலகத்தில் உன்னைத் தவிர வேறு எந்தப் பெண்ணுக்கும் என் மனசில் இடமில்லை. இதை நீ பரிபூர்ணமாக நம்பலாம். நீ என வாழ்வைப் புதிய வழியில் திருப்பிய விலை மதிப்பற்ற மாணிக்கமல்லவா? உன்னை நான் எப்படி கைவிட நினைப்பேன? நீயே சொல், என் உள்ளந்தான் உனக்குத் தெரியுமே, முத்து?" என்றான் சின்னத்தம்பி.

அந்தக் கிராதகன் சௌந்தரவடிவை ஏன் ஓயாமல் முத்து முத்து எனக் கூப்பிடுகிறான் என்று யோசித்துக் கொண்டிருந்த பொன்னையனுக்கு, முத்து என்பது சின்னத்தம்பி சௌந்தரத் திற்கு இட்ட ஆசைப் பெயராயிருக்கலாம் என்று தோன்றியது! அந்தப் பெண்ணின் கரகரத்த குரல் மறுபடி கேட்டது.

"நான் மிகவும் கொடுத்து வைத்தவள்! எந்தப் பெண் ணும் அடைய முடியாத உங்கள் அன்பைப் பெற்றுவிட்டேன். அதோடு மட்டுமல்ல. சோளபுரம் ஜமீந்தாருக்கு என் மூலமாக ஒரு புத்திரன் பிறக்கப்போகிறான்! இது சந்தோஷப்பட வேண்டிய விஷயமானாலும், கலியாணமாவதற்குள் தாய் ஆவதைப்போன்ற துர்ப்பாக்கியமும் அவமானமும் பெண் களுக்கு வேறில்லை......" என்று விம்மினாள், துக்கம் தாளாமல்!

"முத்து, குழந்தை எப்போது பிறக்கும்?"

"அதை யார் நிச்சயமாகச் சொல்லமுடியும்? இன்னும் எட்டு மாதம் போனால் குழந்தை பிறந்துவிடக் கூடும்! இந்த

இரண்டு மாத காலமாக என் அம்மாவைத் தந்திரமாக ஏமாற்றிக்கொண்டு வருகிறேன். ஆனால் இன்னும் எத்தனை மாதந்தான் என் அம்மாவையும் ஊரார் கண்களையும் ஏமாற்ற முடியும்? நாலு மாசம் கழிந்தால் என் கதியென்ன ஆகும்? உங்கள் காலில் விழுந்து கும்பிடுகிறேன். நான் அவமானப் படுவதற்குள் உடனே நல்லதொரு முகூர்த்தத்தில் எனக்குத் தாலி கட்டி என்னை உங்கள் மனைவியாக அங்கீகரித்து விடுங்கள்!"

"அது முடியாத காரியம் முத்து. ஒரு ஜமீந்தார் மகன் ஜாதி விட்டு ஏழைப் பெண்ணைக் கலியாணம் செய்துகொள்ளு கிறானே என்ற ஊரார் கேவலப் பேச்சைக்கூட நான் பொருட் படுத்தமாட்டேன். ஆனால் என் மனைவி இன்னும் உயிரோடு இருக்கிறாள்! காசநோயால் படுத்தவள் இன்று சாவாளோ நாளை சாவாளோ என்று ஒவ்வொரு நாளும் ஆவலோடு எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறேன். அவள் சிட்டாபுரம் ஜமீந் தாரின் ஒரே மகள். அவள் இறந்தால் அவள் சம்பந்தமாக வுள்ள ஏராளமான சொத்து பத்துகள் ரொக்கமாக என் கைக்கு கிடைத்துவிடும்! அவள் இறப்பதற்கு முன்னால் நான் வேறு கல்யாணம் செய்துகொள்வதற்கு அந்தப் புத்திகெட்டவள் ஒரு நாளும் சம்மதிக்க மாட்டாள். மீறிச் செய்தால், வரவேண் டிய அவளுடைய தாய் வீட்டு சொத்துக்கள் கிடைக்காமல் போவதோடு, வெளியே பகட்டாக இருக்கும் இந்த சோளபுரம் ஜமீனின் பெரும்பாகமும் அவளுடைய தாய் வீட்டார் வசமுள்ள கடன்களுக்கு ஈடாக வேண்டியிருக்கும். இந்த நிலையில் நான் எப்படி உன்னைக் கலியாணம் செய்துகொள்ள முடியும்? நீயே சொல்லு!"

"அப்போ என் கதி?"

"சில மாதங்கள் பொறுத்திரு. என் சம்சாரத்தின் உயிர் நாலைஞ்சு மாதம் நிலைக்கிறதே அதிர்ஷ்டம் பாக்கியமென்று டாக்டர்கள் சொல்லுகிறார்கள்...!"

"ஐயோ, வயிற்றில் குழந்தையில்லாவிட்டால் எவ்வளவு வருஷங்கள் வேண்டுமானாலும் பொறுத்திருப்பேனே! கடவுள் சோதிக்கும் இந்த நிலையில் நாலைஞ்சு மாதங்கள் எப்படி பொறுத்திருக்க முடியும்? அதுவும் என் அம்மா காப்புக் கட்டுத் தடைமுடிஞ்சு திருவிழா கழிச்ச அடுத்த முகூர்த்தத்திலேயே என்னை 'அவருக்குக்' கலியாணம் செய்துகொடுத்துவிட தீர்மானித்திருக்கிறாள்."

"யார், அந்தப் பொன்னையனுக்குத்தானே? அவனுக்குத் தான் உடனே உன்னைக் கட்டிவைத்துவிட வேண்டுமென்று உன் அம்மா ஏன் அப்படி முனைந்து நிற்கிறாள்?"

"அவர் வாசிப்போடு என் வாசிப்பும் சேர்ந்தால் ஊரெல் லாம் ஒரே அமர்க்களமாயிருக்குமே, பெரிய பெரிய சமஸ் தானங்களிலெல்லாம் பேரும் புகழும் ஏறுமே என்ற எண்ணந் தான்! அவரைவிட பொருத்தமான மாப்பிள்ளையாக எனக்கு வேறு யார் கிடைப்பாங்க? அந்தக் காரணந்தான் எங்கள் இருவர் கலியாணத்திற்கும் என் அம்மா அவசரப்படுவது!"

"முத்து எனக்கு என்ன செய்வது, என்ன சொல்லுவது என்றே புரியவில்லை! இன்னும் இரண்டு நாள் போகட்டும், தீர யோசித்து என் முடிவைச் சொல்லியனுப்புகிறேன்."

"நன்றாக நாலையும் சீர்தூக்கிப் பார்த்து, என் மனசைக் குளிரச் செய்யுற முடிவாச் சொல்லியனுப்புங்கள். உங்களுக் குக் கோடிப் புண்ணியமுண்டு!"

"ஒரு வேளை நான் சொல்லியனுப்பும் முடிவு உனக்குப் பிடிக்காததாயிருந்தால்...?"

"வேறே என்னால் என்ன செய்ய முடியும்? நீங்கள் கலியாணம் செய்துகொள்ள முடியாது என்றால் விதியே என்று அவரைப் (பொன்னையனை) நானே வலியக்கவாவது போய் கலியாணம் செய்துகொள்வேன். என் பாபகரமான வாழ்வு எக்கேடு கெட்டாலும் என் வயிற்றில் பிறக்கப் போகும் ஒரு பாவமும் அறியாத சிசுவுக்கு அப்பா என்று அழைக்க ஒரு பெயர் வேண்டும்!"

"அதனால் உன் வாழ்வு நிம்மதியடைந்து விடுமா, முத்து?"

"அந்தக் கள்ளங்கபடற்ற பிரபல நாதஸ்வர வித்வான் ஊதும் அபூர்வமான அன்பின் நாதஸ்வர ஓசையில் என் மனப் பாம்பு அடியோடு அடங்கிவிடும்!"

"சரி முத்து, விடியப் போகிறது! ஊர் விழிப்பதற்குள் நான் இந்த இடத்தை விட்டு அகல வேண்டும்! நான் போய் வருகிறேன. இருக்கும் நிலைமைகளை அனுசரித்து நான் அனுப் பும் தகவல்களைக் கேட்டுக்கொண்டு பிறகு நீ பொன்னையனைக் கலியாணம் செய்துகொள்வதைப் பற்றி முடிவு செய்யலாம்!" என்றான் சின்னத்தம்பி முடிவாக. அந்தப் பாசாங்குக்காரி அழுது அழுது மேலும் கண்களில் நீர் ஊராத காரணத்தால் ஓய்ந்துபோய், அரிக்கேன் விளக்கை ஏற்றினாள்.

சிறிது நாழிகை கழித்துப் பொன்னையன் கதவுச் சாவித் துவாரத்தின் வழியாக உள்ளே கூர்ந்து நோக்கினான். அப்போது அவன் கண்ட காட்சி!

நாலு விரல்களிலும் வைர வைடூரிய மோதிரங்களணிந்த ஜமீந்தார் மகனின் முரட்டுக்கை, கறுப்பு வளையல்கள் அணிந்த ஒரு பெண்ணின் கையொன்றைப் பற்றியிழுத்து, பச்சைக்கல் மோதிரம் ஒன்றைக் கழற்றி அவள் கைவிரல் ஒன்றில் மாட்டுவது தெரிந்தது. அதோடு, "'முத்து' ஒரு வேளை நீ பொன்னையனைக் கலியாணம் செய்துகொள்ள நேர்ந்தாலும், என் ஞாபகார்த்தமாக இந்த மோதிரம் உன்னிடம் என்றுமிருக்கட்டும்!" என்றான் சின்னத்தம்பி!

எண்ணெய் கொப்பரையின் கடைசி உஷ்ணமும் ஏறி தலை மீது கவிழ்ந்து விழுந்த நிலையை அடைந்தான் பொன்னையன். அதற்கு மேல் அவனால் அந்த இடத்தில் நிற்க முடியவில்லை! "சீச்சீ, இந்த மானங் கெட்ட சௌந்தரவடிவை அடியோடு மறந்துவிட வேண்டும்! கள்ளங் கபடு தெரியாத மோகனத்தைத் திருவிழா முடிந்த மறுநாளே கலியாணம் செய்து கொண்டு நிம்மதியாக கலகாபாத் சமஸ்தானத்திற்குப் போய் விட வேண்டும்!' என்று தீர்மானித்தான். கோலால் குத்தி விட்ட பாம்புபோல் மனத்திற்குள் சீறிக்கொண்டே சிவக்கண்ணு பிள்ளையின் வீட்டுத் தெருத் திண்ணைக்குத் திரும்பி வந்து தன் படுக்கையில் படுத்துக்கொண்டான்!

அத்தியாயம்: 8

## பொறுமையும் போட்டியும்!

*மீன் விழியாளே உனக்கா இந்தத் துடுக்கு?*
*விரலத்தனையுண்டு, ஏனிந்த முடுக்கு?*

பொன்னையன் ஏதோ ஒரு துர் சொப்பனம் கண்டவன் போல் கண் விழித்தான். நேற்றைய இரவுச் சம்பவங்கள் முழுதும் தூங்கும் வீணையிலிருந்து கிளம்பும் கோர இசைகள் போல் அவன் மனதில் சுழன்று சுழன்று வந்தன. சௌந்தரவடிவின் சமையலறையில் அவளும் ஜமீந்தார் மகன் சின்னத்

தம்பியும் பேசிக் கொண்டிருந்த காட்சி பொன்னையன் மனதில் ஒரு பயங்கரமான பேய்க் கனவாகத் தோன்றியது. சேச்சே! எவள் கள்ளங்கபடற்றவள் என்று எண்ணினனே, எவள் தன் இதய ராணியாகமட்டுமல்ல, தன் நாயன வாசிப்புக்கும் இணையற்ற ஜோடியாக விளங்குவாள் என்று ஆகாசக் கோட்டைகள் கட்டினனே, அந்தச் சௌந்தரவடிவு கேவலம் ஒரு தாசிப் பெண் போல் பணத்தாசையால் ஜமீந்தார் மகனோடு தொடர்பு வைத்துக் கொண்டு பாபத்தின் சின்னமாக வயிற்றில் இரண்டு மாதக் குழந்தையைச் சுமந்து கொண்டிருக்கிருள்! அது வெளியே தெரியுமுன், ஜமீந்தார் மகன் பலரறிய தன்னை மணம் புரிய மறுத்துவிட்டால், வலியவாவது பொன்னையனைக் கலியாணம் செய்து கொள்ள நினைக்கிருள்! அதை எண்ணி எண்ணி பொன்னையனுக்கு அளவு மீறிய ஆத்திரமுண்டாயிற்று. 'சதிகாரி! பழியின் சின்னமாகப் பிறக்கப்போகும் பிள்ளைக்கு ஒரு தகப்பன் பெயரைக் காட்ட நான்தான் ஒரு இளிச்சவாயன உனக்கு அகப்பட்டேனே' என்று உள்ளத்திற்குள் உறுமினன். பொன்னையனுக்குச் சௌந்தரவடிவைத் துண்டம் துண்டமாய் வெட்டிச் சித்திரவதை செய்யவேண்டுமென்ற ஆத்திரம் கிளம்பியது. எப்படியாவது அந்தச் சதிகாரக் கள்ளியைப் பழி வாங்க வேண்டுமென்று துடித்தான். அதற்குத் தூபம் போடுவது போல் அப்போது அவனுடைய மாமா தோடி சிவக் கண்ணுபிள்ளை அவனிடம் வந்து சௌந்தரவடிவின் பேச்சை எடுத்தார்.

"தம்பீ! நாளான்னைக்கி நம்மூர்லே ஆருந்திருவிழாவில!"

"ஆமா, அதுக்கென்ன, மாமா?"

"அன்னைக்கி நம்ப குளத்துமலையிலே திருவிழா ரொம்ப விசேஷமாக இருக்கும். வளரொளிநாதஸ்வாமியும் வடிவுடையா அம்மனும் வெள்ளி ரிஷப வாகனத்திலே எழுந்திரா நடக்கும். அன்னைக்கினு ஸ்பெஷலா திருப்பூர் வேதமுனி பேண்டு, கும்பகோணம் தேசிகர் தேவாரம், தஞ்சாவூர் சுசீலா சதுர்க் கச்சேரி, நம்ப சௌந்தரவடிவின் நாதஸ்வரக் கச்சேரி எல்லாம் ஒரே அமர்க்களமாயிருக்கும்!" என்ருர் சிவக்கண்ணுபிள்ளை பொன்னையனைக் கூர்ந்து பார்த்துக் கொண்டே.

"மாமா! யாரைப்பற்றி வேண்டுமானலும் சொல்லுங்க. அந்த மோசக்காரி சௌந்தரவடிவின் பேச்சைமட்டும் எடுக்காதீர்கள்!" என்ருன் பொன்னையன் ஆத்திரமும் அழுகையும் கலந்த குரலில்.

"என்ன தம்பி, அப்படிச் சொல்லுறே? செளந்தரவடிவு நாயனம் வாசிக்கிறான்னு, ஊர் பக்கத்திலேயிருக்கெல்லாம் நம்ப குளத்து மலைக்கு ஜனங்கள் திரண்டு வருவாங்களே!"

"காவாலித்தனமான சினிமாப் பாட்டுகளைப் பாடினு, அதுவும் ஒரு பொம்பிள்ளை, ஏன் ஜனங்க வந்து மொண்டமாட்டாங்க!"

"தம்பீ, நீ நினைக்கிறது தப்பு! ஈாமா சோமான்னு சினிமாப் பாட்டுகளைப் பாடி அந்தச் செளந்தரவடிவு நம்மூர் ஜனங்களை ஏய்ச்சிவிட முடியாது! கர்ண பரம்பரையாகவே நம்ப குளத்துமலை கர்நாடகமான சங்கீதத்துக்குப் பேர்போன ஊரு. ஞான பூர்வமான சங்கீதம் தெரிஞ்சவங்களுக்குத்தான் நம்மூர் திருவிழாக்களிலே கச்சேரி செய்ய இடம் கொடுப்பாங்க. அதுவும் விசேஷமான ஆருந்திருவிழாவிலே செளந்தரவடிவின் நாதஸ்வரமினு அவள் வாசிப்பு எவ்வளவு உயர்ந்த ரகமாயிருக்குமினு நீ நெனச்சுப் பாக்கணும்! செளந்தரம் சினிமாப் பாட்டுகள் மட்டும்தான் வாசிப்பான்னு நீ நெனச்சுகிட்டு இருக்கே. அவள் பலே கைகாரி. ஊருக்குத் தகுந்தாப் போலே வாசிச்சுப் பேரை வாங்கிக் கொண்டு போய் விடுவாள்!"

"அந்தப் பேரும் புகழும் எத்தனை நாளைக்கினு பாக்கறேன்!"

"அதுதானே பாத்தேன்! தம்பீ, ரொம்ப நாளா உன் கிட்டே ஒண்ணு சொல்லணும்னு நெனச்சேன். ஆனு நீ என்ன நெனப்பாயோன்னு பேசாமல் இருந்துவிட்டேன்."

"சும்மா தாராளமா சொல்லுங்க, மாமா!"

"ஒண்ணுமில்லே, தம்பீ! அபூர்வமா வாசிக்கிறவங்களெல்லாம் இருந்த இடம் தெரியாமெ அமுங்கிக் கிடக்கிருங்க. கொஞ்சம் சங்கீத ஞானமும் பேரும் வந்து விட்டதென்று செளந்தரவடிவு எவ்வளவு தலைக்கிறுக்காய் திரிகிருள், பாத்தியா? அவள் கர்வத்தை அடக்க பொன்னையனுலேதான் சாத்தியமினு நம்ப ஊர் வட்டாரத்திலே ஞானஸ்தர்கள் எண்ணிக்கிட்டு இருக்காங்க."

"அதுக்கென்ன, மாமா! சந்தர்ப்பம் வர்றபோது செளந்தரவடிவின் வாசிப்பை மட்டமினு பேராக்கிவிடுகிறேன்!"

"தம்பீ, இன்னைக்கிக் காலையிலே கோயில் பக்கம் போயிருந்தேன். நம்பவங்களிலே தலையா நிக்கிற சில பெரியவங்க

என்னிடம் வந்து, 'ஆரூர் திருவிழாவிலே சௌந்தரத்துக்குப் போட்டியா பொன்னையனை வாசிக்கச் சொல்லு. அவங்க ரெண்டு பேரும் வாசிக்கிற பாணி கிட்டத்தட்ட ஒண்ணு போலே இருக்கும். பொன்னையனுக்கும் ஜனங்களிடையே நல்ல மதிப்பு இருக்கு. அது சிரத்தை யெடுத்து போட்டியா வாசிச்சா சௌந்தரத்தின் வாசிப்பை மட்டமாக்கி விடலாம்னு' சொன்னுங்க. அதற்கு நீ ஒத்துக்குவாயோ மாட்டாயோன்னு சொல்லிட்டு வந்தேன்."

"அதுக்கென்ன, மாமா? பேஷா ஒப்புக்கொள்கிறேன்! நீங்க அதுக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்துவிடுங்க. ஆரூர் திருவிழாவிலே போட்டி நாயனத்திலே சௌந்தரத்தின் வாசிப்பை மட்டமினு பேராக்கிறதுக்கு நாளுச்சு!" என்று உறுதி கொடுத்தான் பொன்னையன். தோடி சிவக்கண்ணு பிறவியெடுத்ததன் பயனை அன்றுதான் அனுபவிப்பவர் போல் ஆனந்தமடைந்தார்.

ஆரூர் திருவிழாவிலே சௌந்தரவடிவோடு பொன்னையன் போட்டி நாயனம் வாசிக்கப் போகிறுன் என்ற ரகசியமான செய்தி முதலில் சிவக்கண்ணு பிள்ளையின் வீட்டில் கதவிடுக்கிலிருந்து ஒட்டுக் கேட்டுக் கொண்டிருந்த மோகனம், அவளுடைய தாய், என்ற இரண்டு ஸ்திரீகளுக்குத் தெரிந்தது. பிறகு மூணேமுக்கால் நாழிகைக்குள் அந்த ரகசியம் ஊரெங்கும் பரவிவிட்டது!

பொன்னையன் தனக்குப் போட்டியாக நாயனம் வாசிக்கப் போகிறுன் என்ற செய்தியை அறிந்ததும் சௌந்தரவடிவு சில நிமிஷங்கள்வரை திக்பிரமை பிடித்தவள் போல் உட்கார்ந்துவிட்டாள். ஆயிரம் நாயனங்களை அவள் காதருகில் வைத்து அபஸ்வரமாக ஊளையிடுவது போலிருந்தது அந்தச் செய்தி. சௌந்தரவடிவின் கண்களில தாரை தாரையாக நீர் வடிந்தது. எவன் தன் நெஞ்சைக் கொள்ளை கொண்டானே, எவன் தன் வாயால் சொல்லாவிட்டாலும் வாஞ்சை ததும்பும் பார்வையால் தன் காதலை வெளியிட்டானே, எவனை மணந்து வாழ்வு முழுதும் ஆனந்தமாக ஜோடி நாயனம் வாசிக்கலாம் என்று ஆசைப்பட்டாளோ, அந்தப் பொன்னையன் இன்று தனக்குப் போட்டியாக திருவிழாவிலே நாயனம் வாசித்துத் தன் புகழுக்குச் சமாதி தோண்ட முன் வந்திருக்கிறுன். அதை நினைக்க நினைக்க சௌந்தரத்திற்கு அழுகையும் ஆத்திரமும் பீரிட்டுக் கொண்டுவந்தது. அன்று தன்னுடையஒரு கடைக்கண் பார்வைக்காக எந்த விண்ணையும் சாடத் தயாராயிருந்த அதே

பொன்னையன் இன்று இவ்வளவு தூரம் தன்னை வெறுப்பதற்குக் காரணமென்ன? தன் தாய்க்கு சோளம்பட்டிப் பெரிய ஜமீன்தாரோடும் தனக்கு ஜமீன்தார் மகனோடும் தொடர்பு இருக்கிறது என்று பொன்னையன் நிச்சயமாகச் சந்தேகப்படுகிறான்! பொன்னையன் எவ்வளவு வற்புறுத்தியும் ஜமீன்தார் மகன் தன் வீட்டிற்கு வரப்போக இருப்பதை நிறுத்த முடியாது என்று அவள் சொன்னது அவனுக்குக் கோபத்தை உண்டாக்கியிருக்க வேண்டும். அந்தக் கோபத்தாலும் பொறுமையாலுந்தான் பொன்னையன் தன்னை இவ்வாறு பழி வாங்கத் தீர்மானித்திருக்கிறான் என்று சௌந்தரம் யூகித்தாள். இனிமேல் என்ன செய்வது?

போட்டி நாயனத்தை நிறுத்த வழியில்லை. அன்று மாலை கோயில் காரியஸ்தர்களோடு ஊரில் உள்ள சில பெரிய மனுஷர்கள், சிவக்கண்ணு பிள்ளையின் வீட்டிற்கு வந்து, தன்னைக் கூப்பிட்டனுப்பி பொன்னையனோடு போட்டியாக நாயனம் வாசிக்கச் சம்மதமா என்று கேட்கப்போகிறார்கள். அதற்கு என்ன பதில் சொல்வது?

சௌந்தரத்திற்கு ஒன்றும் புரியவில்லை. தலை சுற்றுவது போலிருந்தது. வெகு நேரம் பல வழிகளையும் யோசித்துப் பார்த்தாள்.

கடைசியில் ஒரு தீர்மானத்துக்கு வந்தவளாய், சிவக்கண்ணு பிள்ளையின் மகள் மோகனத்தை வரவழைத்து, நீண்டதோர் கடிதமெழுதி அவளிடம் கொடுத்து, சாயங்காலம் கோயில் காரியஸ்தர்கள் மோகனத்தின் வீட்டிற்குவந்து தன்னைக் கூட்டி வரச் சொன்னால், அவர்களிடம் அந்தக் கடிதத்தை வாசித்துக் காட்டும்படி கூறினாள்.

சௌந்தரவடிவோடு மோகனம் பல விஷயங்களையும் பற்றி அந்தரங்கமாய் வெகு நேரம் பேசிவிட்டு அவள் கொடுத்த அந்தக் கடிதத்தை வாங்கிக் கொண்டு போனாள். போகும் போது, "போட்டியினா என்ன, உனக்குப் பிரமாதமா? பயப்படாமெ நீ நாயனம் வாசியக்கா! உனக்கு பக்கபலமா நான் தவிலை வெளுத்து வாங்கிவிடுகிறேன்!" என்று உற்சாக மூட்டிச் சென்றாள் மோகனம்.

அன்று மாலை சிவக்கண்ணு பிள்ளையின் தெரு வாசல் திண்ணையில் கோயில் காரியஸ்தர்களும் ஊரிலே பிரபலமான சில பெரிய மனிதர்களும் வந்து உட்கார்ந்தார்கள். சில மணி நேரம் ஊர் நடப்பு உலக விஷயங்களையெல்லாம் பேசிவிட்டு,

ஆரூர்திருவிழாவிலே போட்டி நாயனம் வாசிக்க ஒப்புக்கொண்ட பொன்னையனைப் பாராட்டிப் பேசி, சௌந்தரவடிவைக் கூப்பிட்டனுப்பும்படி சிவக்கண்ணு பிள்ளையிடம் சொன்னார்கள்.

"மோகனம்! இங்கே வாம்மா! எதிர்த்த வீட்டுக்குப் போய் நம்ப சௌந்தரவடிவை சித்தே இங்கே கூட்டி வா!" என்றார் பிள்ளை.

"அப்பா! சௌந்தரம் இங்கே வரவில்லையாம். அதுக்குப் பதில் இந்தக் கடிதத்தை வந்திருக்கறவங்களிடம் கொடுன்னு சொல்லிச்சு, அப்பா!" என்று ஒரு கடிதத்தை அவரிடம் நீட்டினாள்.

பொன்னையன் உள்பட அங்கு இருந்த அனைவரும் சற்று திகைத்தார்கள்.

"அதென்ன கடிதம், மோகனம்?" என்று சிவக்கண்ணு பிள்ளை கேட்டார். "எனெக்கென்ன தெரியும்? மத்தியானமா சௌந்தரத்தின் வீட்டிற்குப் போயிருந்தேன். இந்தக் கடிதத்தைத் தயாராய் எழுதி வைச்சிருந்து, 'என்னைக் கூப்பிடச் சொன்னா இந்தக் கடிததத்தை உடைச்சு எல்லோருடைய காதிலும் விழும்படி வாசி'யினு சொல்லிச்சு! அவ்வளவுதான் எனக்குத் தெரியும்!" என்றாள் மோகனம்.

"நாலு பெரியவங்க இருக்கிற சபையிலே, வந்து பதில் சொல்லாமே கடுதாசி எழுதிக் கொடுத்தனுப்பியிருக்கிறாளே, பெரிய சீமையிலே இருந்து வந்து இறங்கினவள் மாதிரி! பெண் பிள்ளை தலைகிறுக்குங்கிறது சரியாய்த்தானிருக்கு!" என்று சிவக்கண்ணுபிள்ளை சுருதியை முடுக்கினார்.

"சரி, அந்தக் கடிதத்தை நீயேதானே உடைச்சு தெளிவாப் படியம்மா!" என்றார் ஊரிலே மிகவும் நியாயஸ்தர் என்று பெயருள்ள ஆதிகேசவம் பிள்ளை.

மோகனம், சௌந்தரவடிவின் கடிதத்தை உடைத்துப் படித்தாள்.

அந்தக் கடிதத்தின் சாராம்சமாவது:

"பெரியவர்கள் என்னை மன்னிக்க வேண்டும். நான் பெண் பிள்ளை. மனதில் உள்ள எதையும் வெளியே சொல்லக் கூச்சப்பட்டவள். நாலு ஆண் பிள்ளைகள், பெரிய மனிதர்கள் முன்னிலையில் எதையும் தைரியமாகச் சொல்ல வாய் வராதவள்.

"ஆரூர் திருவிழாவில் போட்டி நாயனம் வைப்பது பற்றி எனக்குச் சிறிதும் ஆட்சேபணை இல்லை. பிரபல சமஸ்தான வித்வானுன இசைச் சக்கரவர்த்தி திரு. பொன்னையா பிள்ளையின் திறமையையும், என்னைப் போல், கேவலம் ஒரு பெண் பிள்ளையின் திறமையையும் சோதிப்பது போல் போட்டி நாயனம் வைப்பதில் எனக்குப் பெருமையே தவிர, இகழ்ச்சியோ பயமோ எனக்கு லவலேசமும் இல்லை.

"சொந்த வியவகாரங்களில் எனக்கும் பொன்னையா பிள்ளைக்கும் எவ்வளவோ விரோத பாவங்களும் மனக் கசப்புகளுமிருக்கலாம். அவற்றை கலைத் துறையில் காட்டுவது சரியல்ல என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம்.

"பொன்னையா பிள்ளை என் மீதுள்ள விரோதத்தைக் காட்ட விரும்பினுல் தாராளமாக ஆரூர் திருவிழாவில் நாதஸ்வரப் போட்டியில் தன் திறமை எல்லாம் காட்டி என் வாசிப்பை மட்டமென்று பேராக்கட்டும், அது நியாயம். அதை விட்டு விட்டு ஊர் பொதுவிடங்களிலும் முச்சந்திகளிலும் நின்றுகொண்டு, 'அவளுக்குக் காலித்தனமான சினிமாப் பாட்டுகள்தான் பாடத் தெரியும். சங்கீத ஞானமில்லாதவள்' என்று பொன்னையா பிள்ளையே பேசுவதும், நாலு கண்ணியமான மனிதர்கள் பேசவும் அசிங்கப்படும் வார்த்தைகளால் என்னையும், என் தாயையும், எங்கள் குடும்பத்தையும் தூற்றுவதும் பெரிய மனுஷர்களுக்கு அழகல்ல. அவற்றை எந்த மானமுள்ள ஒரு ஸ்திரீயும் பொறுக்கமாட்டாள். இந்த ஒரு நாளில் அவரால் நான் அடைந்திருக்கும் அவமானம் கொஞ்ச நஞ்சமல்ல.

"ஒருகாலத்தில் நாதஸ்வரக் கலைக்குப் புத்துயிர் கொடுத்தவர்கள் என்று புகழ்பெற்ற குளத்துமலை சகோதரர்களில் பெரியவரான தோடி சிவக்கண்ணு பிள்ளையின் மாப்பிள்ளையும் சிஷ்யருந்தான் பொன்னையா பிள்ளை என்றுல். நான் மற்றொரு சகோதரரான மகுடி மருதக்கண்ணு பிள்ளையின் மகளும் சிஷ்யையுமாவேன் என்பதை அவர் மறந்து விட்டார் என்றே தோன்றுகிறது. ஆரூர் திருவிழாவில் போட்டி நாயனத்தில் நான் தோற்றுவிட்டால் அது எனக்கு மட்டுமல்ல, காலஞ் சென்ற மகுடி மருதக்கண்ணு பிள்ளை

யின் சங்கீத ஞானத்திற்கே அவமானமாகும். பிறகு நான் நாயனத்தைத் தொடவே லாயக்கற்றவள்.

"போட்டி நாயனத்தின்போது, கோயில் காரியஸ்தர்கள், சங்கீத ஞானம் சம்பூர்ணமாகவுள்ள பாரபட்சமற்ற பத்துப் பேர்களைப் பஞ்சாயத்து வைத்துத் தீர்ப்புக் கூறட்டும். சுற்றிலும் கூடியிருக்கும் ஜனங்கள் சொல்லட்டும். பொன்னையா பிள்ளை அளவு என்னால் வாசிக்க முடியவில்லை, என் வாசிப்பு மட்டமென்று அவர்கள் சொன்னால், நான் என்னுடைய நாதஸ்வரக் குழாயைச் சுக்கு நூறாக உடைத்தெறிந்துவிட்டு நாயனத்தையே இனித் தொடுவதில்லை என்று சத்தியம் செய்கிறேன். அதற்குப் பதில் பொன்னையா பிள்ளையின் வாசிப்பு என்னைவிட மட்டம் என்று ஏற்பட்டால், அவர் என்னை மறுநாளே கலியாணம் செய்துகொண்டு நான் கச்சேரி செய்யப்போகும் இடங்களுக்கெல்லாம் எனக்குப் பின்னால் வரவேண்டும். இதைச் சொல்லும் போது இந்தப் பெண்பிள்ளை மகாத் தலைக்கிறுக்குப் பிடித்தவளோ என்று நீங்கள் நினைப்பீர்கள். ஆனால் பொன்னையா பிள்ளை என்னையும் என் கலையையும் பற்றிப் பேசிய அவமானப் பேச்சுக்கள்தான் இவ்வளவு கடுமையான நிபந்தனைகளை விதிக்கத் தூண்டுகிறது.

"பொன்னையா பிள்ளைக்கு இந்த நிபந்தனைகள் சம்மதமென்றால், பிறகு அவர் தோற்றுவிட்டால் நிபந்தனையின் விதிகளிலிருந்து எந்தக் காரணத்தைக் கொண்டும் மாறுவதில்லை என்று உறுதி கூறினால், நான் அவரோடு போட்டி நாயனம் வாசிக்கத் தயார்.

"காலஞ்சென்ற மகுடி மருதக்கண்ணுபிள்ளையின் ஆத்மாவும் கலை ஞானமும் நான் வெற்றிபெற உதவும் என்று பரிபூர்ணமாக நம்புகிறேன்.

இப்படிக்கு,
சௌந்தரவடிவு."

இந்தக் கடிதத்தைப் படிக்கக் கேட்டதும் அங்கிருந்த பெரிய மனிதர்கள் அனைவரும் கற்சிலைபோல் சமைந்து விட்டார்கள். பொன்னையனின் முகம் அவமானத்தில் சிவந்து விட்டது. மீதாடி சிவக்கண்ணு பிள்ளையின் முகத்திலே ஈ ஆடவில்லை. மோகனத்தின் கண்களில் இரண்டு நீர்த்துளிகள் திரண்டு விழுந்தன.

பொன்னையன் ஆழ்ந்து சிந்தித்தான். சௌந்தரவடிவின் துர் நடத்தை தனக்குத் தெரிந்துவிட்ட பிறகு, தான் அவளை மணக்கச் சம்மதிக்காவிட்டால் என்ன செய்வதென்றுதான் அந்தச் சதிகாரி இவ்வாறு நாயனப் போட்டியில் தந்திரமாக நிபந்தனை விதித்திருக்கிறாள் என்று பொன்னையன் யூகித்தான். ஆனால் சம்பூர்ண சங்கீத ஞானம் படைத்த தன்னை அவள் போட்டியில் வென்றால்தானே அவளை மணக்க வேண்டிய பிரமேயம் ஏற்படப் போகிறது என்று அவன் அந்த நிபந்தனையை அலட்சியமாக நினைத்தான்.

"என்ன பொன்னையா? சௌந்தரவடிவின் நிபந்தனை உனக்குச் சம்மதந்தானே? அப்புறம் நீ நிபந்தனை முடிவிலிருந்து மாறக்கூறக் கூடாது. நாலு பெரிய மனுசங்க முன்னிலையிலே நீ ஒப்புக்கிற விஷயம்; யோசிச்சுப் பதில் சொல்," என்று ஆதி கேசவம் பிள்ளை பொன்னையனைக் கேட்டார்.

"எனக்குச் சம்மதம். என் தலை போனாலும் நிபந்தனையிலிருந்து மாறமாட்டேன். அந்த அரைகுறைச் சங்கீதக்காரி என் வாசிப்பை ஜெயிச்சு விடுவாளோ?" என்றான் பொன்னையன் கர்வத்தோடு. பிறகு, ஆறாந் திருவிழாவன்று தஞ்சாவூர் சுசீலாவின் சதிர்க் கச்சேரி முடிந்ததும், சுவாமியை எழுந்தருளச்செய்து காலையில் சுவாமி சேர்க்கை சேருகிற வரையில் சௌந்தரவடிவும் பொன்னையனும் போட்டி நாயனம் வாசிப்பது என்று முடிவாயிற்று.

---

## அத்தியாயம்: 9

## ஏதுக்கித்தனை பகை?

'ஏதுக்கித்தனை மோடிதான் உமக்கு
எந்தன் மேல் ஐயா?" —பதம்.

ஆறாந் திருவிழாவன்று இரவு, குளத்துமலை இந்திர லோகம்போல் காட்சியளித்தது.

எங்குபார்த்தாலும் ஒரே ஜனத்திரள். சுற்றுப்புறம் எட்டு வட்டகைகளிலிருந்தும் கிராமிய ஜனங்கள், குண்டு கிழவர்கள், குமுறும் குமரிகள் குறுத்துகள் குழந்தைகள் அடங்கலாக,

சோற்று மூட்டைகளைக் கட்டிக்கொண்டு முதல் நாள் பொழுது சாயலுக்கே குளத்துமலைக்கு வந்துவிட்டார்கள்.

கூட்டத்தில் கிராமியக் கட்டழகிகளின் கொண்டையிலிருந்து வரும் வேப்பெண்ணை வாசம், நித்திய கல்யாணிகளின் தேகத்திலிருந்து வீசும் ஒருவிதமான நெடி, நாரீமணிகளின் கூந்தலிலிருந்து படரும் ஜாதி மல்லிகையின் மதுரமணம், சவ்வாது மைனர்களின் அத்தர் செண்டு புனுகின் வாசனைக் கலவைகள், பிளாச்சுகளைக் கடைகளின் மூக்கைத் துளைக்கும் கமகம வென்ற வாசனை, கோயில் மடைப் பள்ளியிலிருந்து திரண்டு வரும் புளியோதரையின் மணம், எல்லாம் பஞ்சாமிர்தமாகக் கலந்து, காற்றில் பரிமளித்துக் கொண்டிருந்தன.

திருவிழாக் கூட்டம் பல பகுதிகளாகப் பிரிந்து பலவித வேடிக்கை விளையாட்டுகளில் ஆழ்ந்திருந்தது.

'மாசிப் பொழுதினிலும்
வட்ட மிட்ட ராவிலும்
தேசமெங்கும் ராவாத்தா
திருநாள் விளங்குகின்றுள்
போடுங்கடி பெண்டுகாள்
பொன்னுத் திருக் குலவை'

என்று பாடியவாறு கிராமிய யுவதிகள் வட்டமாகக் கை கோர்த்துக் கொண்டு நின்று 'மொளக் கொட்டி'னர்கள் ஒரு புறம். குனிந்து நிமிரும் அந்தக் குமரிகளின் கொள்ளையழகைக் கூர்ந்து பார்ப்பதற்கென்றே கூடியிருந்த சந்தனப் பொட்டுக்காரர்களின் கூட்டம் அதிகம்!

'சீதைப் பொண்ணு வந்திச்சு
சீரான சீதைப் பொண்ணு வந்திச்சு'

என்று கிராமிய வாலிபர்களின் ஒயிலாட்டம் அதிர்ந்தது ஒரு புறம்!

'வருது வருது பொய்க்குதிரை,
முன்னாலே, நிக்காதே, பாய்ஞ்சிடும்!'

என்று பொய்க்கால் குதிரை, ஊரணி வீதியெங்கும் தூள் பறக்கச் செய்து கொண்டிருந்தது ஒரு புறம்.

கோணபட்டு காளியானின் கரண வேடிக்கைகள் ஒரு புறம்.

'வைடா ராஜா, வை. ஆடுதன் ராணி மேலே வை' 'போடு மூணத்தொன்று! அட, சை!' என்ற சப்தங்கள் கிளம்பும் சூதாட்டங்கள் ஒரு புறம்!

இவ்வாறு குளத்துமலைக் கோயில் ஊரணியின் நாலு புறமும் ஜே ஜே என்றிருக்கும்போது, கோயிலின் உற்சவ மண்டபத்தில் திருப்பூர் நாதமுனியின் பாண்டுக் கச்சேரி முடிந்து, இளவட்டங்கள் நிறைந்திருக்கும் சதஸில் தஞ்சாவூர் சுசீலாவின் சதுர்க் கச்சேரியின் 'தாதைதா' என்ற சப்த ஆர வாரங்கள் வானை முட்டிக் கொண்டிருந்தன.

இரவு பத்து மணி ஆயிற்று. சதுர்கச்சேரி முடிந்தது. அவுட் வாணங்கள் பறிந்தன. தீபாராதனை முடிந்தது. ஸ்வாமியும் அம்மனும் ரிஷப வாகனத்தில் புறப்பாடாயிற்று. ஆனாலும் அங்கிருந்த கூட்டம் கொஞ்சங்கூடக் கலையவில்லை! அன்று இரவு பத்து மணிக்கு மேல் பிரசித்திபெற்ற நாயனம் சௌந்தரவடிவும், சமஸ்தான வித்வான் பொன்னையனும் போட்டி நாயனம் வாசிக்கப் போகிறார்களல்லவா? இத்தகைய விநோதமான போட்டி நாயனத்தை வேறு எந்த ஜன்மத்தில் பார்க்கக் கொடுத்து வைக்கமுடியும்? பாமரர்கள் முதல் பரம ரஸிகர்கள், சங்கீத விற்பன்னர்கள்வரை போட்டி நாயனத்தை எதிர் நோக்கிக் காத்திருந்தார்கள். சதுர் முடிந்ததும் கோயில் வீட்டில் பள்ளி கொள்ளப்போகும் சதுர்க்காரிகள்கூட அன்றிரவு வீட்டிற்குப் போகவில்லை. சௌந்தரவடிவு என்ன புடவை கட்டிக்கொண்டு வருவாள் என்பதைப் பார்ப்பதற்காகக் காத்துக் கொண்டிருந்தார்கள்!

பிரகாரக் கோயில் ஊரணியின் வலதுபுற மூலையின் ஒரு புறம் வட்டமாகக் கும்பல் கூடி நின்றது. தவுல் சகிதம் வேணுப் பிள்ளையும் ஒத்து ஊதுகிறவனும் தாளம் போடும் கை மணிக் காரனும் பின் தொடர, முதலில் பொன்னையன் நாதஸ்வரத்தைத் தூக்கிக்கொண்டு கூட்டத்தின் மத்தியில் நுழைந்தான்.

கொஞ்சம் நேரங் கழித்து தவுலைத் தூக்கிக்கொண்டு மோகனம் பின் தொடர, சௌந்தரவடிவு வந்தாள்.

கூட்டத்தில் ஒரு கணம் ஜே ஜே என்ற ஆரவாரம் எழுந்து அடங்கியது.

சௌந்தரவடிவும் பொன்னையனும் பக்கத்தில் பக்கத்தில் நாயனத்தை ஏந்தி நின்றார்கள். அவர்களிருவரும் கண் கொள்ளா ஜோடி என்று வியந்தனர் கூட்டத்தில் சிலர்.

பொன்னையன் சௌந்தரவடிவைத் திரும்பிப் பார்க்கவும் மனங் கூசினான். அவன் முகத்தில் அருவெறுப்பும் ஆக்ரோஷமும் நிறைந்திருந்தது. ஆனால் தன் உள்ளத்துணர்ச்சிகளை வெளிக் காட்டாமல் மறைத்துக்கொண்டு, சபை ரமிப்பதற்

காகத் தன் உதட்டில் புன்னகை தவழும்படி வைத்துக் கொண்டிருந்தான்.

சௌந்தரவடிவு கடைக் கண்ணால் பொன்னையனைப் பார்த்துப் பார்த்து உள்ளம் ஏங்கிக் கொண்டிருந்தாள். அவள் முகத்தில் ஆர்வமும் துடிப்பும் பிடிவாதமும் படர்ந்திருந்தது. ஒவ்வொரு சமயம் என்னவோ உள்ளூர ஒருவித ஆனந்தம் பொங்கி வழிந்தது. அவளுடைய சிவந்த உதட்டில் புன்னகையின் இன்ப நுரைகளாகப் படர்ந்து சென்றன.

சௌந்தரவடிவு கண்களை மூடி தன் மனத்திற்குள் தன் தந்தை மருதக்கண்ணு பிள்ளையை மனமாரத் துதித்து, நாதஸ்வரத்தை எடுத்துத் தொட்டு நமஸ்கரித்து, வாசிக்க ஆரம்பித்தாள். அவள் மெய் சிலிர்த்தது.

பொன்னையனோ, அருகில் நின்ற தோடி சிவக்கண்ணு பிள்ளையைத் தன் குரு, பெரியவர் என்ற முறையில் கை கூப்பிக் கும்பிட்டு நாயனத்தை எடுத்தான்.

கும்பலில் நிசப்தம் நிலவியது. எல்லோர் கண்களும் அந்த ஜோடிகள்மீது ஆணி வைத்து அறைந்ததுபோல் லயித்திருந்தன. யாருடைய வாசிப்புச் சிறந்தது என்று தீர்மானிப்பதற்காக நியமிக்கப்பட்ட பஞ்சாயத்தார் முன் வரிசையில் இருந்தார்கள்.

போட்டி நாயனம் ஆரம்பமாயிற்று.

சௌந்தரவடிவும் பொன்னையனும் நாட்டைக் குறிஞ்சி ராகத்தை எடுத்து ஊதி கச்சேரியைத் துவக்கினார்கள். சௌந்தரவடிவுக்கு மோகனம் தவுல் வாசித்தாள். பொன்னையனுக்கு குளத்துமலையில் கை தேர்ந்த வேணுப் பிள்ளை தவுல் வாசித்தார். போட்டி மனப்பான்மை மோகனத்துக்கும் வேணுப் பிள்ளைக்கும் இருந்தது! ஒவ்வொரு ராகத்தையும் சௌந்தரவடிவும் பொன்னையனும் தனித் தனியாக வாசிப்பதென்றும், அவர்களது வாசிப்பில் எது சிறந்தது என்பதை, சபையில் எழும் கரகோஷங்களிலிருந்தும் சங்கீத விற்பன்னர்களின் ஏக மனதான அபிப்பிராயத்திலிருந்தும் பஞ்சாயத்தார் முடிவு செய்வதென்றும் ஏற்பாடு.

அதனையொட்டி நாட்டைக்குறிஞ்சி முடிந்ததும், சௌந்தரவடிவு, 'யாரோ இவர் யாரோ?' என்ற அருணாசலக் கவிராயரின் பாடலுக்குரிய பைரவி ராகத்தை எடுத்து வாசித்தாள். அவள் பைரவி ராகத்தை வாசிக்க எடுத்த யெடுப்பே சுற்றி நின்ற ரஸிகர்களின் மனதைக் கவர்ந்துவிட்டது. அவள் பைரவி

ராகத்தை வாசித்த பாணி 'யாரோ இவர் யாரோ?' என்று பாடலுக்கே ஒரு தனிப் புது மெருகு கொடுப்பது போலிருந்தது.

"'சௌந்தரவடிவைப் பார், கெட்டிக்காரி! முதலில் 'இவர் யாரோ?' என்ற பாட்டை வாசிக்கிறாள். என்னைப்போல் வித்தை தெரிஞ்ச பெண் பிள்ளையிடம் போட்டி போட வந்த சூரன் யார் என்று கேட்பது போலில்லை அந்தப் பாட்டு?'' என்று கூட்டத்தில் ஓர் ஆசாமி, அருகில் நின்றவன் காதைக் குடைந்தான். ஆனால் சௌந்தரவடிவு தன் நெஞ்சம் கவர்ந்த இவர் யாரோ என்றுதான் நாசூக்காய் கேட்கிறாள் என்பது அந்த ஆசாமிக்கு எப்படித் தெரியும்?

சௌந்தரவடிவு பைரவியை அபூர்வமாக வாசித்து முடித்ததும் கூடி நின்ற ஜனங்களிடையே வானம் அதிர்வதுபோல் கட கட வென்ற கரகோஷம் எழுந்தது. 'சௌந்தரவடிவைப்போல் பைரவி ராகத்தைச் சம்பூர்ணமாக வாசிக்க யாரால் முடியும்?' என்றார்கள் ரஸிகர்கள்.

பிறகு பொன்னையன் பைரவி ராகத்தை அலச ஆரம்பித்தான். அங்கு கூடியிருந்த ஈ எறும்பு முதல் பொன்னையன் வாசித்து முடியும் வரை மந்திரத்தால் கட்டுண்டது போல் மெய் மறந்து நின்றன. கரகோஷம் வானைப் பிளந்தது. 'பொன்னையனின் பைரவி ராக ஆலாபனையும் சௌந்தரவடிவின் வாசிப்புக்குக் குறைந்ததல்ல' என்றார்கள் அதே ரஸிகர்கள்!

பிறகு சௌந்தரவடிவு, 'காதலாகினேன் கண்ணம்மா' என்ற சுத்தானந்த பாரதியாரின் கீர்த்தனையை பந்துவராளி ராக சொரூபமாக வாசித்தாள். அந்தக் கீதத்தின் இன்னிசையலைகளில் வானமும் வையகமும் ஒன்றாக உருகியோடியது. கேட்டு நின்ற பெண்களெல்லோரும் தங்களைக் கண்ணம்மாவாகவும், தொண்டுகிழவர்கள் முதல் ஆண்கள் எல்லோரும் தங்களைக் கண்ணனாகவும் பாவித்து உள்ளமும் உணர்வும் மயங்கி நின்றார்கள்!

சௌந்தரவடிவு பந்து வராளியை முடித்ததும், பொன்னையன் அதே பாடலை வாசிக்கத் தொடங்கினான். அவன் வாசிப்பில் உருகியோடிய உணர்ச்சி மயமான நாத வெள்ளம், சௌந்தரவடிவைக் கண்ணம்மாவாகப் பாவித்துப் பொன்னையன் காதல் கனிந்த தன் உள்ளத்தின் உயிரையே அந்த இன்னிசையலைகளின் மூலம் பிழிந்து கொடுப்பது போலிருந்தது. கேட்டு நின்ற அனைவரும் கிறுகிறுத்துப் போனார்கள்!

பிறகு பாபநாசம் சிவனின் 'காலைத் தூக்கி நின்றாடும் தெய்வமே!' என்ற யதுகுல காம்போதி ராகத்தில் சௌந்தர

வடிவு சஞ்சாரம் செய்ய ஆரம்பித்தாள். அப்போது அந்தக காலைத் தூக்கி நின்றாடும் தெய்வமே சௌந்தரவடிவின் நாயனத் தின் முன் திருக்கூத்தாடுவது போலிருந்தது. பொன்னையன் அதே கீர்த்தனைக்குரிய ராகத்தை வாசிக்கும்போது ஜனங் களுக்கு அந்த மெய்மறந்த பரவச நிலைதான் இருந்தது!

அன்று குளத்துமலை ஊத்து மலையாகிவிட்டது!

இவ்வாறு பொன்னையனும் சௌந்தரவடிவும் இன்னிசை நாதங்களைப் பிழிந்து கொட்டி நாயனம் வாசிக்கும்போது மெய் மறந்து நிற்கும் ஜனங்கள், பக்க மேளம் மோகனமும் வேணுப் பிள்ளையும் தவுல் அடிக்கும்போதும், தனி ஆவர்த்தனமாகத் தவுலை வெளுத்து வாங்கும்போதும் தவுல் அதிர்வதைவிட மோகனத்தின் உடல் அதிகமாக அதிர்வதைக் கண்டு சிரிப்பார்கள்.

ஸ்வாமி ஊரணியைப் பிரகாரம் வரும்போது ஊரணி யின் ஒவ்வொரு மூலையிலும் நின்று பொன்னையனும் சௌந் தரவடிவும், சபையினர் விரும்பிய முத்துத் தாண்டவர் கீர்த்தனைகள், தியாகராஜர், ஸ்வாதித் திருநாள் கீர்த் தனைகள், சில்லறை உருப்படிகள் அனைத்தையும், கேட்ட சகல ராகங்களையும் மணிக்கணக்காக மாறிமாறி வாசித் தார்கள். அவர்கள் வாசிக்க வாசிக்க கேட்ட ஜனங்கள் மெய் மறந்து கரகோஷங்கள் செய்தார்களே தவிர, ஒருவருடைய வாசிப்பில் சலிப்புறவோ யாருடைய வாசிப்பு சிறந்தது என்று தீர்மானிக்கவோ அவர்களால் முடியவில்லை. பஞ்சாயத்தாருக் கும் சங்கீத விற்பன்னர்களுக்கும் அந்த நிலைதான் ஏற்பட்டது. சௌந்தரவடிவு, பொன்னையன் வாசிப்புகளின் ஏற்ற இறக்கங் களை எடைபோட இந்தப் புவியிலே எந்தத் திராசுமிராதோ என்று ஏங்கினார்கள். இந்த நிலையில் பொழுது விடியும் தருண மாயிற்று. சூரியன் புறப்படுவதற்கு முன்னால் ஸ்வாமி சேர்க்கை சேர்ந்துவிட வேண்டுமென்று அன்று ஆருந் திருவிழா மண்டகப் படி செய்த திருநாவுக்கரசு செட்டியார் அவசரப்படுத்தினார்.

பிறகு போட்டி நாயனத்தை மறுபடி பத்தாம் திருவிழா பூப்பல்லாக்கன்றிரவு வைத்துக் கொள்வதென்று கோயில் காரியஸ்தர்கள் தீர்மானித்தார்கள்.

நாயனக்காரர்களைச் சுற்றி நின்ற கூட்டம் மனமில்லாமல் மெல்ல மெல்லக் கலையத் தொடங்கியது.

தோடி சிவக்கண்ணு பிள்ளை மெல்ல பொன்னையன் காதருகில் வந்து, "தம்பி, இன்னைக்கிப் போகட்டும். சத்தா

வர்ணத்தன்னைக்கி நீ மறந்துடாமெ மகுடி வாசி. சௌந்தரம் உன்னைத் தொட்டு வாசிக்கிறாளா பார்ப்போம்!" என்றார். மகுடி என்றதும் அருகில் நின்ற சௌந்தரவடிவின் முகம் பாம்பை மிதித்ததுபோல் உயிரற்றுப் போயிற்று.

சௌந்தரவடிவு என்ன காரணத்தாலோ இதுவரை கச்சேரிகளில் மகுடி வாசித்ததில்லை. பூப்பல்லாக்கன்று போட்டி நாயனத்தின்போது பொன்னையன் மகுடி வாசித்தால், சௌந்தர வடிவு மகுடி வாசிக்கமாட்டாள், அப்படி வாசித்தாலும் அவளுடைய மகுடி வாசிப்பு சோபிக்காது என்று சிவக்கண்ணு பிள்ளை எண்ணினார்!

அத்தியாயம் : 10

## வடிவின் விண்ணப்பம்

*" என்னை ஆளையா என்—விண்ணப்பம்*
*தன்னைக் கேள் ஐயா "*
*—கீர்த்தனை*

அன்று மத்தியானம் பொன்னையன் சிவக்கண்ணு பிள்ளை வீட்டின் தெருத் திண்ணையில் தூக்கக் கலக்கத்தோடு படுத்திருந்தான். இரவு முழுவதும் கண்விழித்து வாசித்த அசதி அவன் உடல் உள்ளமிரண்டிலும் ஒருவித சோர்வை ஊட்டியிருந்தது.

சௌந்தரவடிவை என்னமோ என்று நினைத்தோமே? அவள் எவ்வளவோ அபூர்வமாக சம்பூர்ணமான சங்கீத ஞானத்தோடு வாசிக்கிறாள்! அவள் வாசிப்பை நம்மால் மிஞ்ச முடியவில்லையே! ஆனால் இவ்வளவு ஞானமுள்ளவளுக்கு ஜமீந்தார் மகனின் பணத்திற்காக தன்னுடைய விலைமதிப்பற்ற மானதத்தையும் விற்க எப்படி மனம் வந்தது? என்று பொன்னையன் பலவாறாகச் சிந்தித்துக் கொண்டிருந்தான்.

அப்போது அவனுடைய மாமன் மகள் மோகனம் அவனிடம் வந்து, "சௌந்தரம் இந்தக் கடுதாசியை உங்ககிட்டே கொடுத்துப் பதில் வாங்கிவரச் சொல்லிச்சு!" என்று கடிதமொன்றைக் கொடுத்தாள்.

பொன்னையன் பரபரப்போடு கடிதத்தைப் பிரித்துப் பார்த்தான்.

"வித்வத் சிரோன்மணி ஸ்ரீ பொன்னையா பிள்ளையின் சமூகத்திற்கு, அடியாள் சௌந்தரம் வணக்கத்தோடு எழுதுவதாவது :

"பத்தாம் திருவிழாவன்று போட்டி நாயனத்தின் போது தாங்கள் மகுடி வாசிக்கப் போவதாகத் தெரிகிறது. ஆனால் அன்று நான் மகுடி வாசிக்கப் போவதில்லை. அதனால் எனக்கு ஞான பூர்வமாக மகுடி வாசிக்கத் தெரியாது என்பதல்ல. மகுடி மருதக்கண்ணு பிள்ளையென்று பிரசித்தி பெற்றவர் தன் மகளுக்கு மகுடியைச் சம்பூர்ணமாகவே சொல்லி வைத்திருப்பார் என்பது தங்களுக்குத் தெரியும் !

"மகுடி மருதக்கண்ணு பிள்ளையின் எதிர்பாராத துர் மரணத்துக்கும் நான் மகுடி வாசிப்பதற்கும் சம்பந்தமுண்டு. இதை எந்த சமயத்தில் நீங்கள் எங்கள் வீட்டிற்கு வந்தாலும் தெரிவிக்கத் தயாராக இருக்கிறேன்! அவர் காலமாகும்போது கச்சேரிகளில் நான் மகுடி வாசிப்பதில்லையென்று சத்தியம் செய்து கொடுத்திருக்கிறேன். ஆகையால், வஞ்சனையாக ஒரு பெண்பிள்ளையை போட்டியில் வெல்லும் நோக்கம் தங்களைப் போன்ற நியாயவுள்ளம் படைத்தவர்களுக்கு இல்லையென்றால், பத்தாம் திருவிழா வன்று போட்டி நாயனத்தின்போது நீங்கள் மகுடி வாசிப்பதில்லை யென்று பிரமாணம் செய்ய வேண்டும். தங்களுக்கு என்மீது எவ்வளவோ வருத்தமும். துவேஷமும் இருக்கலாம். ஆனால் நமக்கு வித்தை தந்த சரஸ்வதியின் பேரால் கேட்கும் ஒரு பெண் பிள்ளையின் நியாயமான கோரிக்கையைப் புறக்கணிக்க மாட்டீர்கள் என்று நினைக்கிறேன். என்னை வெல்ல நினைத்தால் தங்களைப்போன்ற சம்பூர்ணமான வித்வான்களுக்கு மகுடியைத் தவிர வேறு எத்தனையோ ராகங்கள் இல்லையா ?

இப்படிக்கு,
அபலை
சௌந்தரவடிவு."

அந்தக் கடிதத்தை வாசித்ததும் பொன்னையன் மனது உருகியது. எவ்வளவு வக்கணையாகவும், நேர்மையான முறையிலும் கடிதம் எழுதுகிறாள் ? மானத்தை ஜமீந்தார் மகனிடம் விற்ற ஒரு குறைமட்டும் அவளிடமில்லாதிருந்தால்.........?

இப்போது சௌந்தரவடிவு நம்மைக் கேட்பது நியாயமானது தானே? வஞ்சனையாலா ஒரு பெண்பிள்ளையைப் போட்டியில் வெல்வது? கூடாது! போட்டியின்போது மகுடி வாசிக்கவே கூடாது என்று பொன்னையன் தீர்மானித்தான்.

"மோகனம்! உன் சௌந்தரவடிவிடம் போய் இந்தக் கடிதத்தில் அவள் கேட்டதற்கு நான் சம்மதப் படுகிறேன் என்றும் அவ்வாறு சத்தியமாகச் சொன்னேன் என்றும் சொல்லு!" என்ருன் பொன்னையன் கம்பீரமாக.

மோகனத்தின் கண்களில் இரண்டு நீர் முத்துகள் அரும்பி விழுந்தன!

அத்தியாயம் : 11

## தன் வினை

"தன்வினை தன்னையே சுடும்
அபசார நெஞ்சக முஞ்சுடும்"

குளத்துமலையில் மிகவும் விசேஷமான பத்தாம் திருவிழா வன்று பூப்பல்லக்கைப் பார்க்க வந்த ஜனங்களைவிட பொன்னையன் சௌந்தரவடிவு போட்டி நாயனத்தின் முடிவைக் காணத் திரண்டு வந்த ஜனங்கள் அதிகம். அன்று குளத்துமலை சங்கீத வட்டாரங்களெங்கும் ஒரே பரபரப்பாயிருந்தது. பொன்னையனின் மகுடி வாசிப்பின் முன் சௌந்தரவடிவு தோற்றுப் போய் தன் நாயனத்தை முறித்து எறிந்து விடுவாள்; அன்ருேடு அவள் அகந்தை மண்மேடிட்டுப் போகும் என்று எண்ணி மகிழ்ந்தது ஒரு கூட்டம். அதில் முக்கியமான ஒருவர்தான் தோடி சிவக்கண்ணுபிள்ளை. பொன்னையன் அன்று மகுடி வாசிப்பதில்லையென்று சௌந்தரவடிவிற்கு வாக்குறுதி கொடுத்திருக்கிருன் என்ற விஷயம் அவருக்குத் தெரியாது!

திருவிழா முடிந்த மூன்ரும் நாள் நல்ல முகூர்த்தமிருக்கிற தென்றும், அன்று தம் மகள் மோகனத்துக்கும் பிரபல வித்வான் பொன்னையனுக்கும் மாங்கல்ய முடிச்சு போட்டு விடுவ தென்றும் தீர்மானித்து, இரண்டு மூன்று நாளாகவே கலியாணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து வந்தார் சிவக்கண்ணு பிள்ளை.

பொன்னையனோ ஓயாமல் சிந்தனைக் கடலிலே மூழ்கிக் கிடந்தான். இவ்வளவு அபூர்வமான நாதஸ்வர ஞானமுள்ள சௌந்தரவடிவு தன் மனைவியாக வரத் தகுதிபற்ற நிலைக்குப் போய் விட்டாளே! அயோக்கியன், ஜமீன்தார் மகன் சின்னத் தம்பியோடு அவள் தொடர்பு வைத்துக் கொள்ளாமல் இருந் திருக்கக் கூடாதா, பாபத்தின் சின்னமாக வயிற்றில் வேறு இரண்டு மாதக் குழந்தையைச் சுமந்து கொண்டிருக்கிறாளே, என்றெல்லாம் ஓயாமல் எண்ணி ஏங்கினான். அவனுடைய மனத் திரையில் சௌந்தரவடிவின் வாஞ்சை ததும்பிய அழகிய முகம் சதா வட்டமிட்டுக் கொண்டேயிருந்தது! ஆனால் குப்பையில் எறிய வேண்டிய மாசு படிந்த மாணிக்கத்தை எண்ணி ஏங்கிப் பயனென்ன? கள்ளங் கபடு இல்லாத அசட்டு மோகனத்தை மணப்பதுதான் இனி நமக்கேற்றது என்று மனந்தேற முயன்றான் பொன்னையன்!

பததாம் திருவிழாவன்று, பொழுது இருட்டுகிற நேரத்தில் சௌந்தரவடிவின் வீட்டிற்கு மோகனம் போயிருந்தாள்.

அப்போது சௌந்தரவடிவு தன் மடியிலிருந்த கசங்கிய ஒரு காகிதத் துண்டை எடுத்து மோகனத்திடம் கொடுத்து, "மோகனம்! சத்தே முன்னடித்தான் இந்தக் கடுதாசியை உன் கிட்டே கொடுக்கச் சொல்லி ஒரு ஆள் கொண்டு வந்து கொடுத் திச்சி!" என்றாள்.

அத்தக் காகிதத் துண்டைப் படித்த மோகனத்தின் முகத்தில் ஒரு கணம் பயமும் ஏக்கமும் ஊடாடியது. மறு கணம் நம் பிக்கையின் ஒளியும் மனமகிழ்ச்சியின் பூரிப்பும் திடமும் அவள் முகத்தில் பிரதிபலித்தது.

"அக்கா, உன்னை எந்தக் காலத்திலும் மறக்கமாட்டேன்! கடைசியில் நான் ஏமாந்து போய்விடுவேனோ என்று பயந்து கொண்டிருந்தேன்! நீதான் காப்பாத்தினாய் அக்கா!" என்று மோகனம் சௌந்தரவடிவைக் கட்டிக் கொண்டு அழுதாள். மோகனம் சிந்திய கண்ணீர்த் துளிகளில் ஆனந்தம் சோகம் இரண்டுமே கலந்திருந்தது.

சௌந்தரவடிவு மோகனத்தின் கூந்தலை வாஞ்சையோடு கோதி அவளை வாரியணைத்த வண்ணம், "அசடாட்டம் அழாதே, மோகனம்! இனிமேதான் நீ மிகவும் திடமாயிருக் கணும், பாத்துக்க!" என்று கூறினாள்.

சிறிது நேரம் அந்த இரண்டு தோழிகளும் அந்தரங்கமாகத் தங்களுக்குள் பல விஷயங்களைப் பேசித் தீர்த்துக் கொண்

டார்கள். கடைசியில் மோகனம் எழுந்து தன் வீட்டிற்குப் போகும்போது, "அக்கா, மறந்து விடாதே, தோடி!" என்று எச்சரித்துவிட்டுப் போனாள்.

அன்று இரவு ஒன்பது மணிக்கெல்லாம் வாண வேடிக்கை யோடு ஸ்வாமியும் அம்மனும் பூப்பல்லக்கில் புறப்படலாயிற்று.

ஊரணியைச் சுற்றி நாலு மூலையிலும் எள்ளு விழாத ஏகக் கூட்டம். அத்தனை ஜனமும் பொன்னையன் செளந்தரவடிவு போட்டி நாயனத்தின் இசை வெள்ளத்தை அள்ளிப் பருகவும், இவர்களிருவரின் வித்வத்தைத் தனித்தனியாக எடை போடவும் காத்திருந்தது.

அன்று செளந்தரவடிவுக்கு வழக்கம்போல் தவுல் வாசிக்க மோகனம் வரவில்லை. அன்றிரவு தனக்கு வயிற்றுக் கடுப்பும் இரட்டைத் தலைவலியும் வந்து விட்டதாகக் கூறி மோகனம் வீட்டிலே பாயை விரித்துப் படுத்து விட்டாள்.

மோகனத்துக்குப் பதில் பிடி ஆளான தங்கப்பூண் பிச்சையா பிள்ளைதான் செளந்தரவடிவுக்கு அன்று தவுல் வாசித்தார். தவுல் கிழிகிறவரை அடிக்கச் சளைக்க மாட் டார் என்பதற்காக அந்த மகானுபவரின் கைகளுக்கு ஒரு வெள்ளிப் பட்டறை ஆசாரி தங்கப்பூண் செய்து போட்டிருந் தார். அவ்வளவு பிரஸித்தமானவர் தவுல் பிச்சையா பிள்ளை. இருந்தும் செளந்தரவடிவு தன் பக்கமேளம், ஒத்து, தாளம், சுற்றி நிற்கும் ஜனங்கள் சகலத்தையும் மறந்து தன் நாயனத் திலிருந்து ஸ்வர ஜாதி ராக சஞ்சார மாளிகைகளிலே தன் மனம் முழுவதும் ஒருமிக்கும்படி செய்திருந்தாள்.

அன்று பொன்னையனும் செளந்தரவடிவும் போட்டி போட்டுக் கொண்டு வாசித்த ஒவ்வொரு உருப்படியும் ஒன்றை யொன்று மிஞ்சும்படியாயிருந்தது. அவர்களது நாதஸ்வரங்களி லிருந்து உதிரும் சங்கராபரணம், ஷண்முகப் பிரியா, கல்யாணி, ரீதிகௌளை, மோகனம் முதலான ஒவ்வொரு ராகமும் குளத்துமலை ரஸிகர்கள் இதுவரை கண்டிராத புதுப்புதுக் கற் பனைகளாகத் தோன்றின. இருவர் வாசித்த பந்தாவும், ராக விஸ்தாரமும், நிரவலும், சஞ்சாரமும், அபூர்வமான பிர்க்காக் களும் ஒன்றிற்கொன்று சொல்ல முடியாதபடி இருந்தன. யாரு டைய வாசிப்பு சிறந்தது என்று அனுமானிக்கவே இடம் கொடாதவாறு இருவருடைய வாசிப்புமே இருந்தது. இவ் வாறு ஜனங்கள் போட்டி நாயனத்தின் பின் செல்ல, பூப் பல்லக்கு ஊரணியின் மூன்றுவது எல்லையையும் தாண்டி விட்டது.

போட்டி நாயனம் விறுவிறுவென்று உஜ்ஜஸ்தாயிக்கு வந்து ஊரணியின் கடைசி நான்காவது மூலையை அடையும் போது மணி நான்கு ஆகி விட்டது!

" தம்பீ, இன்னும் மகுடி வாசிக்கலியே. மகுடியை எடு!" என்று தோடி சிவக்கண்ணுபிள்ளை பொன்னையனைத் தூண்டினார். மகுடி என்றதும் செளந்தரவடிவின் முகம் சிறிது கலவரமடைந்தது. ஆனால் அவள் முகத்திலிருந்து நம்பிக்கையின் ஒளி மாறவில்லை. பொன்னையன் வாக்குச் சுத்தமுள்ளவன் என்பது அவளுககுத் தெரியும்!

" இன்னும் ஒருவர் வாசிப்பில்கூட குறை காணமுடியவில்லையே! பொழுது விடியப் போகிறதே! போட்டிக்கு எவ்வாறு முடிவு காண்பது?" என்ற பஞ்சாயத்தார் அவசரப்படுவது அவர்களுடைய முகத்தில் பிரதிபலித்தது. பஞ்சாயத்தார் முகத்தையும், சுற்றி நின்ற ரஸிகர்களின் முகத்தையும் செளந்தரவடிவு ஊன்றிக் கவனித்தாள்: தங்களிருவருடைய வாசிப்பில் எவர் ஒருவர் வாசிப்பிலாவது ஒரு சிறு குறை, ஒரு ஸ்வரப் பிசகு விழுந்து விட்டாலும், அல்லது ஒருவர் எடுத்த ராகத்தை மற்றொருவர் வாசிக்கச் சிறிது தயங்கினாலும் போட்டியின் வெற்றி தோல்விகளை கூறிவிடச் சபை துடித்து நிற்கிறது என்பதைச் செளந்தரவடிவு யூகித்துக் கொண்டாள். அவள் முகம் சட்டென்று பிரகாசமடைந்தது!

தான் எடுத்த நாத நாமக்கிரியை ராகத்தைப் பொன்னையனும் அதே கச்சிதமாக வாசித்து முடித்ததும், செளந்தரவடிவு திடீரென்று தோடி ராகத்தை எடுத்து வாசிக்க ஆரம்பித்தாள். பிரமாதமாகவே வாசித்தாள். பொன்னையன் பேயடித்தவன் போல் ஆனான். தன்னருகில் நிற்கும் சிவக்கண்ணு பிள்ளையை ஒருமுறை பரிதாபமாகப் பார்த்த பின், நாகஸ்வரக் குழாயை மண்ணில் விட்டெறிந்து விட்டு சபையினின்று வெளியேற முயன்றான்.

அப்போது அங்கிருந்த பஞ்சாயத்தார், அவனை இடைமறித்து, " ஏன் பொன்னையா, நாதஸ்வரத்தை எறிந்துவிட்டுப் போகிறாய்? செளந்தரம் அபூர்வமாகத் தோடி வாசித்தாளே? அவளது ஞானப் பூர்வமான தோடி வாசிப்பு அவள் வாசித்த ராகங்களிலெல்லாம் சிரேஷ்டமாக இருக்கிறது நீயும் தோடி வாசித்தாலல்லவா உங்கள் இருவரின் வித்வத்துவங்களிலுள்ள காராதம்மியங்கள் தெரியும்? பொன்னையா, நீ தோடி வாசிக்க வேண்டாமா?" என்று கேட்டார்கள்.

"என்னால் தோடி வாசிக்க முடியாது !" என்றான் பொன்னையன் எரிச்சலுடன்.

"ஏன் ?"

"எனக்குத் தோடி வாசிக்க வராது !"

"தோடி சிவக்கண்ணு பிள்ளையின் மருமகப்பிள்ளையா இப்படிச் சொல்லுகிறாய் ?"

பொன்னையனின் முகமும் தோடி சிவக்கண்ணு பிள்ளையின் முகமும் அவமானத்தால் சிவந்தன.

"நான் தோடி வாசிக்கமாட்டேன்! எனக்குத் தோடி வாசிக்கத் தெரியாது !" என்று சிவக்கண்ணு பிள்ளையைப் பரிதாபகரமாகப் பார்த்துக் கொண்டே குரல் தழதழக்கக் கூறினான் பொன்னையன்.

"அப்போ, போட்டி நிபந்தனை ஞாபகமிருக்கா?" என்றார் ஆதிகேசவம் பிள்ளை.

"இருக்கு. சவுந்தரம் தோடி வாசிக்கலாம். நான் தோடி வாசிக்கப்போவதில்லை! தோல்வியை வேண்டுமானாலும் ஒப்புக கொள்ளுகிறேன்" என்று சொல்லிவிட்டு கடகடவென்று பொன்னையன் சபையைவிட்டு வெளியேறினான்.

அங்கு கூடியிருந்த ஜனங்கள் ரஸிகர்கள் அனைவரும் ஆச்சரியத்தால் அயர்ந்து நின்றார்கள்.

தோடி சிவக்கண்ணுபிள்ளை பேயறைந்தவர்போல் சிறிது நேரம் நின்றார்.

பழங்காலத்தில் பிரசித்தி பெற்றிருந்த குளத்துமலை சகோதரர்களில் காலஞ்சென்ற மருதக்கண்ணுபிள்ளையைப்போல் தோடி சிவக்கண்ணுபிள்ளை அவ்வளவு விசாலமான இருதயம் படைத்தவரல்ல. சரஸ்வதியின் அருளால் அபூர்வமான சங்கீத ஞானமிருந்தும், சிவக்கண்ணுபிள்ளைக்கு சில குறுகிய எண்ணங்கள் உண்டு. தம் காலத்திலும் எதிர் காலத்திலும் தோடி வாசிப்பதில் தமக்கு நிகர் ஒருவரும் இல்லை என்ற பெயர் நிலைத்திருக்க வேண்டுமென்று ஆசைப்பட்டார். அந்தக் குறுகிய மனப்பான்மையால், பொன்னையனுக்குச் சம்பூர்ணமான நாதஸ்வர வித்தையையெல்லாம் சிக்ஷை சொல்லி வைத்தபோது அவனுடைய தோடி வாசிப்பில் தம்முடைய தோடி வாசிப்பைவிட ஜனரஞ்சகமான கவர்ச்சியிருப்பதைக் கண்டு மனம் புழுங்கியவராய், கச்சேரிகளில் எந்தக் காரணத்தைக்கொண்டும் பொன்னையன் தோடி வாசிக்கக்கூடாது என்று

சத்தியம் வாங்கிக்கொண்டார். அந்த சத்தியம் இன்று தமக்கே வினையாய் முடிந்ததைக்கண்டு மலைத்து நின்றுவிட்டார். பிள்ளைவாள், கலைஞானத் துறையில் தம்முடைய குறுகிய மனப்பான்மையைத் தண்டிப்பதற்காகத்தான் சரஸ்வதி நம்மை இப்படிச் சோதித்துவிட்டாளோ என்று மனமுருகினார்.

பொன்னையன் ஒப்புக்கொண்ட போட்டி நிபந்தனைப்படி சௌந்தரவடிவை அவன் திருமணம் செய்துகொள்வதற்கு, கூடிய சீக்கிரம் ஒரு நல்ல முகூர்த்தம் பார்க்கவேண்டுமென்று பஞ்சாயத்தார்கள் பேசிக்கொண்டார்கள்.

கூட்டம் கலைந்தது. சௌந்தரவடிவு புன்சிரிப்புத் தவழும் முகத்தோடு துள்ளிக் குதித்துக்கொண்டு தன் வீட்டிற்கு வந்தாள்!

சிவக்கண்ணு பிள்ளையோ, தெய்வம் தம்மை அநியாயமாக வஞ்சித்துவிட்டதென்றும், பிரபல வித்துவான் பொன்னையனுக்கும் தம் அசட்டு மகள் மோகனத்துக்கும் மணமுடிச்சுப்போட்டு விடலாமென்ற தம் ஆசை முடிந்துவிட்டதென்றும், பத்தாம் திருவிழாவன்று தம் திடடம், மனக்கோட்டை, புகழ் எல்லாம் இப்படிப் பொடி சாம்பலாகப் பாழாகுமெனச் சிறிதும் எதிர்பார்க்கவில்லையே என்றும், ஆத்திரத்தால் யார் யாரையோ சபித்துக்கொண்டு தம் வீட்டிற்கு வந்தார்.

ஆனால் வீட்டில் அவருக்கு மற்றொரு பேரிடி காத்திருந்தது.

அங்கே அவருடைய அருமை மகள் மோகனத்தைக் காணோம்! இரவு முழுதும் சத்தாவர்ணத் திருவிழாவைக் கண்டு களிக்க, சிவக்கண்ணு பிள்ளை, அவருடைய மனைவி, வீட்டு வேலைக்காரர்கள் அடங்கலாக அனைவரும் மோகனத்தைத் தனியாக வீட்டில் விட்டுவிட்டுப் போயிருந்த சமயம், அவள் எங்கோ மாயமாய் மறைந்துவிட்டாள்!

## அத்தியாயம் : 12

## வீணான கதை!

"வீணில் ஏன் வாய்மொழி
போக்குகிறாய்—பெண்ணே
மிகவும் என்மனதைப்—புண்
ஆக்குகிறாய்!" —பதம்

மோகனம் காணாமற்போன அன்று, தோடி சிவக்கண்ணு பிள்ளை வீட்டில் ஒருவரும் சாப்பிடவில்லை. பிள்ளையின் மனைவி பொன்னுத்தாயி மோகனத்தை எண்ணி மாலை மாலையாகக் கண்ணீர் தொடுத்துக் கொண்டிருந்தாள்.

தோடி சிவக்கண்ணுபிள்ளை ஆள் அனுப்பித் தேடாத இடமில்லை. சுற்றுப்புறம் நாலு வட்டகைக் கிராமங்களிலும் தேடிப் பார்த்ததில் மோகனம் இருக்குமிடத்தின் சுவடே தெரியவில்லை! காட்டு மரங்களை இராப்பொழுதில் திருட்டுத்தனமாக வெட்டி வந்து விற்கும் கள்ள மூக்கனை விசாரித்ததில், கருக்கல் பொழுதில் சோளபுரம் ஜமீந்தார் மகன் சின்னத்தம்பியின் செவர்லெட் கார் மொளப் பொட்டலிலிருந்து மேல ரஸ்தாவை நோக்கி விர்ரென்று பறந்து போனதாகவும், அதில் சின்னத் தம்பியும் கிருதா மீசையுள்ள இரண்டு முரடர்களும் மோகனத்தைப் போல் ஜாடையுள்ள ஒரு பெண்ணும் போவதைத் தன் கண்ணால் பார்த்ததாகவும் சொன்னான்.

அதைக் கேட்டுச் சிவக்கண்ணுபிள்ளை புழுப்போல் துடித்தார். ஜமீந்தார் மகன் தன் அருமை மகள் மோகனத்தைத் தூக்கிக்கொண்டு போய்விட்டான். சந்தேகமில்லை!

தோடிச் சிவக் கண்ணுபிள்ளை பலவிதமான எண்ணச் சுழல்களில் சிக்கிச்சிதைந்துபோனார்! ஆசைக்கு ஒரு மகளாய்ப் பிறந்து வளர்ந்த மகள் காணாமற் போன துக்கம் ஒருபுறம். பொன்னையன் சௌந்தர வடிவு கலியாணத்திற்கு மோகனம் குறுக்கே நிற்கிறாள் என்று ஜமீன்தார் மகன் அவளைத் தூக்கிக்கொண்டு போய் விட்டானோ என்ற சிந்தனை ஒருபுறம். அது சௌந்தர வடிவின் ஏற்பாடாயிருக்கலாமோ, அதற்கு நம் பொன்னையனும் உடந்தையாய் இருப்பானோ என்ற சந்தேகம் ஒருபுறம். அதனால்தான் தம்மை ஏமாற்றுவதற்காகப் போட்டி நாயனத்

தில் மகுடி வாசிக்காமல் இப் பலி நாடகம் நடத்தினுனே என்ற மனக்கொதிப்பு ஒருபுறம். பெண் மோகம் பிடித்த ஜமீந்தார் மகன் பருவப் பெண்ணை தம் மகளை என்ன செய்வானே, சிலநாள் கழித்து அவளைக் கன்றிப்போன பூவாய் கொண்டு வந்து விட்டெறிவானே என்ற விபரீத பயம் ஒருபுறம். தம்மகள் ஜமீந்தார் மகனோடு ஓடிவிட்டாள் என்று ஊர் கதை கட்டிச் சிரிக்குமே என்ற அவமானம் ஒருபுறம். ஜமீந்தார் மகன் தம் மகளைத் திருப்பிக் கொண்டுவந்து விடுவானே, அல்லது அவள் அழகைப் பலவந்தமாகப் பருகிய பிறகு கொலை செய்து விடுவானே என்ற மனப் பிராந்தி ஒருபுறம். அவனை எதிர்த்து ஏழை நாயனக்காரனை தாம் என்ன செய்ய முடியும் என்ற ஆத்திரம் ஒருபுறம். அளவு மீறிய துக்கத்தின் போதும் ஆத்திரத்தின் போதும் மனிதன் எதைததான் சிந்திக்க மாட்டான் என்ற நியதி இல்லை.

இவ்வளவுக்கும் மத்தியில் சிவக்கண்ணு பிள்ளையின் உணர்ச்சிகள் வெறியடைந்து விட்டன. இவ்வளவுக்கும் காரணம் சௌந்தரவடிவும் பொன்னையனுந்தானே என்று ஆத்திரமுற்றவராய், தெருத் திண்ணையை நோக்கி ஓடி அங்கே பேய் பிடித்தவன் போல் கிடந்த பொன்னையனிடம் வந்து இரைந்தார்:

"டேய் பொன்னையா, என்னைக் கொன்று விட்டாயடா! என் பேரு, செல்வாக்கு, மகள் எல்லாத்தையும் நாசமாக்கிவிட்டாயடா! அந்தச் சிறுக்கி சௌந்தரவடிவைக் கட்டிக்கணுமினு நீ ஆசைப்பட்டா அதை நானு தடுத்தேன்? என் மகள் மோகனத்தைத்தான் நீ கட்டிக்கணுமினு நான் கட்டாயப்படுத்தினேனு? ஏண்டா, இந்த நாடகமெல்லாம்? கட்டிக் கொடுக்கிற என் பெண்ணை இப்போ ஜமீந்தார் மகன் தூக்கிக் கொண்டு போய்விட்டானே! இது, நீயும் அந்தச் சிறுக்கி சௌந்தரமும் சேர்ந்து செய்த சதியிடா சதி!" என்று கத்தினுர் பொன்னையனைச் சுட்டெறித்து விடுபவர்போல்.

பொன்னையனுக்குத் தூக்கி வாரிப்போட்டது "மாமா! நானு ஜமீந்தார் மகனைக் கூப்பிட்டு உங்கள் மகளைத் தூக்கிக் கொண்டு போகச் சொன்னேன்? ஆத்திரம் வந்தாலும் அளந்து பேசணும், மாமா! உங்க பேச்சைக் கேட்டு போட்டி நாயனத்துக்கு சம்மதிக்கப்போய் என் பேரு கெட்டுப் போச்சேன்னு உருகிக்கினு இருக்கிறேன். இன்னும் என் மனசை வேறே ஏன் மாமா புண் படுத்தறீங்க?' என்றான் பொன்னையன் தாளாத துக்கத்தோடும் தளர்ந்த மனத்தோடும்.

"ஏண்டா பொன்னையா, இந்த நாடகமெல்லாம்? போட்டியிலே நீ மகுடி வாசிக்கத் தயங்கினபோதே சந்தேகப்பட்டேன்!" என்றார் சிவக்கண்ணு பிள்ளை, பொன்னையனை சர்வ நிச்சய மான சந்தேகக் கண்ணோடு பார்த்த வண்ணம்.

"மாமா, போட்டியிலே மகுடி வாசிக்கிறதில்லையினு சௌந்தரத்துக்கு வாக்குறுதி கொடுத்தேன். அதுதான் நான் மகுடி வாசிக்கவில்லை!" என்று பொன்னையன் அலட்சியமாக வும கம்பீரமாகவும் கூறினான்.

"ஏன் கொடுத்தாய், அவள் மீதிருந்த ஆசையாலேதானே? அந்தச் சௌந்தர வடிவு மானங் கெட்டவள் என்று தெரிஞ் சிருந்தும் ஏண்டா உனக்கு இந்தப் பிழைப்பு? அவள் மினுக் கைப் பார்த்து மயங்கிட்டியா? மானங் கெட்டவளைக் கண்டு மயங்குகிறவன் மனுஷனா? நீ மகுடி வாசிக்காதபோது அவள் ஏன் தோடி வாசித்தாள்? அதைச் சொல்லு! நீ கச்சேரியில் தோடி வாசிக்க மாட்டாய் என்கிற விஷயம் நீ சொல்லித்தானே அவளுக்குத் தெரிஞ்சிருக்கும்? பொன்னையா, நீ என் வீட் டுக்கு வந்தப்புறந்தான் என் பேரு, என் மரியாதை, என் மகள், எல்லாம் போச்சு! பொன்னையா, உனக்கு நான் என்ன கெடுதலடா செய்தேன்? நல்லா யிருப்பே, இதோடு என்னை விட்டுடு! என் மகள் மோகனத்தை என்னிடம் கொண்டுவந்து விட்டுட்டு, நீ எந்த மானங்கெட்டவளை வேண்டு மானாலும் கலியாணம் செய்துக்க! இல்லையினா இந்த வீட்டிலே ரெண்டு கொலைவிழும்!" என்று அக்கினிக் கொப்பரை போல் பொறிந்தார் சிவக்கண்ணு பிள்ளை.

அதற்குப் பொன்னையன் ஒரு பதிலும் சொல்லவில்லை. ஆத்திரககாரனுக்குப் புத்திமட்டு என்று அவனுக்குத் தெரி யும்! ஆனால் சிவக்கண்ணுபிள்ளை ஆத்திரமாக ஒவ்வொரு வார்த்தையும் சொல்லச் சொல்ல பொன்னையனுக்குச் சௌந் தரவடிவின்மீது ஆத்திரம் பற்றியெறிந்தது! 'சௌந்தரவடிவு ஜமீந்தார் மகனால் மானமழிந்தவள் என்பதற்காக மோக னத்தை மணக்க இசைந்தோம். இது தெரிந்த சௌந்தர வடிவு அந்த மோகனத்தையும் மானமழிந்தவளாக்க இவ்வாறு குயுக்தி செய்திருப்பாள். தன்னைப்போல் மோகனமும் ஜமீந் தார் மகனால் மானங்கெட்டவள் என்ற பேரை உண்டாககத் தான் அந்த வினைகாரி சௌந்தரவடிவு இவ்வாறு சதி செய் திருக்கிறாள்' என்று பொன்னையன் எண்ணினான். ஆத்திரத் தில் சிந்தனையின் திராசு சரியாக இராது! தான் மகுடி வாசிக் காதபோது அவள் மட்டும் ஏன் அவன் வாசிக்காத தோடியை

வாசித்தாள்? அவள் மகுடி வாசிக்காததற்குச் கூறிய காரணங் களெல்லாம் வெறுங்கட்டுக் கதையாக இருக்கவேண்டும். இந்தச் சந்தேகங்களையெல்லாம் அவள் வீட்டுக்குப்போய் அவளிடமே நேரில் கேட்டுத் தீர்த்துக்கொள்வது. அவள் ஒழுங்காகப் பதில் சொல்லாவிட்டால் அந்த இடத்திலேயே அவள் கழுத்தை முறித்துக் கொன்று விடுவது, என்று கிளம் பினான் பொன்னையன் சௌந்தரவடிவின் வீட்டை நோக்கி.

அப்போது மாலை ஏழு மணி. எங்கும் நன்ருக இருட்டி விட்டது.

பொன்னையன் சௌந்தரவடிவின் வீட்டினுள் நுழைந்த போது, அவள் அரிக்கேன் லாந்தருக்கருகில் படுத்தவாறு, ஒரு பஞ்சாங்கத்தைப் புரட்டிக்கொண்டிருந்தாள். போட்டி நிபந் தனைப்படி அவளுக்கும் தனக்கும் கலியாணம் நடத்துவதற்கு ஒரு நல்ல முகூர்த்தம் பார்க்கிருளோவென்று பொன்னையன் உள்ளங் குமுறினன்.

தன் பின்னல் வந்து நிற்கும் பொன்னையனைப் பார்த்ததும் சௌந்தரவடிவின் முகம் மலர்ந்தது. துள்ளிக் குதித்துக் கொண்டு எழுந்து நின்ருள். களங்கமில்லாததுபோலத் தோன் றும் அவளுடைய அந்தச் சிவந்த முகத்தைப் பார்த்ததும், பொன்னையனின் உள்ளத்தில் எழுந்து சீறிக்கொண்டிருந்த ஆக்ரோஷப் பாம்புகள் மகுடியின்முன் மயங்கும் நல்ல பாம்பு களைப்போல அடங்கிவிட்டன.

" ஏது இந்தப்பக்கமே எட்டிப்பார்க்காமலிருந்தவங்க இன் னைக்கி இங்கே வந்திருக்கீங்க?" என்று சௌந்தரம் பொன்னை யனைப்பார்த்துச் சிரித்தாள்.

'சீச்சி, இவளும் ஒரு பெண்ணு? எதிர்வீட்டில் பெண்ணைக் காணுமென்று கலங்குகிருர்கள். இங்கே இவள், தன்னேடு உயிர்க்குயிராகப் பழகிய மோகனம் காணுமற்போன கவலை கூட சிறிதுமில்லாமல் சிரித்துக்கொண்டிருக்கிருள்? இவள் பெண்ணு, மோகினிப் பிசாசா' என்று பொன்னையன் குமுறினன்.

" ஜமீந்தார் மகன் சின்னத்தம்பி எங்க மோகனத்தைத் தூக்கிகொண்டு போய்விட்டானுமில! அந்த அயோக்கியப் பயல் மோகனத்தை எங்கே வைச்சிருக்கிருன்?" என்று கடு கடுப்பான குரலில் பொன்னையன், சௌந்தரவடிவை நோக்கி வார்த்தைகளை வீசினன்.

" என்னைக் கேட்டால்? நானு மோகனத்தைத் தூக்கிக் கொண்டு போகச் சொன்னேன்?" என்ருள் சௌந்தரம்

குரல் தளர, பொன்னையனை ஒரு மாதிரியாக ஏறிட்டுப்பார்த்த வண்ணம்.

"வீட்டிலே பெரியவங்க ஒருத்தருமில்லாமல் ஒரு சிறு பெண் தனியாக இருக்கிற சமயத்தில் பலவந்தமாகத் தூக்கிக் கொண்டு போகிறதுதான் உங்க ஜமீந்தார் மகன் லக்ஷணமோ ?"

"ஏன்? மோகனம் அவளாகவே ஜமீந்தார் மகனோடு போயிருக்கக் கூடாதா?"

"எங்க மோகனம் ஒண்ணும் உன்னைப்போல் அப்படியில்லே!"

அதைக் கேட்டதும் ஆத்திரமுண்டவளாய் சௌந்தரவடிவு பதிலுக்குப் பதில் ஏதோ சொல்ல வாயெடுத்தாள். ஆனால் மனசை அடக்கிக்கொண்டாள்.

"அந்தச் சின்னத்தம்பிப் பயலே என்ன செய்கிறேன் பார்! அவன் ஜமீந்தார் மகன் என்றால் அதுக்காக ஊரிலேயிருக்கிற பெண்களெல்லாம் அவன் ஆசைநாயகிகளாகிவிடுவாங்களா? போலீஸ் ஸ்டேஷனில் ரிப்போர்ட் கொடுத்து அந்தப் பயலே என்ன செய்கிறேன், பார்!"

"தாராளமாகச் செய்யுங்கள்! அதனால் எனக்கொன்றும் நஷ்டமில்லே!"

"ஆமா, இனி ஜமீந்தார் மகன் போனா உனக்கென்ன நஷ்டம்? நான் ஒருத்தன் வகையா உன் கையிலே மாட்டிக் கொண்டுவிட்டேனல்லவா? ஆனா சௌந்தரவடிவு, போட்டியிலே ஜெயிச்சுட்டோம், கலியாணம் நடந்து ஜோரா இருப்போமென்று சந்தோஷப்படாதே! நீயும் நானும் பேருக்குப் புருஷன் மனைவியாக வாழற வாழ்வு ஒருநாள் தான்!" என்று சீறினான் பொன்னையன்.

அந்தச் சந்தர்ப்பத்தில் பதிலுக்குப் பதில் ஆத்திரமாகப் பேசினால் வார்த்தைகள் முற்றி வினையில் போய்த்தான்முடியும் என்று சௌந்தரம் தன் மனசை அடக்கிக்கொண்டாள். பொன்னையன் மனதைச் சமாதானபபடுத்துவதும் அவசியம் என்றும் கருதினாள். மனிதனின் இருதயத்தில் கிடக்கும் தீப்பொறிகளை ஊதிக் கிளறி விடுவதைவிட, குளிர்ந்த பன்னீரைக் கொட்டி அணைக்க முயல்வதுதான் சரியென அவளுக்குத் தோன்றியது.

"இந்தாப்பாருங்க, தீர ஆலோசித்த பிறகுதான் ஒரு விஷயத்தை பெண்பிள்ளைகளிடம் கொட்டணும். கொட்டிப்பிடலாம்;

ஆனால் அப்புறம் கொட்டியதை அப்படியே அள்ள முடியாது! நான் என்ன தப்பு செய்தேன்? பதட்டமில்லாமல் சொல்லுங்கள்!'' என்றாள் சௌந்தரம் கண்களில் ததும்பும் நீரை நாசுக்காகத் துடைத்துக்கொண்டு.

''நான் மகுடி வாசிக்காதபோது போட்டியில் நீயேன் தோடி வாசித்தாய்?''

''நான் தோடி வாசிப்பதில்லை என்று உங்களிடம் வாக்குறுதி கொடுத்தேனா?''

''நான் கச்சேரிகளில் தோடி வாசிக்கமாட்டேன் என்ற விஷயத்தை எந்தப்பயல் உன்னிடம் சொன்னான்?''

''என் வீட்டில் எந்தப்பயல் சொல்ல வருவான்? எல்லாம் உங்கள் மோகனந்தான்!''

''அவன் சுத்த அசடு! நீ வீணைகாரி! அதுதான் மனசு குளிரப்பேசி மோகனத்துக்கிட்டேயிருந்து விஷயத்தைப் பறிச்சிருக்கே!''

''இந்தாப்பாருங்க, சும்மா என் மனசைப் புண் படுத்தாதீங்க! நான் ஒண்ணும் தப்பு செய்யலே!''

''ஆமா, நீ மகா இவள்தான்! பாமபுக்கு நாக்கில்தான் விஷம். பெண்ணுக்குச் சர்வாங்கமும் விஷமினு பெரியவங்க சும்மாவா சொன்னாங்க?''

''அந்தப் பெரியவங்க தாய்வயிற்றில் பிறக்காதவங்களாக இருப்பாங்க! என்னிடம் நீங்க என்ன விஷத்தைக் கண்டீங்க? சொல்லுங்க!''

''ஆமா, மகா இவள்தான்! தலை முதல் கால்வரை சுத்தப் புழுகு!''

''நான் என்ன புழுகினேன்? பதறாமல் சொல்லுங்கள்!''

''நீ மகுடி வாசிக்கிறதில்லையென்பதற்குக் கூறிய கதையையெல்லாம் நான் நம்பவில்லை! நீ மகுடி வாசிக்கிறதுக்கும் உன் அப்பா மகுடி மருதக்கண்ணு பிள்ளை துர்மரணத்துக்கும் சம்பந்தமுண்டுனு சொன்னாலே எந்த மடையன் நம்புவான்? அதையெல்லாம் எவனாவது நாவல் கீவல் எழுதுகிறவனிடம் போய்ச் சொல்லு!''

''ஓகோ, அப்படிக் கேளுங்கள் சொல்லுகிறேன்! மனசைக் கொஞ்சம் சாந்தப்படுத்திக் கொண்டு கொல்லைப்பக்கம் வாருங்கள்!''

"கொல்லேப்பக்கம் எதுக்கு?"

"நான் சொல்லப்போற கதை வெறும் நாவலா, அல்லது நிஜமான்னு உங்களுக்குத் தத்ரூபமாகக் காட்டுவதற்குத்தான்... வாங்க!"

பொன்னையன் சௌந்தரவடிவைக் கூர்ந்து பார்த்தான். அந்த இருட்டு வேளையில் கொல்லேப்புறம் எதுக்குக் கூப்பிடுகிருள்? மோகனத்தைப்போல், தன்னையும் கால் கட்டுக் கைக் கட்டாய்க் கட்டி ஜமீந்தார் மகனின் செவர்லெட் காரில் தூக்கிக் கொண்டு போக ஏற்பாடு செய்திருக்கிருர்களா? ஆனல் சௌந்தரவடிவு என்னவோ ஒருவித வாஞ்சை வைத்திருக்கிருள்! அவ்வாறு செய்யமாட்டாள். எதற்கும் கொல்லேப்புறம் போய்ப் பார்ப்போம்...!

சௌந்தர வடிவு அரிக்கேன் லாந்தரை எடுத்துக்கொண்டு முன் செல்ல, பொன்னையன் அவளைப் பின்பற்றிச் சென்றுன்.

---

## அத்தியாயம் : 13

## பாம்பொடு பழகேல்!

> "கட்டுக்கு அடங்காத பாம்பைக் கட்டிவிடுவோம்
> கடும் விஷம் தன்னைக் கக்கி ஆடுபாம்பே!"
>
> —பாம்பாட்டி சித்தர் பாடல்.

ஆகாயம் கருங்கும்மென்று இருண்டிருந்தது. ஒரு நட்சத்திரம் கூட இல்லே. மாலேயில் தூறிய பிசுபிசுவென்ற மழையால் சௌந்தரவடிவின் வீட்டுக்கொல்லேயில் தண்ணீர் ஆங்காங்கே குட்டைகளாகத் தேங்கி நின்றன. ஈரமண்ணின் ஒருவித வாசமும், மழையில் நனைந்த வைக்கோல் போரின் மணமும், பிணப்பாடையிலிருந்து வரும் பச்சை மணத்தைப் போல் படர்ந்துகொண்டிருந்தது.

கண் தெரியாத இருட்டில் கட்டுத் துறையில் அசைபோடும் பசு மாடுகளின் அரவம், குட்டைத் தண்ணீரில் தாவி விழும் தவளைகளின் சலசலப்பு, சுவர்க் கோழிகளின் 'கிர் கிர் கிர்' என்ற சப்தம்......தூரத்தில் எங்கோ கண்ணுக்குத் தெரியாத பட்சிகள் இறக்கைகளைப் பட படவென்று அடித்துக்கொள்ளும்

ஓசைகள்......அந்தச் சூன்ய ஒலிகளெல்லாம் இருட்டுக்கு ஒரு விபரீதச் சூழ்நிலையை ஊட்டிக்கொண்டிருந்தன.

சௌந்தரவடிவு, லாந்தர் வெளிச்சத்தை கொல்லையின் ஒரு மூலையில் விழும்படி தூக்கிக் காட்டினாள்.

"அதோ தெரிகிறதே நாகசாமிப் புற்று......அதைப் பாருங்க" என்றாள் சௌந்தரம் கொல்லை வாசற்படியைவிட்டு இறங்காமல் தூரத்தில் நின்றுகொண்டே.

லாந்தர் வெளிச்சத்தில் கொல்லையின் ஒரு மூலையில் ஓர் ஆள் உயரமுள்ள பாம்புப் புற்று தென்பட்டது! பொன்னையனின் தேகம் புல்லரித்தது. அந்தப்புற்றுக்குள் பயங்கரமான ஒரு நாகப்பாம்பு புஸ் புஸ் என்று சீறுவதுபோல் பொன்னையனுக்குப் பிரமை தட்டியது!

பொன்னையன் சௌந்தரவடிவை மனமருட்சியோடு திரும்பிப் பார்த்தான். அவள் உடல் முழுவதும் நடுங்குவது அவள் பிடித்துக் கொண்டிருந்த லாந்தர் வெளிச்சத்தின் அசைவில் தெரிந்தது.

இருவரது நெஞ்சையும் ஒருவிதப் பயப்பிராந்தி கவ்விக் கொண்டது.

எங்கும் அந்தகாரம். சூன்யம்......

சௌந்தரவடிவு பயத்தோடு பெருமூச்செறிந்தாள்.

"இந்த உலகத்தில் மனுஷ சக்திகளையும் தாண்டி கண்ணுக்குத் தெரியாத ஒரு அதிசயமான அமானுஷ்ய சக்தி இருக்கிறது. நீங்கள் நம்புகிறீர்களா?" என்று கேட்டாள் சௌந்தரம்.

பொன்னையன் பதில் பேசவில்லை. பாம்புப் புற்றையே மருட்சியோடு பார்த்துக்கொண்டிருந்தான்.

"நிலாக்காயும் நேரத்தில், தனியாக நின்றுகொண்டு, ஓவென்று அலைகளை வீசிக்கொண்டு இரையும் கடலையும் சூன்யமான ஆகாயத்தையும் நிமிர்ந்துபார்த்தால், இயற்கையில் ஒரு பிருமாண்டமான சக்தி இருப்பது புலப்படும். சகல ஜீவராசிகளும் அயர்ந்து உறங்கும் இருட்டு நேரத்தில் ரோட்டின்மீது கிளம்பிச் சென்றால், சூழ்நிலை அந்தகாரத்தில், நம்மை ஆட்டிப் படைக்கும் கண்ணுக்குத் தெரியாத ஒரு அற்புதமான சக்தியின் துடிப்பு தட்டுப்படும்!" என்றாள் சௌந்தரவடிவு.

பொன்னையன் பேசவில்லை. அவன் மனம் பயப் பிராந்தியான ஒரு பாழ் வெளியில் பின்னிக் கிடந்தது. சிறிது நேரம்

மௌனமும் சுவர்க் கோழியின் கிர்...கிர்...கிர் என்ற சப்தமும் அவர்களது இதயத்தில் படிந்து நின்றன.

"சௌந்தரம், மகுடி மருதக்கண்ணு பிள்ளை எதனால் மரித்தார்? விஷங்குடித்து இந்தக் கொல்லையில் செத்துக் கிடந்தார் என்று சொல்லுகிறார்களே, அது உண்மையா?" என்று மெல்ல வினவினான் பொன்னையன்.

சௌந்தரவடிவின் கண்களில் நீர் துளிர்த்தது. அவள் கரகரத்த குரலில் பேசலானாள்:

"சில சமயங்களில் கட்டுக் கதைகளைவிட நிஜ வாழ்க்கையில் அபூர்வமான சம்பவங்கள் நடப்பதுண்டு. அப்படி அபூர்வமான சம்பவமொன்று என் அப்பாவின் வாழ்வில் நிகழ்ந்தது?" என்று குரல் தழதழக்கக் கூறிக்கொண்டே சௌந்தரவடிவு லாந்தரை கொல்லைத் திண்ணையின்மீது வைத்துவிட்டு உட்கார்ந்தாள். பொன்னையனும் அவளுக்கு எதிர்த் திண்ணையில் மெல்ல ஏறி உட்கார்ந்தான். அவன் முகத்தை ஆவலும் பயப்பிராந்தியும் கவ்வியிருந்தது.

தொண்டையைக் கனைத்துக்கொண்டு சௌந்தரவடிவு மெல்லப் பேச ஆரம்பித்தாள்:

"மகுடி வாசிப்பதில் எங்க அப்பாவுக்கு நிகர் யாருமில்லையென்று ஜனங்கள் சொல்லுவாங்க! அவர் மகுடி வாசிப்பதைப் பார்த்துத்தான் நாகபாசமினு ஒரு அஸ்திரம் இருந்திருக்குமினு ஜனங்களுக்குத் தோணுமாம்! அவ்வளவு உணர்ச்சி வசத்தில் கட்டுண்டு நிற்கும்படி மருதக்கண்ணு பிள்ளை மகுடி வாசிப்பாராம். ஆனால் அந்த அபூர்வமான வாசிப்பு அவருக்கு எவ்வளவு பயங்கரமான சித்திக்குப் பிறகு கிடைத்தது என்று யாருக்கும் தெரியாது! அதுவே ஒரு பெரிய கதை!" என்றாள் சௌந்தரவடிவு. அவள் குரல் கம்மியது. பொன்னையன் நிமிர்ந்து உட்கார்ந்தான்.

சௌந்தரவடிவு மறுபடி கதையைத் தொடர்ந்து சொல்ல ஆரம்பித்தாள்:

"நானும் என் அம்மாவும் இந்த வீட்டிற்குக் குடி வருவதற்கு முன்னால், மருதக்கண்ணு பிள்ளை இரவில் பால் சாப்பிட்டுவிட்டு வந்து இதே கொல்லையில் அந்தத் திண்ணையின் மீது உட்கார்ந்து கொண்டு ரா முழுவதும் மகுடி வாசித்து சாதகம் செய்வது வழக்கமாம். அவர் உயிருக்குயிராய் மதித்ததும், ஓயாமல் வாசித்ததும் மகுடி ஒன்றுதானும். தன்னுடைய மகுடி வாசிப்பில் விஷப்பாம்புகள் கட்டுண்டு நிற்குமா

என்று விஷப் பரீட்சை செய்வதற்காகவே அதோ தெரிகிற புற்றைக் கலைக்காமல் வைத்து வந்தாராம். என்றாவது ஒரு நாள் புற்றைவிட்டுப் பாம்பு வெளியே வரும். தன்னுடைய வாசிப்பில் மயங்கி நிற்கும், என்ற ஆசையோடு ஒவ்வாரு நாளிரவும் பொழுது விடியும்வரை திருப்பித் திருப்பி மகுடியே ஊதிக் கொண்டிருப்பாராம் மனப்பூர்வமான மனித ஆசைகள் என்றாவதொருநாள் சில அமானுஷ்ய சக்திகளால் நிறைவேறி விடுகின்றன...” என்று நிறுத்தினாள்.

“உம், அப்புறம்?” என்றான் பொன்னையன் ஆவலோடு.

“நாளடைவில் மருதக்கண்ணு பிள்ளையின் மகுடி வாசிப்பில் மெருகு ஏற ஏற அவருடைய நாதஸ்வர இசையில் ஒருவித ஆகர்ஷண சக்தி படிந்து விட்டது..ஒரு நாள் உணர்ச்சி வசமாகி உச்ச நிலையில் மகுடியை வாசித்துக் கொண்டிருந்தபோது, அந்தப் பாம்புப் புற்றிலிருந்து ஒரு நாகப் பாம்பு மெல்ல மெல்ல வெளிவந்து அவர் அருகில் நின்று படமெடுத்து ஆடத் தொடங்கியதாம். நல்ல வேளை! அவர் பாம்பைக்கண்டு பயந்துபோய் வாசிப்பதை நிறுத்திவிடாமல், இசையின் உணர்ச்சியலைகளில், தொய்வோ ஒரு சிறு அணுகூட வித்தியாசமோ ஏற்படாதபடி அன்று மிக அபூர்வமாக மகுடி வாசித்து முடித்தாராம். மகுடியின் இசையால் மந்திரத்தால் கட்டுண்டதுபோல் மயங்கிப் படமெடுத்து நின்ற நல்ல பாம்பு மகுடியைச் சம்பூர்ணமாக ஊதி முடித்ததும் அடங்கி மறுபடி நெளிந்து நெளிந்து புற்றுக்குள் போய்விட்டதாம் பாம்பைக்கண்ட பயத்தால் மகுடி ஊதுவதை மருதக்கண்ணு பிள்ளை நடுவே நிறுத்தியிருந்தால் அந்த நல்ல பாம்பு பொத்தென்று அவரைப் போட்டிருக்கும்” என்று கூறி நிறுத்தினாள் சௌந்தரம்.

“இதெல்லாம் உனக்கு யார் சொன்னது?”

“என் அப்பா மருதக்கண்ணு பிள்ளைதான்! நானும் என் கண்கூடாக அப்பா மகுடி ஊதும்போது பாம்பு படமெடுத்து ஆடுவதைப் பார்த்தேன். அந்தக் காட்சியை இன்று நினைத்துக் கொண்டாலும் என்மனம் நடுங்குகிறது!” என்றாள் சௌந்தரம் கலவரத்துடன்.

சிறிது நேரம் மௌனம் நிலவியது. இருட்டில் கட்டுத்துறையில் பசு மாடுகள் அசை போடும் அரவம் இருவர் மனதையும் ஜில்லிடச் செய்தது.

“உம், அப்புறம்?” என்று பொன்னையன் கேட்டான். சௌந்தரம் தொடர்ந்து கதையைச் சொல்லலானாள் :

"மூன்று வருஷத்துக்கு முன்னுடி, நானும், என் அம்மாவும் இந்த வீட்டிற்குக் குடிவந்த மூன்ரும்நாள், நானும் என் அப்பாவும் இதே கொல்லைத் திண்ணையில் உட்கார்ந்திருந்தோம். ராத்திரியில் பால் சாப்பிட்டு வந்ததும், அவர் சகல ராகங்களையும் எனக்கு சிக்ஷை சொல்லிக்கொடுப்பது வழக்கம். அவர் எனக்கு ரா முழுதும் நாதஸ்வர சிக்ஷை சொல்லிவைத்தாரே தவிர, அவருடைய வாசிப்பில் தனிச் சிறப்பான மகுடியை எனக்குச் சொல்லிவைக்க முயலவேயில்லை.........

"இந்த வீட்டிற்குவந்த மூன்ரும் நாள் ராத்திரி, நானும் மருதக்கண்ணு பிள்ளையும் நாயனம் வாசித்துக்கொண்டிருந்த போது, 'அப்பா. உங்களுக்குப் புகழ்தந்த மகுடியை எனக்கு நல்லா சொல்லித்தரவேயில்லையே, ஏன்?' என்று கேட்டேன். ஏன் அப்படிக்கேட்டேன் என்று இன்று தோன்றுகிறது....

"அதற்கு அவர், 'குழந்தே, நீ பெண் பிள்ளை. மனசிலே திடம் வேணும். ஞான பூர்வமாக மகுடி வாசித்தால் பாம்புகள் எல்லாம் ஊர்ந்துவந்து படமெடுத்து ஆடும். அப்போது நீ பயந்து மகுடி வாசிக்கிறதை நிறுத்திவிடக் கூடாது. வாசிப்பில் அபஸ்வரம் விழுந்தாலும் பாம்பு மனமுறிந்து யாரையாவது தீண்டிவிடும்' என்ருர்....

"நான் சிரித்தேன். நாதஸ்வரத்தில் மகுடி வாசித்தால் பாம்பு படமெடுத்து ஆடும் என்பதை நான் நம்பவேயில்லை. ஆனுல் நான் சிரித்ததைக்கண்டு உள்ளம் உடைந்துபோய் அவர் அன்றிரவு நிதர்சனமாக எனக்குக் காட்டிவிட்டார்....

"அவர் நாயனத்தை எடுத்து உணர்ச்சி பூர்வமாக உச்ச ஸ்தாயியில் மகுடியை வாசிக்க ஆரம்பித்ததும் அதோ அந்தப் பாம்புப் புற்றிலிருந்த ஒரு பெரிய பாம்பு கிளம்பி வந்து அவர் அருகில் நின்று படமெடுத்தாடியது. அவரது நாயனத்திலிருந்து வரும் இசைச் சுழற்சிகளுக்கேற்றபடி நெளிந்து நெளிந்து படமெடுத்து ஆடியது. என் சர்வாங்கமும் நடுநடுங்கியது, நல்லவேளை, நான் 'அப்பா' என்று பயந்து கதறவில்லை, இல்லையென்ருல்...'' என்ற சௌந்தரவடிவின் குரல் நடுங்கியது. இருட்டில் சுவர் கோழிகளின் கிர் கிர் கிர் என்ற சப்தம் பயங்கரமாய் எதிரொலித்தது.

சிறிது நேரங் கழித்து மறுபடி சௌந்தரவடிவு சொல்ல ஆரம்பித்தாள்: "அப்புறம் என் அப்பா என்னைப்பார்த்து, 'சௌந்தரம், நீயும் இப்படி மகுடி வாசிக்கணும். இதே

பாம்பு உன் மகுடியில் கட்டுப்பட்டு நிக்கணும்!" என்றார். எனக்கு பயமாயிருந்தது. மகுடி வாசிக்கக் கற்றுக்கொள்ளவே எனக்கு ஒரே பீதியாயிருந்தது. ஆனால் மருதக்கண்ணு பிள்ளை என்னை விடவில்லை. அவர் போக்கே பைத்தியம்போல் ஒரு தினுசானது. "பாம்புகளையும் கட்டுகிறபடி நாதஸ்வரத்தில் மகுடி ஊதும் வித்தை என்னோடு அழிஞ்சுபோய் விடக்கூடாது! என் பொண்ணுக்கும் இந்த வித்தை சித்தியாகி என் காலத்துக்குப் பிறகும் மகுடி மருதக்கண்ணு பிள்ளையின் மகள், மகுடி சௌந்தர வடிவு என்ற பெயர் நிலைக்கணும்!" என்றார். அவருடைய நினைப்பை என்னால் தடுக்க முடியவில்லை. அவருடைய ஆசையை நிறைவேற்ற வேண்டியவளானேன். எனக்குப் பீதியாயிருந்தாலும் என் அப்பாவைப் போல் மகுடி வாசிக்கணும் என்று உள்ளூர ஆசையுமிருந்தது......

பிறகு அவர் ஒவ்வொரு நாள் இரவும் இந்தக் கொல்லைத் திண்ணையில் உட்கார்ந்துகொண்டு ரா முழுதும் என்னை மகுடி வாசிக்கச் சொல்லி சிக்ஷை சொல்லிவந்தார். நான் அந்தப் புற்றையே பீதியோடு கடைக்கண்ணால் பார்த்துக்கொண்டு மகுடி ஊதுவேன். நான் மகுடி ஊத ஊத என் வாசிப்பிலும் மெருகும் லயசுத்தமும் ஏற்பட்டுவிட்டது. என் மகுடி வாசிப்பு சம்பூர்ணமான அன்று, நான் உணர்ச்சி வசமாக, மகுடி ஊதிக் கொண்டிருந்த போது அந்தப் புற்றிலிருந்து பாம்பு படமெடுத்த வண்ணம் கிளம்பி வந்தது. என் தேகம் நடுங்கிவிட்டது. 'அப்பா' என்று அலறியவாறு மகுடி வாசிப்பதை அரை குறையாக விட்டேன். அப்போது அந்தப் பாம்பு பயங்கரமாகச் சீறி வந்து, அதனருகில் கட்டுத்துறையில் படுத்திருந்த கன்றுக் குட்டியின் காலில் பொத்தென்று போட்டுவிட்டு பாம்புப் புற்றுக்குள் போய் மறைந்துவிட்டது. பாம்பால் தீண்டப்பட்ட கன்றுக்குட்டி, 'அம்மா' என்று அலறியது. அன்று அலறியது தான்; மறுநாள் காலையில் அது செத்துவிட்டது! அந்தக் காட்சியை நினைத்துக் கொண்டால் இன்றும் என் மனதில் அந்தக் கன்றுக் குட்டியின் பரிதாபகரமான குரல் கதறுவதுபோல் பயமுண்டாகிறது!" என்று சௌந்தரம் நிறுத்தினாள். அவள் தோள்கள் புல்லரித்தன. கட்டுத்துறையில் பசுமாடு புலம்புவதுபோல் தோன்றியது.

சௌந்தரவடிவு மறுபடி கதையைத் தொடர்ந்தாள்:

"மறுபடி என் அப்பா எவ்வளவு வற்புறுத்தியும் நான் இந்தக்கொல்லையில் மகுடி வாசிக்கவே மறுத்துவிட்டேன். என் அம்மாவும் அதை விரும்பவில்லை. 'உன் அப்பாவுக்குத்

தான் இந்த மகுடிப் பைத்தியம் பிடிச்சு ஆள் உருக்குலைந்து போயிருக்கிறார். உனக்கும் அந்த மகுடிப் பைத்தியம் வேண்டாம் சௌந்தரம். நீ என்ன ராகங்களை வேண்டுமானாலும் சம்பூர்ணமாகக் கற்றுக்கொள். ஆனால் அந்த மகுடியை மட்டும் சம்பூர்ணமாகக் கற்றுக்கொள்ளாதே. உன் அப்பா தினசரி கொல்லையில் உட்கார்ந்து கொண்டு ராத்திரிப் பூரா மகுடி ஊதறதும், பாம்பைப் படமெடுத்து ஆடவைத்து விஷப் பரீட்சை செய்யுறதும் பார்க்க எனக்குக் கண்றாவியாயிருக்கு! பாம்போடு விளையாடுகிறவன் கடைசியில் அந்தப் பாம்பாலே செத்துப்போவான்னு உலகத்திலே வசனம் சொல்லுவாங்க. அதை நினைக்கும்போது எனக்குப் பைத்தியம் பிடித்துவிடும் போலிருக்கு' என்று என அம்மாள் ஓயாமல் முணுமுணுப்பாள்.

"இது சம்பந்தமாக என் அம்மாவுக்கும் அப்பாவுக்கும் அடிக்கடி சச்சரவுகள் உண்டாகும். 'குடியிருக்கிற வீட்டில் பாம்புப் புற்றை வைத்து வளர்ப்பார்களா! நாலு ஆளைவிட்டு அந்தப்புற்றைக் கலைக்கச் சொல்லுகிறேன்' என்பாள் என் அம்மா. 'புற்றைக் கலைத்தால் நான் இந்த வீட்டைத் தீ வைத்துவிடுவேன்! தாலியை அறுத்தெறிந்துவிட்டு நீயும் உன் பொண்ணும் தெருவிலே நிக்கவேண்டியதுதான்!' என்று அப்பா இறைவார். இருவருக்கும் இது காரணமாக பல தடவைகள் பேச்சு வார்த்தைகள் கூட இலலாமல் போய்விடும்.

"இவ்வளவு பைத்தியக்கார வெறியுள்ள என் அப்பாவின் பிடிவாதத்தின்முன் என் பயம் என்ன செய்யமுடியும்? ஒரு நாள் அவர் என்னைக் கூப்பிட்டு, 'இன்னைக்கி பௌர்ணமி. இன்னைக்கி ராத்திரி கொல்லைத் திண்ணையில் உட்கார்ந்து நீ மகுடி ஊதணும். என் மகுடி வாசிப்பைவிட உன் வாசிப்பில் உணர்ச்சி ரீங்காரம் நல்லா அடைஞ்சிருக்கு. உன் வாசிப்பை கேட்கணுமினு பிரியப்படுகிறேன். இல்லையினா நான் சாப்பிடாமல் பட்டினி கிடந்து செத்துப்போவேன்," என்றார். அது போல் அவர் அன்று பூராவும் ஒரு குவளைத் தண்ணீர்கூடச் சாப்பிடவில்லை. பைத்தியம் பிடித்தவர் போல் வீட்டில் குறுக்கிலும் நெடுக்கிலும் அலைந்து கொண்டிருந்தார். கொல்லையில் உள்ள பாம்புப் புற்றை ஓயாமல் பார்த்து ஏங்கிக்கொண்டிருந்தார். அவர் நிலையைப் பார்க்க என்னால் சகிக்க முடியவில்லை. அன்றிரவு நான் இதே கொல்லைத் திண்ணையில் அவர் முன் உட்கார்ந்து மகுடி ஊத ஆரம்பித்தேன்.

"அப்போது நடுச்சாமம். வானத்தில் சவம்போல் நிலா செத்துக் கிடந்தது. சுற்றிலும் வாடைக்காற்று அடித்தது......

"இசை என்பது தன்னை மறக்கச் செய்யும் வெறி. நான் என்னை மறந்து உணர்ச்சி பூர்வமாக மகுடி வாசித்துக் கொண்டிருந்தபோது, இசையலைகளின் வெறி உச்சத்தையடைந்த சமயம், பாம்புப்புற்றில் சலசலப்புக் கேட்டது. வாசிப்பதை விடாமல் கடைக்கண்ணால் பார்த்தேன். புற்றிலிருந்து நாகப் பாம்பு நெளிந்து நெளிந்து வந்து என் அப்பா அருகில் வந்து படமெடுத்து ஆடியது. என் உள்ளம் கலவரமடைந்திருந்தாலும் நான் வாசிப்பதை நிறுத்தவில்லை. அரைகுறையாக நிறுத்தி விட்டால் படமெடுத்தாடும் பாம்பு சீறி எங்களில் யாரையாவது கடித்துவிடும் என்ற பயம் எனக்கு. என் முகமெல்லாம் வியர்த்துக் கொட்டியது. பயத்தால் கண்களை மூடிக்கொண்டு, இசையின் ரீங்காரம் கிண் கிண் என்று என் உள்ளத்தில் இறைய, இசையின் உச்சஸ்தாயியைவிட்டு சிறிதும் வழுவிவிடாமல் மிகவும் கவனமாக மகுடி ஊதிக்கொண்டே இருந்தேன்......... எந்த இடத்தில் எந்த க்ஷணத்தில் எப்படி மகுடி வாசிப்பதை நிறுத்துவதென்றே எனக்குப் புரியவில்லை. அப்போது என் அப்பாவின் அருகில் ஏதோ சந்தடி கேட்டது...

"மகுடி வாசிப்பதை அப்போதும் நிறுத்தாமல் கண்களைத் திறந்து பார்த்தேன். என் அப்பாவுக்கும் அந்த நாகப் பாம்புக்கும் இடையில ஓரடி தூரங்கூட இராது. அந்த நாகப் பாம்பு உஷ் உஷ் என்று தன் பயங்கரமான விஷ நாக்குகளை நீட்டிக்கொண்டு, இசையின் ரீங்காரத்தில் லயித்து, பரவசமயமாகப் படமெடுத்து ஆடிக் கொண்டிருந்தது. நிலா வெளிச்சத்தில் நாகரத்தினம்போல் பளிச் பளிச்சென்று மின்னும் அந்த நாகப்பாம்பின் கண்களை உற்றுப் பார்த்தேன். அவை—

"என் ரத்தத்தையே உறிஞ்சுவதுபோல் அந்தப் பாம்பின் கண்கள் என் முகத்தையே ஊடுருவிப் பார்த்துக் கொண்டிருப்பது போல் தோன்றியது. நான் சூழ்நிலையை மறந்தேன். 'அப்பா' என்று பயங்கரமாய் அலறி மகுடியை அப்படியே நடுவில் நிறுத்திவிட்டேன்...

"அடுத்த கணம் அந்தப் பாம்பு பயங்கரமாய் சுருண்டு சீறி அருகிலிருந்த என் தந்தையின் தொடையில் தன் விஷ நாக்கால் தீண்டிவிட்டது. 'ஐயோ, தொலைந்தேன்!' என்று என் அப்பா கதறியவாறு திண்ணையில் சாய்ந்து விட்டார். பாம்பு ஆக்ரோஷம் தீர்ந்து புற்றுக்குள் ஓடி மறைந்து விட்டது!" என்றாள் சௌந்தரம். அதற்குமேல் அவளால் பேச முடியவில்லை. குரல் செத்துவிட்டது.

பொன்னையனுக்கோ, அந்தக் கொல்லை, பாம்புப்புற்று எல்லாம் தலைகீழாகச் சுற்றுவது போலிருந்தது.

"உம், அப்புறம்?" என்றான் பெருமூச்சுடன்.

"அப்புறமென்ன? தூங்கிக்கொண்டிருந்த என் அம்மா எழுந்தோடி வந்து கூவி அழுதாள். நான் கதறினேன்..ஆனால் கண்ணீர் வடித்துப் பயனென்ன? என் அப்பாவின் உடலெங்கும் கடும் விஷம் ஏறி நீலம் பாய்ந்து விட்டது. ஊராரும் வைத்தியரும் வருவதற்குள் அவருடைய ஜீவன் ஒடுங்கி விட்டது. விஷங்குடித்தவர்போல் அவர் முகம் ஒரே நீலமாயிருந்தது. நாங்கள் பாம்பின் கதையைச் சொல்லவில்லை. சொன்னாலும் நம்பியிருக்க மாட்டார்கள்!" என்றாள் சௌந்தரம் கண்களில் நீர் வடிய.

பிறகு அவள் தொடர்ந்து, "மகுடி மருதக்கண்ணு பிள்ளை சாகுந்தருவாயில் என்னை அருகே அழைத்து, 'சௌந்தரம்! பாம்புகளும் படமெடுத்தாடும்படி மிகவும் உணர்ச்சி பூர்வமாக மகுடி வாசித்தாலும், வாசிக்கக் கேட்டாலும் நம்மிடையே பயித்தியக்காரத்தனமான ஒரு வெறியும் பரவசமும் உண்டாகும். மனித இதயத்தில் புதைந்துகிடக்கும் பாம்பு உணர்ச்சிகளைப் படமெடுத்து ஆடச் செய்யும்! மனிதனிடம் மறைந்து கிடக்கும் இந்த நாச உணர்ச்சிகளை வெளிக்கிளப்பி விளையாட வைத்து வேடிக்கை பார்க்கும் இந்த வித்தை, அபூர்வமான என்னுடைய இந்த மகுடி வாசிப்பு என்னோடு அழிந்து போகட்டும்! எனக்குப் பின் உனக்குச் சித்தியாயிருக்கும் இந்த அபூர்வமான வாசிப்பு உன்னைவிட்டு அழிந்து போகணும்! இனி எந்தக் காரணத்தைக் கொண்டும் கச்சேரிகளில் மகுடி வாசிப்பதில்லையென்று சத்தியம் செய்துகொடு!' என்றார். நான் அவ்வாறே சத்தியம் செய்து கொடுத்தேன்.

"பிறகு அவர் என் அம்மாவிடம், 'சரஸ்வதி, நீ என்னோடு வாழ்ந்து எவ்வளவோ கஷ்ட நஷ்டங்கள் பட்டாய்! இப்போது என் சாவிற்காகவும் வருந்தாதே. யாரும் காணமுடியாத ஒரு அமானுஷ்ய சக்தியை நிதர்சனமாகக் கண்டுவிட்டேன் என்ற நிம்மதி எனக்கு இருக்கிறது! பாம்பு என்னைக் கடித்துவிட்டது என்பதற்காக நம் கொல்லையில் உள்ள புற்றைக் கலைத்து விடாதே. மகுடி வாசிப்பதில் பூர்ணமோ வித்தையில் சுத்தமோ இல்லாதபோதுதான் பாம்பு நம்மைக் கடிக்கும்!' என்றார். அதோடு அவர் உயிர் நின்றுவிட்டது. பாடையில் ஏற்றி மயானக்கரைக்குக் கொண்டு செல்லும்போதும் அவருடைய முகத்தில் ஏதோ ஒரு அமானுஷ்யமான சக்தி இருப்பது போல் எனக்குத் தென்பட்டது!

"இதுதான் மகுடி மருதக்கண்ணு பிள்ளையின் துர் மரணத்தின் மர்மம். ஆனால் ஊர் உலகத்திலே என்ன சொல்லு கிறார்கள்? என் அம்மா அவருக்குப் பாலில் விஷங்கலந்து கொடுத்துக் கொன்றுவிட்டாள் என்று சொல்லுகிறார்கள். இந்தக் கதையெல்லாம் சொன்னால் சாதாரண ஜனம் நம்புமா?" என்று சௌந்தரம் பல்லைக் கடித்துக் கொண்டாள்.

பொன்னையனுக்கு இந்தக்கதை உண்மையானதா அல்லது வெறுங் கட்டுக்கதையா என்று விளங்காமல் தடுமாறினான். அந்தச் சூழ் நிலையில் அவனால் அந்தக் கதையை நம்பாம லிருக்கவும் முடியவில்லை. பூரணமாகவும் நம்ப முடியவில்லை. சௌந்தரம் மகுடி ஊதினால் புற்றிலிருந்து பாம்பு வந்து பட மெடுத்து ஆடுமா என்ற விபரீத சந்தேகம் எழுந்துகொண்டே யிருந்தது.

இறுதியில் ஒரு தீர்மானத்திற்கு வந்தவனாய், "சௌந்தர வடிவு! நீ சொல்லுகிற கட்டுக்கதையை என்னால் நம்பமுடிய வில்லை. அதை என் கண் முன்னால் நிரூபித்துக் காட்ட வேண்டும்! இப்போதே இந்த இடததிலே நீ நாதஸ்வரத்தை எடுத்துவந்து மகுடி ஊதணும்! பாம்பு ஆடுகிறதா பார்ப் போம்!" என்றான்.

அதைக்கேட்டதும் சௌந்தரவடிவிற்குத் தூக்கி வாரிப் போட்டது. பிரேதம்போல் நின்றாள்.

அத்தியாயம்: 14

## அரவம் ஆட்டேல்!

பரியாசம் போலவே கடித்த பாம்பு
பலபேரறியவே மெத்த வீங்கிப்
பரியாரம் ஒருமாது பார்த்தபோது
பைமேயாடே கழன்றது என்று ஆடாய் பாம்பே!
—பாம்பாட்டி சித்தர் பாடல்.

மனிதன் அமானுஷ்யமான செயல்களில் ஈடுபடவே விரும்புகிறான். சௌந்தரவடிவு மகுடி வாசித்தால் புற்றி லிருந்து பாம்பு வந்து படமெடுத்து ஆடுமா என்று பொன்னையன்

விஷப் பரீட்சை செய்ய விரும்பியதில் ஆச்சரியமில்லை. ஆனால் சௌந்தரவடிவோ அந்த விஷப் பரீட்சையில் ஈடுபட மிகவும் பயந்தாள். அவள் பெண்! பயங்கரமான எந்தக் காட்சியையும் தன்னுடைய மிருதுவான உள்ளத்தில் ஏற்கச் சக்தியற்றவள். பாம்பு என்ற பெயரைக் கேட்டாலே நடு நடுங்கக் கூடியவள்.

மேலும், அப்போதிருந்த கொல்லைப்புற சூழ்நிலை ஒருவிதப் பயப்பிராந்தியை எழுப்பக் கூடியதாயிருந்தது. கரும் கும்மென்ற அமாவாசை இருட்டு. நடுச் சாமத்தின் பேய்க் காட்டு அமைதி. சூன்ய உணர்ச்சி. தண்ணீர் தேக்கங்களில் தாவிவிழும் தவளைகளின் சலசலப்பு. சுவர்க் கோழிகளின் கிரீச் கிரீச் என்ற ஒலி. கட்டுத்துறையில் பசுமாடுகள் அசை போடும் அரவம், சாக்குருவிகளின் ஓலம். சுழன்றடிக்கும் பேய்க்காற்று. ஈர மணலிலிருந்துவரும் பிணவாடை. நனைந்த வைக்கோல் போரில் பிரேத வாசனை......

இந்தச் சூழ்நிலையில் ஒரு பெண் இருப்பதே கடினம். மகுடி ஊதி புற்றுப் பாம்பைப் படமெடுத்து ஆட வைக்க வேண்டுமென்றால் சாமானியமான காரியமா? சௌந்தரவடிவு மிகவும் பயந்தாள்.

“என்ன சொல்கிறீர்கள்? இந்த வேளையில் இதே கொல்லையில் நான் மகுடி ஊதணுமா? அது என்னால் முடியாத காரியம்!” என்றாள் சௌந்தரம் பீதி நிறைந்த குரலில்.

“மகுடி மருதக்கண்ணு பிள்ளையை உன் அம்மா விஷம் கொடுத்துக் கொல்லவில்லை, அரவம் தீண்டிதான் இந்தக் கொல்லையில் இறந்தார் என்ற உன் கட்டுக் கதையை நான் நம்பவேண்டுமென்றால், இந்த க்ஷணம் நீ மகுடி வாசிக்கத்தான் வேண்டும்! நீ மகுடி வாசித்தால் புற்றிலிருந்து பாம்பு வந்து படமெடுத்து ஆடும் என்பது உண்மையா, பொய்யா?” என்று கேட்டான் பொன்னையன்.

“உண்மைதான்!” என்றாள் முகத்தைச் சுளித்தவாறு சௌந்தரம்.

“அப்படியானால் இந்தச் சமயத்தில் நீ மகுடி ஊதத் தயங்குவதேன்?”

“என் வாழ்நாளில் இதற்குமுன் ஏற்பட்ட இரண்டு அனுபவங்கள் என்னைத் தயங்க வைக்கிறது! ஒரு தடவை இதே கொல்லையில் நான் மகுடி வாசித்தபோது பாம்பு தீண்டி கன்றுக்குட்டி இறந்தது, மறுதடவை என் உயிருக்குயிரான

அப்பாவின் உயிரையும் குடித்துவிட்டது! என் அப்பாவின் ரத்தத்தை உறிஞ்சிய அந்த மகுடியை நான் மறுபடி வாசிக்கவே மாட்டேன்!"

"சுத்தப் பொய். நீ சொல்வதை நான் நம்பவில்லை!"

"அது பொய்யா? அதோ தெரிகிறதே பாம்புப் புற்று, அது பொய்யா? நாங்கள் மாதத்துக்கொருமுறை அந்தப் பாம்புப் புற்றுக்கு நாகபூஜை செய்து வருகிறோமே, அது பொய்யா? வேண்டுமானால் என் அம்மாவை அழைத்துக் காண்பிக்கிறேன், அவள் முகத்தைப் பாருங்கள், எப்படி பேயறைந்தவள் போல் பிரேதக் களை வீசுகின்றதென்று! அப்பா மகுடி வாசிப்பதைக் கேட்டுக் கேட்டு அவள் காது செவிடாகிவிட்டது! பாம்பு தீண்டி அவர் மாண்டதிலிருந்து அவள் பைத்தியம் பிடித்தவள் போல் பூஜை அறைக்குள்ளே படுத்துக் கிடக்கிறாள். இதெல்லாம் பொய்யா? என் வார்த்தையில் உங்களுக்கு நம்பிக்கையில்லையா?" என்று கண்கலங்கினாள் செளந்தரவடிவு.

"முடியாது! நீ இந்த க்ஷணமே மகுடியை வாசித்து பாம்பு படமெடுத்து ஆடுவதை நிதர்சனமாகக் காட்டினால்தான் நான் நம்புவேன்! இல்லையானால், பகுத்தறிவுள்ளவனையும் கதை சொல்லி ஏமாற்றும் புரட்டுக்காரி என்றுதான் உன்னை மதிப்பேன்!"

"ஐயோ, என்னை ஏன் இப்படி உயிரோடு சித்திரவதை செய்கிறீர்கள்? என் வாழ்வில் இரண்டு பயங்கரங்களைக் கண்டுவிட்டேன். நான் பெண்! இனி என்னால் எந்தப் பயங்கரக் காட்சியையும் காணமுடியாது!"

"செளந்தரம், வீணாகப் பேசி என் மனதைச் சமாதானப் படுத்திவிடலாம் என்று எண்ணாதே!"

"என்னையேன் இப்படிக் கட்டாயப்படுத்துகிறீர்கள்? நான் மகுடி வாசித்து வருஷம் மூன்றாகிறது. என்னுடைய அப்பாவின் பயங்கரமான சாவுக்குப் பிறகு மகுடி என்ற பெயரைக் கேட்டாலே மனம் அரள்கிறேன்! மறுபடி இன்று மகுடி வாசித்து பாம்பை வரவழை என்று சொல்வது நியாயமா? உண்மையில் பாம்புத் தீண்டித்தான் இரண்டு ஜீவன்களும் மாய்ந்தது என்றாலும், நான்தான் அவர்களைக் கொலை செய்தேனோ என்று மனதுக்குள் நரக வேதனைப் பட்டுக்கொண்டிருக்கிறேன். நான் அபூர்வமாக மகுடி வாசித்ததுக்கு இந்தத் தண்டனை போதாதா? இன்னுமா என்னை விஷப் பரீட்சையில் ஈடுபடச் சொல்லுகிறீர்கள்? நான் மகுடி வாசிக்க ஆரம்பித்

தால் அன்று ஏதாவது ஒரு ஜீவன் பலியாகுமோ என்று என் குலை நடுங்குகிறது !''

"அதனால் பரவாயில்லை ! இங்கே நாம் இரண்டு ஜீவன்கள் தான் இருக்கிறோம். மனைவியாகப் போகும் பெண்ணை ஓயாமல் சந்தேகப்பட்டுக்கொண்டு நான் வாழ்வதையும், மணம் செய்துகொள்ளப் போகிறவனின் இருதயம் கிடைக்காமல் நீ வாழ்வதையும் விட, இந்த க்ஷணமே நம இரண்டு ஜீவன்களில் ஒன்று பாம்பு தீண்டி மரிப்பது மேல் !'' என்றான பொன்னையன் பிடிவாதமாக.

"ஐயோ, நான் பெண் என்பதை யோசித்துப் பாருங்கள். ஆண்களைப்போல் கல் மனமோ திடச்சித்தமோ சிறிதும் இல்லாதவளல்லவா ? பயங்கரமான காட்சிகளை என் மனம் எவ்வாறு தாங்கும் ? பக்கத்தில் பாம்பு படமெடுத்து ஆடுவதைப் பார்த்துக் கொண்டே விடாமல் என்னால் மகுடி வாசிக்க முடியுமா ? பாம்பைக் கண்டு அரண்டுபோய் மகுடியை நான் அரைகுறையாக நிறுத்திவிட்டால், நம் இருவர்களில் யாரை யாவது தீண்டி விட்டால் நம் கதியென்ன ?''

"சௌந்தரம், நீதான் அமானுஷ்ய சக்திகளை நம்புகிறவளாயிற்றே ? மீறமுடியுமா ? மகுடி வாசித்து நீசொல்வதை நிதர்சனமாகக் காட்டிவிட்டால் பிறகு உன்னை நான் பரிபூர்ணமாக நம்பிவிடுவேன். இந்தச் சந்தர்ப்பத்தை விட்டுவிட்டால் பிறகு நீ எந்தக் காலத்திலும் என் இருதயத்தை அடைய முடியாது ! போய் நாயனத்தை எடுத்துவந்து வாசி !'' என்று முடித்தான் பொன்னையன்.

சௌந்தரவடிவு அவன் வார்த்தையை மீற முடியாமல் உள்ளே போய் நாயனத்தை எடுத்து வந்து பொன்னையனருகில் கொல்லைத் திண்ணையில் அமர்ந்தாள்.

தயங்கியவாறு நாதஸ்வரத்தை பட்டு உறையினின்று மெல்ல உருவி, தன்னுடைய பவள உதட்டில் வைத்து ஊத ஆரம்பித்தாள். அவளுடைய பவள உதடு உணர்ச்சி மழுங்கி ரத்தம் செத்து இருந்தது. கைகள் நடுங்கின. கன்னப் பொட்டுத் துடித்தது.

நாதஸ்வரத்திலிருந்து 'பீ பீ பீ பீ !' என்ற இசைத் துளிகள் உதிர்ந்தன. சுவர்க் கோழிகளின் கிரீச் கிரீச் என்ற சப்தமும் கட்டுத்துறையில் மாடு அசைபோடும் அரவமும் அடங்கவில்லை. பேய்க் காற்றில் பயங்கரமாய் எதிரொலித்தது.

எங்கோ ஒரு வீட்டில் கடிகாரம் மணி ஒன்று அடிக்கும் சப்தம் கேட்டது.

சௌந்தரவடிவு மகுடி வாசித்தாள். அவளுடைய நாத ஸ்வரத்திலிருந்து இசை வண்டுகள் கிளம்பிப் பேய்க்காற்றில் சுருண்டு சுருண்டு சென்றன.

மகுடியின் இசை ரீங்காரங்கள் பிணஒலிகள் போல் பாழ் வெளியெங்கும் படர்ந்து சென்றன. அந்தக் கொல்லைப்புறமே ஒரு மயானப் பிராந்தியம்போல் தென்பட்டது.

சௌந்தரவடிவு தன்னை மறந்த மோனநிலையில் அபூர்வ மாக மகுடி வாசித்துக்கொண்டிருந்தாள். பொன்னையனின் இருதயம் ஊற்றுக் கிணறாய் உணர்ச்சியலைகளை வாரியிறைத்துக் கொண்டிருந்தது.

சௌந்தரவடிவின் மகுடி வாசிப்பு உச்சஸ்தாயியை எட்டிப் பிடிக்கும் கட்டத்தை அடைந்து கொண்டிருந்தது. அவளுடைய கடைக்கண், மலைபோன்ற பாம்புப் புற்று இருந்த திசையை நோக்கித் திரும்பியது. பொன்னையனின் கண்ணும் பாம்புப் புற்றை நோக்கியே இருந்தது.

இருவரும் ஒருவரையொருவர் ஒருகணம் உற்றுப் பார்த் தார்கள். இருவரது விழிக்கோணங்களின் விளிம்புகளிலும் பயங்கரமான பாம்புப் புற்று பிரதிபலித்தது. இருவர் மனமும் நடுங்கியது !

மகுடி உச்சஸ்தாயி அடைந்து பேய்க்காற்றில் இசை ரீங்காரங்களை வாரியிறைத்துக் கொண்டிருந்தது. மங்கலான லாந்தர் வெளிச்சத்தில் தெரியும் பாம்புப் புற்றில் புஷ் புஷ் என்று சப்தம் கிளம்புவது போல் பிரமை தட்டியது.

பொன்னையன் கண்களைப் பிசைந்துகொண்டு பார்த்தான்.

பாம்புப் புற்றிலிருந்து ஒரு கிழ நாகஸர்ப்பம் புறப்பட்டு, சௌந்தரவடிவின் நாதஸ்வரத்தை நோக்கி இசை ரீங்காரத்துக் கேற்றவாறு நெளிந்து நெளிந்து வந்து கொண்டிருந்தது.

பொன்னையனின் குலை நடுங்கியது. சௌந்தரவடிவின் உயிரோ ஊசலாடிக் கொண்டிருந்தது. ஆனால் அவள் மகுடி ஊதுவதை நிறுத்தவில்லை. இன்னும் உச்ச நிலையில் வாசித்தாள்.

நாகப்பாம்பு சற்று தொலைவில் நின்று மகுடி இசையின் சுழற்சிகளுக்கு ஏற்றவாறு படமெடுத்து ஆடியது.

பொன்னையனின் முகத்தில் பிரேதக் களை சொட்டியது. சௌந்தரவடிவு பேய் பிடித்தவள் போல் மகுடி ஊதிக் கொண்டிருந்தாள்.

இருவர் உடல்களும் நடு நடுங்கின.

மங்கலான லாந்தர் வெளிச்சத்தில், இருவரது நிழல்களும் வெட வெடவென்று நடுங்குவதும், பாம்பின் நிழல் படமெடுத்து ஆடுவதும் தெரிந்தது.

நனைந்த வைக்கோல் போரிலிருந்து பிணவாடை வந்து கொண்டிருந்தது.

தவளைகள் தண்ணீர் தேக்கங்களில் தாவும் சலசலப்பு நின்றுவிட்டது.

எங்கோ ஒரு நரகம் குடைசரிந்து விழுவது போன்ற தோற்றம் பொன்னையனுக்கு உண்டாயிற்று.

இவ்வாறு சில கணங்கள் கழிந்தன. கொல்லையின் திருப் பத்தில், சுவரையொட்டிய ஒரு தண்ணீர்த் தேக்கத்தில் ஏதோ ஒரு சலசலப்பு கேட்டது. அது தவளைகளின் சல சலப்பல்ல. ஏதோ ஒரு காலடியின் அரவம்......

படமெடுத்து ஆடும் நாக ஸர்ப்பம் அந்தத் திசை நோக்கித் தன் கண்களைத் திருப்பியது.

அப்போது, கட்டுத்துறையில் பசுமாடு ‘அம்மா’ என்று அலறும் சப்தம் கேட்டது.

செளந்தரம் குலை நடுங்கி நாதஸ்வரத்தைக் கீழே போட்டு விட்டாள். மகுடி அபஸ்வரமாய் அரைகுறையாக அறுந்து விட்டது......

பாம்பு பயங்கரமாய்ச் சீறியது.

“ஐயோ, அத்தான்! பாம்பு தீண்டப்போகிறது!” என்று அலறியவாறு செளந்தரவடிவு பொன்னையனை இழுத்து அணைத்துக்கொண்டாள்.

நாகப்பாம்பு, முன்பு தண்ணீர்த் தேக்கத்தில் கொல்லையின் திருப்பத்தில் கேட்ட சலசலப்பின் திசையை நோக்கிச் சீறிப் பாய்ந்து சென்றது.

அடுத்தகணம், “ஐயோ அப்பா! கடித்துவிட்டதே! பாம்பு... பாம்பு!” என்று கூவி விழும் தோடி சிவக்கண்ணு பிள்ளையின் குரல் கேட்டது.

அதைத் தொடர்ந்து “ஐயோ, மாமா!”, “ஐயையோ பாம்பு! பாம்பு!” என்ற கூக்குரல்கள் செளந்தரவடிவின் வீட்டிலிருந்து பிரும்மாண்டமாகக் கிளம்பின.

எதிர் வீடு, பக்கத்து வீடுகளிலிருந்து கம்பும் கழியுமாக ஜனங்கள் அலறிப் புடைத்துக்கொண்டு ஓடிவந்தார்கள்.

அரவம் தீண்டி சிவக்கண்ணு பிள்ளை முணுமுணுத்துக் கொண்டு கிடக்கும் இடத்தை நோக்கிச் செல்ல அந்த ஜனங்களில் யாருக்கும் துணிவு ஏற்படவில்லை. ரஸிகர்கள் மயமான குளத்துமலையில் பாம்பைக் கண்டு பயப்படாதவர் ஒரே ஒருவர்தான் இருந்தார். அந்த ஜீவன் சிவக்கண்ணு பிள்ளையின் தர்ம பத்தினி சிவகாமி அம்மாளதான்.

அந்த அம்மாள் கதறியழுதவாறு லாந்தர் வெளிச்சத்தை எடுத்துககொண்டு சிவக்கண்ணு பிள்ளை கிடந்த இடத்தை நோக்கி ஓடினாள். செளந்தரவடிவும் பொன்னையனும் அந்த அம்மாளைப் பின்பற்றிச் சென்றார்கள். பிறகு ஒவ்வொருவராக அத்தனை ஜனமும், கம்பும் கழியுமாக அவர்களைப் பின்பற்றிச் சென்று சிவக்கண்ணு பிள்ளையைச் சுற்றி காற்றுப் புகாதவாறு சூழ்ந்துகொண்டார்கள்.

சிவக்கண்ணு பிள்ளை கொல்லைப்புறச் சுவரின் சரிவில், தண்ணீர் தேககத்தில் சாய்ந்து கிடந்தார். அவர் உடலெங்கும் நீலம் பாய்ந்து கிடந்தது. அவரது அருகில் ஒரு நல்ல பாம்பு ஒரு சிறு செம்பூருங்கல்லின் அடியில் தலை நசுக்குண்டு இறந்து கிடந்தது பாம்பு தீண்டி சிவக்கண்ணு பிள்ளை சாயும்பொழுது அவர் கைபட்டு சுவரிலிருந்து செம்பூருங்கல் பெயர்ந்து அந்தப் பாம்பின் தலையில் விழுந்திருக்கவேண்டும்!

சிவகாமி அம்மாள் பிள்ளைவாளின் தலையை தன் மடியில் தூக்கி வைத்துக்கொண்டு கண்ணீர் சிந்தினாள். மடியிலிருந்த வ்பூதிச் சம்படத்திலிருந்து திருநீறு எடுதது நாகஸாமியைத் துதித்துக் கொண்டே சிவக்கண்ணு பிள்ளையின் நெற்றியில் பூடவினாள்.

"ஐயோ, மாமா!" என்று கதறி பொன்னையன் தன் வேஷ்டியிலிருந்து துணியைக் கிழித்து சிவக்கண்ணு பிள்ளையின் காலில் பாம்பு தீண்டிய இடத்தைச் சுற்றிக் கட்டினான். "ஐயோ, பெரியப்பா!" என்று அழுதுகொண்டே செளந்தர வடிவு அவரது காலில் விஷம் தீண்டிய இடத்தில் பச்சைக் கற்பூரத்தை வைத்தாள். பிள்ளைவாளின் உயிர் போகாமல் துடித்துககொண்டிருப்பதைப் பார்த்துவிட்டு ஒரு பேர்வழி வைத்தியரை அழைத்துவர ஓடினான். அவற்றையெல்லாம் பாாத்து சிவக்கண்ணு பிள்ளை அந்த வேதனையிலும் சிரித்துக் கொண்டார். பொன்னையனையும் செளந்தரவடிவையும்

தம்மைப் பார்க்குமாறு சைகை காட்டி மெல்லப் பேச முயன்றார். அவர் நெஞ்சு அடைத்துக்கொண்டது.

"பொன்னையா, இந்த உலகத்தில் அநியாயம் என்றாவது ஒருநாள் மனிதனை பழிவாங்கிவிடுகிறது. அதை இன்று நான் நிதர்சனமாய் பார்த்துவிட்டேன்!......

"பொன்னையா! குளத்துமலை சகோதரர்கள் என்று பெயர் பெற்ற நானும், மருதக்கண்ணுவும் ஒன்றாகவே பிறந்தோம், ஒன்றாகவே வளர்ந்தோம், ஒன்றாகவே நாயனம் வாசித்தோம். மனசில் வித்தியாசமில்லாமலிருந்தோம். மருதக்கண்ணுவுக்கு திருகோகர்ணத்திலே பரதநாட்டியம் சரஸ்வதியின் தொடர்பும் அவள் மூலமாக சோளபுரம் ஜமீனின் பரிச்சியமும் ஏற்பட்ட பிறகு, என் மனசு மாறிவிட்டது. மருதக்கண்ணுவுக்கு அதிகச் செல்வாக்கு உண்டாகிவிட்டதென்று என் மனசு புழுங்கி வந்தது. தம்பியை அவமானப் படுத்தவேண்டும் என்பதற்காக, அவனுடைய சரஸ்வதியைப் பற்றியும் அவன் மகளான இந்தச் சௌந்தரவடிவைப் பற்றியும் நாலுபேர் முன்னிலையில் பேச்சிழுப்பேன். இதனால் எனக்கும் மருதக்கண்ணுவுக்கும் அடிக்கடி மனக் கசப்புகள் உண்டாகும். ஒரு சமயம அவன் மனசு அடியோடு முறிந்து போகும்படி செய்துவிட்டேன். அந்தப் பாவந்தான் இப்படி என்னைப் பழிவாங்கி விட்டது! எந்தப் பாம்பால் அவன் துர்மரணமடைந்தானோ அதே பாம்பால் இன்று நான் துர்மரணமடைகிறேன், அதுவரை எனக்குத் திருப்தி! நான் மரித்த பிறகு மயானக்கரையில் மருதக்கண்ணுவை எரித்த இடத்திலே என்னையும் எரியுங்கள். இடையில் பிரிந்திருந்தாலும் கடைசியில் குளத்துமலை சகோதரர்கள் ஒரேயிடத்தில் தீயில் எரிந்தார்கள் என்ற பெயர் நிலைக்கட்டும்!" என்ற சிவக்கண்ணு பிள்ளையின் நாடி தளர்ந்து கொண்டு வந்தது.

சிவக்கண்ணு பிள்ளை, உயிரின் கடைசிச் போராட்டத்தில், சௌந்தரவடிவு, பொன்னையன், மனைவி சிவகாமி அம்மாள், மூவரையும் நோக்கி என்னவோ பேசமுயன்றார். ஆனால் அவரால் பேசமுடியவில்லை. கடைசித் துடிப்பில் 'மோகனம்' என்ற வார்த்தைதான் அவர் வாயிலிருந்து வெளிவந்தது. அதற்குப் பிறகு தோடி சிவக்கண்ணு பிள்ளையின் ஜீவன் ஒடுங்கிவிட்டது!

அன்றிரவே, உற்றார் உறவினர்க்கெல்லாம் சாவோலை அனுப்பி, ஊர் ஜனங்களைக்கூட்டி, பாடைகட்டி, பட்டு விரித்து, பறையடித்து, பூம் பூம் என்று பிணக்கொம்புகள் ஊத, விடிய

சாமத்துக்குள் தோடி சிவக்கண்ணு பிள்ளையின் பிரேதத்தை ஊர் மயானக்கரையில் எரித்துவிட்டார்கள்.

குளத்துமலை சகோதரர்களில் மகுடி மருதக்கண்ணு பிள்ளை மரித்தபிறகு, அவரோடு அவருடைய அபூர்வமான மகுடி வாசிப்பும் அழிந்ததுபோல், அன்றோடு தோடி சிவக்கண்ணுபிள்ளையின் அபூர்வமான தோடி வாசிப்பும் எரிந்து விட்டது.

அத்தியாயம் : 15

## மையல் கொண்ட மங்கை

"பேயாண்டி தனைக் கண்டு நீயேண்டி மையல் கொண்டாய்?
பெண்களுக்கு அழகாமோ?"

---

தோடி சிவக்கண்ணு பிள்ளை காலமான பத்தாவது நாள், பிள்ளையின் வீட்டுத் திண்ணைமீது பொன்னையன் உட்கார்ந்திருந்தான். கடந்த பத்து நாளாகவே அவன் மனசு சரியாக இல்லை. அதில் அளவிறந்த துக்கமும் ஒரு வித சூன்ய உணர்ச்சியும் படர்ந்திருந்தது.

சிவக்கண்ணு பிள்ளை அரவம் தீண்டி மாண்ட இரவை நினைக்க நினைக்க அவனுக்குப் பெரும் வியப்பாக இருந்தது. அன்றிரவு சௌந்தரவடிவு மகுடி வாசித்தது, பாம்பு படமெடுத்து ஆடியது, சிவக்கண்ணு பிள்ளையை அந்தப் பாம்பு கடித்தது, அவருடைய பிரேதத்தை மயானக் கரைக்குக் கொண்டுபோய் எரித்தது, எல்லாம் கனவுச் சம்பவங்கள்போல் தோன்றின. இவ்வளவும் ஒரே இரவுக்குள் நடந்ததாவென்று வியந்தான். இவ்வளவும் நிஜமாக நடந்ததெனவும் அவனால் நம்ப முடியவில்லை. நரம்புகளை அதிரச் செய்யும் ஒரு பயங்கர மான பேய்க் கதையைப் படித்து முடித்ததும் 'பூ, இவ்வளவும் கதைதானே?' என்ற நினைப்பு ஓடுவதுபோல், இப்போது பொன்னையனுக்கு ஒருவித விடுதலையுணர்வு ஏற்பட்டிருந்தது.

உள்கட்டில் சிவக்கண்ணு பிள்ளையின் மனைவி சிவகாமி அம்மாள், எழவு கேட்க வருபவர்களிடம் ஒப்பாரி வைத்துக் கண்ணீர் வடிக்கவும் சக்தியின்றி, உயிருள்ள பிரேதம்

போயிருந்தாள். அவளுக்குத் துணையாக, மகுடி மருதக்கண்ணு பிள்ளை வீட்டின் பூஜையறையில் புதைந்து கிடந்த பரத நாட்டியம் சரஸ்வதி அம்மாள், இப்போது சிவக்கண்ணு பிள்ளையின் வீட்டில் வந்து யந்திரம் போல் உட்கார்ந்திருந்தாள். சௌந்தரவடிவு அவளோடு கூடமாட சிவக்கண்ணு பிள்ளை வீட்டின் வேலைகளை மேற்பார்த்து வந்தாள்.

இந்தப் பத்து நாளாக சௌந்தரவடிவை அந்த வீட்டில் அடிக்கடி பார்த்தும் பொன்னையன் அவளோடு ஒரு வார்த்தையும் பேசவில்லை. அவள் மகுடி வாசித்துப் பாம்பைப் படமெடுத்து ஆடவைத்த இரவிலிருந்து அவள் மீது பொன்னையனுக்குச் சிறிது நம்பிக்கையும், அவள் வார்த்தையில் ஒரு விதப் பயமும் பிறந்திருந்தது.

தற்காலிகமாகச் சிரிப்புத் தேய்ந்து, வாஞ்சையும் பரிவும் தோய்ந்திருக்கும் அவளுடைய அழகான உருண்டை முகம் பொன்னையன் மனதில் அடிக்கடி வந்து கொண்டிருந்தது. ஆனால், 'சௌந்தரவடிவுக்கும் ஜமீந்தார் மகன் சின்னத்தம்பிக்குமுள்ள தொடர்பின் மர்மம் இன்னும் தெரியவில்லையே. ஜமீந்தார் மகன் தூக்கிக் கொண்டுபோன மோகனம் என்ன கதியானாள் என்று கண்டு பிடிக்க முடியவில்லையே' என்று கவலைப்பட்டான். கலகாபாத் சமஸ்தானத்தில் ஒருவிதக் கவலையுமில்லாமல் ஆனந்தமாயிருந்த தனக்கு, இந்த ஒரு மாதக் காலத்துக்குள் குளத்துமலையில் பெரும் பொறுப்புகளும் புதியதொரு சூழ்நிலையும் உண்டாகி விட்டதே என்று எண்ணினான்.

இவ்வாறு பொன்னையன் வியாகூலத்தில் மூழ்கிச் சிந்தித்துக் கொண்டிருந்தபோது, சௌந்தரவடிவு ஒரு குவளை நீர்மோர் கலந்து அவனிடம் கொண்டுவந்து கொடுத்தாள். அப்போது 'தபால்' என்று தபால்காரன் கனமான கடிதமொன்றைப் பொன்னையன் கையில் கொடுத்துவிட்டுப் போனான். தபால் கூட்டின் மீது "சௌந்தரவடிவு அம்மாளுக்கு" என்று குறிப்பிட்டிருந்தது.

"சௌந்தரம், இந்தக் கடுதாசி உன் பெயருக்கு வந்திருக்கு!" என்று பொன்னையன் சந்தேகக் கண்களோடு கடிதத்தை அவளிடம் நீட்டினான்.

"பரவாயில்லை. நீங்கள் பிரித்துப் படியுங்கள்! மோகனந்தான் எழுதியிருப்பாள்!" என்றாள் சௌந்தரவடிவு.

அவளை வியப்போடு ஒருமுறை பார்த்துவிட்டுப் பொன்னையன் கடிதத்தைப் பிரித்துப் பார்த்தான். மோகனந்தான் பம்பாயிலிருந்து எழுதியிருந்தாள்.

பொன்னையன் கடிதத்தைப் பரபரப்போடு படித்தான். சௌந்தரவடிவு அவன் பின்னால் வந்து குனிந்து நின்று கடிதத்தின் வாசகங்களைப் பார்த்தாள்.

அந்தக் கடிதத்தில் பின்வரும் வாசகங்கள் காணப்பட்டன :

"அன்புள்ள அக்கா சௌந்தரவடிவுக்கு,
மோகனம் அனேக நமஸ்காரம்.

இந்தக் கடிதத்தை நீ நான்கு நாட்களுக்கு முன்னதாகவே எதிர்பார்த்திருப்பாய். ஆனால் இரண்டு தினங்களுக்கு முன் தான் நாங்கள் இங்கே பம்பாய்க்கு வந்து சேர்ந்தோம். வந்து சேர்ந்த அன்றைக்கே கடிதம் எழுதியிருக்கலாமே என்று கேட்பாய். ஆனால் ஜமீந்தார் என்னை விட்டுப் பிரிந்திருந்தால்தானே? 'ராத்திரி பூராவுமா?' என்று கேட்பாய்!— ஆமாம்!

"இன்று ஜமீந்தார் மகன் விக்டோரியா ஹோட்டலில் யாரையோ ஒரு சேட்டைப் பார்க்கப் போயிருக்கிறார். அதுதான் இவ்வளவு நீளமான கடிதத்தை உனக்கு எழுத முடிந்தது.

"அக்கா, உன்னை என் வாழ்வில் என்றுமே மறக்க மாட்டேன்! நீ எனக்காக எவ்வளவு கஷ்டப்பட்டாய்? எவ்வளவு அவமானங்களையெல்லாம் சுமந்தாய்? இன்று நான் ஜமீந்தார் குமாரர் சின்னத்தம்பியாரோடு குதூகலமாய் இருக்கிறேன் என்றால். அது யாரால்? எதிர்காலத்தில் சோளபுரம் ஜமீந்தாரிணியாகப் போகிறேன் என்றால் அது யாரால்? எல்லாம் உன்னால்தானே! ஒரு வேளை நீ மகா வித்வான் பொன்னையா பிள்ளையை அடையப்போகும் ஆனந்தத்தில் என்னை மறந்து விட்டாலும் நான் உன்னை மறக்கவே மாட்டேன்!

"இந்த நேரம் என் அத்தான் பொன்னையா பிள்ளைக்கு உன் மீதுள்ள சந்தேகங்களெல்லாம் நிவர்த்தியாயிருக்கலாம். இல்லையென்றால் இந்தக் கடிதத்தின் சில பகுதிகளை மட்டும் அவருக்கு வாசித்துக் காண்பி. ஏன், சில பகுதிகளை மட்டும் என்று சொல்லுகிறேன் என்றால், பெண்களுக்குள் பேசிக் கொள்ளுகிற அந்தரங்கமான விஷயங்களையெல்லாம் இந்த ஆண் பிள்ளைகள் காதில் போடக்கூடாது பாரு, அதனால்!

" அக்கா, சோளபுரம் ஜமீந்தாருக்கும் எனக்கும் தொடர்பு ஏற்பட்ட பின்னால் நடந்த விஷயங்கள் உனக்குத் தெரியுமே தவிர, அதற்கு முன்னால் அவரோடு எனக்கு எப்படித் தொடர்பு ஏற்பட்டது என்ற விஷயங்களெல்லாம் உனக்குத் தெரியாது. நீயும் அதிகமாக என்னைக் கிண்டிக் கேட்கவில்லை. எனக்குச் சொல்லக் கூச்சமாயிருந்தது. இப்போது அந்தக் கதையையெல்லாம் எழுதுகிறேன். வாயால் சொல்வதைவிட எழுத்து மூலம் சொல்வது எவ்வளவு சுலபமான காரியம்!

"சென்ற ஒரு வருஷமாகவே, ஜமீந்தார் நாம் கச்சேரி செய்யப் போகும் ஊர்களுக்கு அடிக்கடி வருவதும், என்னோடு சகஜமாகச் சிரித்துப் பேசுவதும் உனக்குத் தெரியும்! ஆனால் அது எங்களிருவருக்கிடையிலும் வளர்ந்து வந்த உள்ளம் உறவாடும் காதல் என்று உனக்குத் தெரியாது!

"அக்கா, மூனு மாசத்துக்கு முன்னாடி நீயும் நானும் சோளபுரம ஜமீன் கோயில் கும்பாபிஷேகத்துக்கு நாதஸ்வரக் கச்சேரி செய்யப் போயிருந்தோமே, உனக்கு ஞாபகமிருக்கா? அன்றிரவு கச்சேரி செய்தபோது இந்த சோளபுரம் ஜமீந்தார் குமாரர் சின்னத்தம்பி, நம் கச்சேரியில் நான் தவுல் வாசிப்பதையே ஆவலோடு பார்த்துக் கொண்டிருந்தார். என்னையும் விழுங்கி விடுவதுபோல் அடிக்கடி பார்த்தார், அவருக்குத்தான் ஆளை விழுங்கும் எவ்வளவு பெரிய கண்கள்! நானும் அவருடைய கம்பீரமான முகத்தின் அழகில் மயங்கி, கவர்ச்சிகரமான அவருடைய கண்களில என் மனசைப் பறிகொடுத்து, ஓயாமல் அவரை என் ஓரக்கண்ணால் பார்த்துக் கொண்டிருந்தேன். அன்று என் தவுல் வாசிப்பில் அடிக்கடி தாளம் தவறியது என்று நீ கோபித்துக் கொண்டாயே, அதற்குக் காரணம் இப்போது உனக்குப் புரிந்திருக்கும்!

" கச்சேரி முடிந்ததும், அகாலமாகி விட்டபடியால் ஜமீன் அரண்மனையில் படுத்துத் தூங்கிப் போகலாம் என்று ஜமீந்தாரின் செவர்லெட் காரில் நாம் ஏறினோமல்லவா, அப்போது அவர் என் கையில் ரகசியமாக ஒரு காகிதத் துண்டைத் திணித்தார். அப்போது

நல்ல இருட்டானபடியால் அதை யாரும் பார்த்திருக்க முடியாது.

"ஜமீன் அரண்மனைக்கு வந்ததும், பாத்ரூமுக்குப் போய், அந்தக் காகிதத் துண்டை வாசித்துப் பார்த்தேன். அவர் அதில், 'மோகனம், உன் ஒரு பார்வையிலே உன் மனசு எனக்குத் தெரிந்துவிட்டது. நீ எதிர் காலத்தில் ஜமீந்தாரிணியாக வேண்டுமென்றால் இன்றிரவு படுக்கையில் தூங்கிக் கொண்டிராதே. விழித்திரு!' என்று கிறுக்கியிருந்தார். அப்போது என் மனசு அடித்துக் கொண்ட படபடப்பு?

"ராத்திரி பத்து மணி இருக்கும். கச்சேரியில் வாசித்த களைப்பால் நீ அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தாய். அம்மாவும் நன்றாகக் குறட்டை விட்டுக் கொண்டிருந்தாள். உன் அருகில் படுத்திருந்த எனக்கோ தூக்கம் வரவில்லை. மெத்தையில் இருப்புக் கொள்ளவில்லை. அப்போது மெள்ள என் அருகில் இருந்த என் வாசல் கதவைத்தள்ளும் கிரீச்சென்ற சப்தமும், சின்ன ஜமீந்தாரின் உணர்ச்சி தெறிக்கும் முகமும் தெரிந்தது. என் மனசு திக் திக்கென்றது. அவர் தன் கண்களால் என்னை எழுந்து வரும்படி எனக்கு ஜாடை காட்டினார். நான் பேசாமல் படுக்கையில் புரண்டு படுத்தேன். அவர் சுமார் ஒருமணி நேரமாவது கதவடியில் தவம் கிடந்திருப்பார். படுக்கையிலிருந்து புரண்டவாறு நான் மையத் திரும்பிப் பார்த்தேன். அவர் முகம் பரிதாபகரமாகவும் கவர்ச்சிகரமாகவும் இருந்தது. அந்த முகத்திலும் கண்களின் அழைப்பிலும் என்ன காந்தசக்தி யிருந்ததோ தெரியவில்லை. நான் படுக்கையைவிட்டுப் பூனைபோல் எழுந்து அவரிடம் சென்றேன்!

"அவர் என்னைப் பரிவோடு கரம்பற்றி இழுத்தவாறு அவருடைய உல்லாச அறைக்கு அழைத்துச் சென்றார். நானும் பயம் ஒருபுறம், வெட்கம் ஒருபுறம், ஆவல் ஒருபுறமும் துடிக்க, பேதைபோல் அவர் பின்னால் சென்றேன்.........

"அந்த உல்லாச அறை எவ்வளவு அலங்காரமானது! எத்தனை ரத்னக் கம்பளங்கள்! எத்தனை சோபா, நாற்காலிகள்! அவர் கைகளில்தான் கண்ணைப் பறிக்கும் எவ்வளவு வைர மோதிரங்கள்!...

''அவர் என்னை நோக்கி, 'மோகனம், இவ்வளவு மாட மாளிகைக்கும் நீ அதிதவதையாகப் போகிருய்!' என்ருர். நான் பேதைபோல் நின்றேன்...

''அவரோ'': மோகனம், இவ்வளவு காலம் அநியாயம் அட்டூழியமாக வாழ்ந்து கெட்டழிந்த நாட்களை மறந்துவிட்டு, இனி ஒரு பெண்ணோடு வாழ்நாள் முழுதும் இன்பமாய் வாழத் தீர்மானித்திருக்கிறேன்! புருஷன் மனைவியாக இருப்பதிலுள்ள சுகம் வேறெதிலுமில்லை! நான் இதுவரை எத்தனையோ பெண்களைப் பார்த்திருக்கிறேன். எத்தனையோ பெண்களின் இருதயத்தை நரகமாக்கியிருக்கிறேன். ஆனால் அவர்களில் எவளும் என் இதயத்தில் வாஞ்சை ததும்பும் மனைவியாகத் தோற்றமளித்ததில்லை. நீ ஒருத்திதான் அந்த ஸ்தானத்தை அடைந்திருக்கிருய். உன்னால்தான் இனி என் வாழ்வு புது வழியில் திரும்பவேண்டும்!' என்ருர். நான் அவர் பேச்சில் மயங்கி நின்றேன்.

''இந்தஆண்களுக்குத்தான், பெண்ணிதயத்தைப் பேச்சால் படிப் படியாகக் கவர்ந்து ஆளைமயக்கும் வித்தை தெரிந்திருக்கிறதே! அதுவும் பேச்சுச் சாதுர்யத்தில் கைதேர்ந்தவரும் எவ்வளவோ அனுபவப் பட்டவருமான அவருடைய மயக்க மூட்டும் பேச்சின் முன், நான் எம்மாத்திரம்? என் உள்ளம், உடைமை, யௌவனம் அனைத்தையும் அவரிடம் பறி கொடுக்கத் தயாராகிவிட்டேன். நான் பெண் பேதை. மேலும் வெளுத்ததையெல்லாம் பால் என்று நம்பும் அசடு....

'' அறிவின் திசையிலிருந்து திரும்பிய, அனுபவம் நிறைந்த ஒரு பெரிய இடத்து வாலிபர், என் உள்ளத்தோடு ஒட்டியுறவாட விரும்பினுல் அதை எப்படி என்னுல் மீறமுடியும்?

''அவர் பிரகாசமாய் எரியும் மின்சார விளக்குகளை அணைத்துவிட்டு, மென்மையான ஊதா வெளிச்சத்தைப் போட்டார்.

''என் மனசு பதை பதைத்தது. என் கைகள் வெட வெடவென்று நடுங்கின. என் முகம் வியர்த்துக் கொட்டியது. என் இருதயத்தில் ஆர்வமும்

தயக்கமும் ஒரே சமயத்தில் படர்ந்தது. இனியும் நான் அந்த விபரீத இரவை வர்ணிக்க வேண்டுமா?

"அக்கா! அந்த இரவு பின்னால் எவ்வளவு பெரிய விபரீதத்தில் முடியும் என்று அப்போது நான் சிறிதும் எதிர்பார்க்கவில்லை!

"பிறகு நடந்த விஷயங்கள்தான் உனக்குத் தெரியும். ஒருநாள் உன்னிடம் வந்து நான் மனசு விட்டு அழுதேன். நீ முதலில் கோபித்துக் கொண்டாலும் பிறகு நீ எனக்கு எவ்வளவோ தேறுதல் சொன்னாய். அந்த ஜமீந்தாரோடு வாழ்வு முழுதும் ஆனந்தமாக வாழ வைப்பதாக, உறுதி கூறினாய்! அதை நிறைவேற்ற நீ எவ்வளவு பிரயாசைப்பட்டாய்! எவ்வளவு கெட்ட பெயர்களைச் சுமந்தாய்! ஜமீந்தாருக்கும் எனக்கும் அடிககடி சந்திப்புகள் நிகழ நீ எவ்வளவு அவமானமான காரியங்களுக்கெல்லாம் இணங்கினாய்!......

"ஒவ்வொரு வெள்ளிக்கிழமை இரவும், சுமார் பத்துமணிக்கு ஜமீந்தார் வீட்டு செவர்லட் கார் ஊருக்கு ஒதுப்புறமுள்ள மொளப்பொட்டலில் வந்து நிற்கும். ஊர் அடங்கியதும் ஜமீந்தார் சின்னத்தம்பி மட்டும் காரைவிட்டு இறங்கி தலையில் முக்காடு போட்டுக்கொண்டு உன் வீட்டுக்கு வருவார். நீ தெருவாசல் கதவைத் தாழ்ப்பாள் போடாமல் வெறுமனே சாத்தி வைத்திருந்து, ஜமீந்தார் வந்ததும் ஜாடைகாட்டி உன் வீட்டிற்குள் அழைத்து வருவாய். என் வீட்டில் அத்தான் தெருத் திண்ணையில் தூங்க, அப்பாவும் அம்மாவும் மாடியில் தூங்க, வீட்டுக்குள் நான் மட்டும் தனியாகப் படுத்துத் தூங்குவதாகப் பாசாங்கு செய்து கொண்டிருப்பவள், உடனே என்னுடைய கருநிற காஷ்மீரப் போர்வையை எடுத்து போர்த்திக்கொண்டு மெல்ல எழுந்து என்வீட்டை விட்டு உன் வீட்டுக்கொல்லைப்புற வழியாக வந்து, உன் சமையலறையில் நுழைந்து கொல்லைத் தாழ்ப்பாளைப் போடுவேன். எங்கள் சந்திப்பு உன்னுடைய சமையற் கட்டுக்குள் ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் தவறாமல் நிகழும். உன் அம்மாவோ செவிடு! இருட்டில் கண்ணும் தெரியாது. நாங்கள் எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் மனம் விட்டுப் பேசிக்கொண்

டிருக்கலாம். நீயும் மெள்ள ஒதுங்கிப் போய்விடுவாய். ஆனால் பேச்சைத் தவிர வேறு எதுவும் நடவாதபடி அரண் செய்தும் வந்தாய்! அக்கா, நீ எவ்வளவு பெருமை வாய்ந்தவள்!...

"அக்கா! கடைசிச் சந்திப்பில், அந்தக் கடைசி வெள்ளிக்கிழமையன்றிரவு, நான் கொல்லை வழியாக உன் சமையலறைக்குள் ஓடிவந்து கொல்லைக் கதவைத் தாழ்ப்பாள் போட்டு நின்றதும், நீ அரிக்கேன் லாந்தரை ஏற்றிக்கொண்டு போய் ஜமீந்தார் மகனை அழைத்துவந்து என்னிடம் விட்டாய். என்னைப் பார்த்து லேசாகச் சிரித்தாய். நானோ வயிற்றில் அவமானத்தை விளைவிக்கக்கூடிய சிசு வளர்கிறதே என்று அழுது கொண்டிருந்தேன். இவ்வளவு சங்கடமான கட்டத்திலும் உனக்கு எப்படித்தான் சிரிப்பு வருகிறதோ! ஆனால் நீ மனப்பக்குவமுள்ளவள். நியாயத்திற்காக எதையும் எதிர்த்துப் போராடக் கூடிய சக்தியுள்ளவள். நீ சிரிப்பாய்!

"அன்றிரவு என்னுடைய பரிதாபகரமான நிலையை எடுத்துக்கூறி, என்னைக் கைவிட்டு விடாதீர்கள் என்று ஜமீந்தாரிடம் மன்றாடினேன். அதேசமயம் அவர் என்னை மனைவியாக அங்கீகரிக்க முடியாததற்கு என்னென்னவோ காரணங்களையெல்லாம் கூறி, கடைசியில் பிரியும் போது "மோகனம், அழாதே! மறந்து விடாதே!" என்று கண்ணீர் வடித்து என் கையைத் தூக்கி அவர் விரலிலிருந்து விலையுயர்ந்த பச்சைக்கல் மோதிரத்தைக் கழற்றி என் விரலில் அணிவித்தார். அந்தக் காட்சியை நினைத்துக்கொண்டால் இப்போதும் எனக்கு அழுகை வருகிறது.

"பிறகு அபலை நான் என்ன செய்ய முடியும்? எத்தனை மாதந்தான் திட்டு என்று பொய் நாடகமாட முடியும்? வீட்டைவிட்டு வெளியேறுவது அல்லது தற்கொலை செய்துகொள்வது என்று தீர்மானித்தேன். நீ தக்க சமயத்தில் தற்கொலை என்ற விபரீத எண்ணத்திலிருந்து என்னைக் காப்பாற்றினாய்.

"பிறகு உன் ஏற்பாட்டின்படி, பத்தாம்நாள் திருவிழாவன்று இரவு, காய்ச்சல் என்று பொய்ச் சாக்குச் சொல்லி வீட்டில் தனியாக இருந்து, கருக்கலில் மொளப் பொட்டலுக்குப்போய், அங்கு தயாராய்

இருந்த ஜமீந்தாரின் செவர்லெட் காரில் ஏறி ஜமீந்தா ரோடு ஊரைவிட்டுப் போய்விட்டேன்.

"இப்போது நாங்கள் பம்பாயில் ஆனந்தமாயிருக்கிறோம். இன்னும் நாலைந்து மாதங்களில் அவருடைய மனைவி, சிட்டாபுரம் ஜமீன் வாரிசு, காலமாகி விடுவாளாம். பிறகு நான்தான் ஜமீந்தாரிணி! எங்களுடைய கலியாணத்துக்குப் பொன்னையா பிள்ளை செளந்தரவடிவு நாதஸ்வரக் கச்சேரிதான் வைக்கப் போகிறோம். அதில் மணப் பெண்ணே வந்து தவுல் அடிக்கப் போகிற அதிசயத்தைக் காணப்போகிறாய்!

"அக்கா, அந்த ஆனந்தமான காலம் வரும்வரை, நான் அப்பா அம்மா முகத்தில் விழிக்கவோ, ஊர் பக்கம் தலைகாட்டவோ விரும்பவில்லை.

"அக்கா, எனக்கு இவ்வளவு உன்னதமான வாழ்வும் யாரால் கிடைத்தது? உன்னால் அல்லவா? என்னால் உனக்கேற்பட்ட கெட்ட பெயர்கள் கொஞ்ச நஞ்சமா? வெள்ளிக்கிழமை இரவு நீ தெருவாசற் கதவைத் திறந்து வைத்திருந்து ஜமீந்தார் மகனை உள்ளே அழைத்துக் கொண்டுபோன ஒரு சமயம், என் அப்பா பார்த்துவிட்டார். அப்புறம் உன்னைப் பற்றி ஊரெல்லாம் அவமானமாகப் பேச ஆரம்பித்து விட்டார். உன் உயிருக்குயிரான காதலன் பொன்னையா பிள்ளை உன்னைச் சந்தேகப் பட்டார். இவ்வளவையும் யாருக்காகப் பொறுத்துக் கொண்டாய்? களங்கமுள்ள நான் சுமக்க வேண்டிய அவமானத்தை, களங்கமில்லாத நீயேன் சுமந்தாய்? என்னோடு பழகிய தோஷத்துக்காக அல்லவா? நீ களங்கமில்லாதவளாதலால் ஊர் வதந்திகளை அலட்சியமாகக் கருதினாய்! ஆனால் என்னால் அப்படிக் கருத முடியவில்லையே?

"அக்கா, உன்னை என்றும் மறக்க மாட்டேன். என் வயிற்றில் வளரும் குழந்தைக்கு உலகின் கண்முன், மானமுள்ள ஒரு தந்தையின் பெயரைக் கொடுத்த உன்னை நான் என்றுமே மறக்க முடியாது!' நீ தெய்வம்!

மற்றவை அடுத்த கடிதத்தில்
இப்படிக்கு,
மோகனம்."

கடிதத்தைப் படித்து முடித்ததும் சௌந்தரவடிவின் முகம் பிரகாசமடைந்தது. பொன்னையன் மனதிலிருந்து பல சந்தேகங்கள் அகன்றன. தான் விபரீத சந்தேகங் கொண்டு துப்பறிந்து பார்த்த அந்த வெள்ளிக்கிழமை யன்றிரவு, சௌந்தரம் வீட்டுக் கொல்லைப்புறத்திலும் கருநிற காஷ்மீரப் போர்வை போர்த்திக்கொண்டு ஓடிய கரிய உருவம் மோகனந்தான் என்றும், சாவித் துவாரத்தின் வழியாகத் தான் பார்த்தபோது தெரிந்த ஜமீந்தார் மகன் பிடித்துக்கொண்டிருந்த அழகிய கருநிற வளையல்கள் அணிந்த பெண்ணின் கை, மோகனத்தின் கைதான் என்றும் தோன்றியது. ஒருநாள் மத்தியானம் உள் கூடத்தில் மோகனம் படுத்திருந்தபோது, அந்தக் கரிய உருவம் போர்த்தியிருந்த அதே காஷ்மீரச் சால்வையைத்தான் மோகனம் போர்த்திக்கொண்டிருந்தாள். சம்பவம் நடந்த அன்று காலை மோகனம் வளையல்காரனிடம் நாலு ஜோடி கறுநிற வளையல்கள் வாங்கினதும் பொன்னையனுக்கு ஞாபகம் வந்தது.

"பார்த்தீர்களா, கண்ணால் காண்பதும் பொய், காதால் கேட்பதும் பொய், என்று சொல்லுவார்களே அது எவ்வளவு உண்மையாகப் போய்விட்டது? இப்போது மோகனத்தின் கடிதத்தைப் படித்தீர்களே, என்ன தோன்றுகிறது? என் மீதிருந்த சந்தேகம் தீர்ந்துவிட்டதா?" என்று கேட்டாள் சௌந்தரம்.

"இன்னுமில்லை! இந்தக் கடிதத்தை நான் நம்பவில்லை! இந்தக் கடிதம் சுத்தப் பொய்! உனக்கு நல்ல பேர் உண்டாக வேண்டுமென்பதற்காக ஜமீந்தார் மகன் மோகனத்தைப் பயமுறுத்திக் கட்டாயப்படுத்தி இந்த மாதிரிக் கடிதம் வாங்கியனுப்பியிருக்கிறான்!" என்றான் பொன்னையன்.

"கட்டாயப்படுத்தி எழுதிவாங்குகிற கடிதத்துக்கும், மனசு விட்டு எழுதுகிற கடிதத்தின் வாசகத்துக்கும் உங்களுக்கு வித்தியாசம் தெரியாமலா போய்விட்டது? என்னைப் பெண் என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்களா, பேய் என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்களா?" என்று சௌந்தரவடிவு கோபமாய் கேட்டாள்.

"அப்படியானால், உன் குடும்பத்திற்கும் ஜமீந்தார் மகனுக்கும் என்ன சம்பந்தம்? உங்கள் வீட்டில் ஜமீந்தார் வீட்டு 'சித' விலாசம் பொறித்த வெள்ளிச் சாமான்களும், உன் கழுத்தில் ஜமீந்தார் மகன் சின்னத்தம்பியின் பெயர்

பொறித்த வைர நெக்லஸ் இருப்பதற்கும் என்ன காரணம் ?" என்றான் பொன்னையன் ஆவலோடு.

"அதையெல்லாம் இப்போது என்னைக் கேட்காதீர்கள். அதை என் அம்மா பரம ரகஸ்யமாக வைத்திருக்கச் சொல்லி யிருக்கிறாள்! வேண்டுமானால் என் அம்மாவைச் சமயம் பார்த்துக் கேட்டுத் தெரிந்துகொள்ளுங்கள். நான் என் உயிர் போனாலும் அம்மா சம்மதமில்லாமல் அந்த ரகஸ்யத்தைச் சொல்லமாட்டேன். அதனால் நீங்கள் வாழ்நாள் முழுவதும் என்னைச் சந்தேகப்பட்டுக்கொண்டிருந்தாலும் சரி," என்று சௌந்தரவடிவு சொல்லிவிட்டுக் கொல்லைப்புறம் போய் விட்டாள்.

பொன்னையன் சிந்தனையில் ஆழ்ந்தான்.

அத்தியாயம் : 16

## அருளும் தெய்வம்

" இருட்பாடு நீக்கி ஒளி ஈந்தருளும் தெய்வம்,
எண்ணிய நான் எண்ணியவாறு எனக்கருளும் தெய்வம் !"
—கீர்த்தனை

---

மோகனத்திடமிருந்து கடிதம் வந்து பதினைந்து நாட்கள் ஆகிவிட்டன!

இந்தப் பதினைந்து நாட்களும் பொன்னையன் மனதில் பெரும் போராட்டங்கள் நிகழ்ந்துகொண்டிருந்தன. களங்க மில்லாததுபோல் தோன்றும் சௌந்தரவடிவின் அழகான சிரித்த முகத்தைப் பார்க்கும் போதெல்லாம், பொன்னையனின் யௌவன உள்ளத்தில் ஆசைகள் கிளர்ந்தெழும். அவளோடு காலம் முழுதும் இன்பமாய் வாழவேண்டுமென்ற துடிப்பும் பாசமும் ஏற்படும். ஆனால் 'சௌந்தரவடிவின் குடும்பத் திற்கும் ஜமீந்தார் மகன் சின்னத்தம்பிக்குமுள்ள உறவின் மர்மம் இன்னும் விளங்கவில்லையே, அதைக் கூற சௌந்தர வடிவு நாணுகிறாளே' என்றெண்ணும்போது, அவன் மனசு புழுப்போல் துடிக்கும்.

பொன்னையனின் மன நிலையை இந்தப் பதினைந்து நாட் களுக்குள் சௌந்தரவடிவு நன்றாகத் தெரிந்து கொண்டு

விட்டாள். ஜமீந்தார் உறவின் மர்மம் தெரிந்தாலொழிய பொன்னையனின் மனம் சமாதானமடையாது. தன்னோடு மனமொத்து வாழமாட்டான் என்று புலப்பட்டது.

கடைசியில் வேறுவழியில்லை என்று ஏற்பட்டதும், பரத நாட்டியம் சரஸ்வதியம்மாளிடம் சென்று, "அம்மா, நான் கண் கலங்காமல் வாழணுமென்றால், நம்ம ஜமீந்தார் மகன் ரகசியத்தைப் பொன்னையாபிள்ளையிடம் வெளியிட வேண்டியிருக்கு. அவரிடம் சொல்லட்டுமா அம்மா?" என்று அழாத குறையாகக் கேட்டாள் சௌந்தரம்.

சரஸ்வதியம்மாளின் முகம் பிரேதம் போல வெளுத்தது. நீண்டநேரம் எதையோ யோசித்துவிட்டு, "சரி, சொல்லம்மா. சௌந்தரம். நானா உன் புருஷனாக வரப்போகிறவனிடந் தானே சொல்லப்போகிறாய்! பரவாயில்லை, சொல்லு! ஆனால் அதனால் பின்னால் ஏதாவது விபரீதம் வந்துவிடக் கூடாது!" என்று கண்களில் நீர் மாலை மாலையாக வடியக் கூறினாள் சரஸ்வதியம்மாள்.

சௌந்தரவடிவு குதித்துக்கொண்டு பொன்னையனிடம் ஓடிவந்தாள். அவனைப் பார்த்ததும் அவளுக்குத் தயக்கம் ஏற்பட்டது. தொண்டை அடைத்துக்கொண்டது.

அப்போது பொழுது மயங்கும்நேரம். ஆகாயத்தில் கருமேகங்கள் கலைந்து நிர்மலம் தோய்ந்திருந்தது. சூழ்நிலையெங்கும் ஒருவித மென்மையான அமைதி படர்ந்தது. பொன்னையன் தெருத்திண்ணையில் சாய்ந்த வண்ணம், வானத்திலிருந்து ஒன்றிரண்டு முத்துக்களாக உதிர்ந்துவிழும் மழைத் துளிகளைப் பார்த்துக் கொண்டிருந்தான். மழைபெய்து ஓய்ந்த பிறகு சூழ்நிலையில் ஒருவித நிர்மலமான அமைதி படர்கிறது. மனிதனின் நெஞ்சம் மிருதுவடைந்து அதில் ஒருவித நிம்மதி படர்கிறது!

சௌந்தரம் பொன்னையனைப் பார்த்து, "ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறீர்கள்?" என்று பரிவோடு கேட்டாள்.

"ஒன்றுமில்லை, சௌந்தரம்! சந்தேகத்தை வைத்துக் கொண்டு எத்தனை நாள்தான் மனதுக்குள் புழுங்க முடியும்? சௌந்தரம், உன்னோடு எவ்வளவு இன்பமாய் வாழவேணுமென்று எப்படித் துடிக்கிறேன் தெரியுமா? ஆனால் உன் நடவடிக்கைகளைப் பற்றி இன்னும் என் மனசு சமாதானமடையவில்லை. நீ களங்கமுள்ளவள் என்று நம்பவும் முடியவில்லை; நம்பாமலிருக்கவும் முடியவில்லை. ஆற்றில் ஒருகாலும் சேற்றில் ஒருகாலுமாகத் தவிக்கிறேன், சௌந்தரம்!"

"ஐயோ, உங்களுக்கேன் இந்தச் சந்தேகம்? என் முகத்தைப் பாருங்கள், களங்கமுள்ளவள் என்று தோன்றுகிறது?" என்றாள் சௌந்தரவடிவு அழாத குறையாய்.

"சௌந்தரம், ஜமீந்தாருக்கும் உன் தாய்க்கும் என்ன சம்பந்தம்? ஜமீந்தார் மகன் சின்னத் தம்பிக்கும் உனக்கும் என்ன தொடர்பு? இந்தச் சந்தேகங்களெல்லாம் வெளியானலொழிய உன்னை நான் பூர்ணமாக நம்ப முடியாது, சௌந்தரம்! போட்டி நிபந்தனைப்படி நான் உன்னை மணந்தாலும், நீயும் நானும் புருஷன் மனைவியாக வாழமுடியுமென்று நினைக்கிறாய்?"

"அந்த ஜமீந்தார்கள் கதையைச் சொல்லிவிட்டால் உங்கள் சந்தேகமெல்லாம் அகன்று விடுமல்லவா? அந்தக் கதையைச் சொல்லுகிறேன். ஆனால் நீங்கள் அதைக் கேட்ட மறுகணமே மறந்துவிட வேண்டும். அந்த ரகசியத்தை யாரிடமும் சொல்வதில்லை என்று சத்தியம் செய்யுங்கள்."

"எனக்கு வித்தை தந்த கலைமகள்மீதும், என் குரு தோடி சிவக்கண்ணு பிள்ளை மீதும் ஆணையாக நீ சொல்லப் போகும் ரகஸ்யத்தை யாரிடமும் நான் சொல்வதில்லை. இது சத்தியம். சரி, கதையைச் சொல்."

அதற்குப் பிறகு சௌந்தரவடிவு கண்களில் நீர்வழிய அந்தக் கதையை கூறலானாள்:

"பெரிய பெரிய கதாசிரியர்கள் கற்பனை செய்கிற அதிசயமான நாவல்களையெல்லாம்விட நம்பமுடியாத சம்பவங்கள் சிலரது வாழ்க்கையில் நடந்து விடுகின்றன. இத்தகைய அதிசயமான சம்பவம் ஒன்று எனது தாயின் வாழ்க்கையில் நடந்தது... சுமார் முப்பத்தாறு வருஷங்களுக்கு முன்னால் எங்கள் அம்மா பரத நாட்டியம் சரஸ்வதி என்று பிரபலமடைந்திருந்தாள். அப்போது அவள் சிறுபெண். அந்தச் சின்ன வயசிலேயே எங்கள் அம்மா குறுகுறு வென்று நல்ல அழகாயிருப்பாள். மேலும் சூதுவாது தெரியாத நலல குணம். அவள் பருவமடைந்தவுடனே காலம் சென்ற சோளபுரம் பெரிய ஜமீந்தார் அவளைத் தனது அந்தப்புரத்தில் கொண்டுபோய் வைத்துவிட்டார். அவள்மீது தன் உயிரையே வைத்திருந்தார், தன் சொந்த மனைவியிடம் சொல்லாத ரகசியமெல்லாங்கூட என் அம்மாவிடம் சொல்லுவார். என் அம்மாவும், வெளியுலகத்துக்கு வர முடியாத நிலையில் ஜமீந்தார் தரும் போஷணையிலும் அபரிமிதமான அன்பிலும் மகிழ்ந்திருந்தாள. பெரிய இடத்துப் பாதுகாப்பில் இருந்ததால் யாரும் அவளை நெருங்கமுடியாது

அவளும் அந்தப்' புரத்தைவிட்டு வெளிவரமுடியவில்லை. இதற்கிடையில் பெரிய ஜமீந்தார், இந்தியாவைவிட்டு, அவளைப் பிரிந்து ரப்பர் தோட்ட விஷயமாக மலாயாவுக்குப் போய் அங்கு சிலகாலம் தங்க நேர்ந்தது. அந்த சந்தர்ப்பத்தில் எங்க அம்மா ஜமீந்தாரின் அந்தப்புரத்தை விட்டு வெளியேறி திருக்கோகர்ணத்தில் வந்து தங்கி தன் நாட்டியத் தொழிலில் ஈடுபட்டாள். பயின்ற கலையை யாராலும் மறந்திருக்கவே முடிவதில்லை!......

"அப்போது ஒருநாள் திருக்கோகர்ணத்தில் நடந்த திருவிழா சமயததில் என் அம்மா கோவிலில் நடனம் ஆடிக் கொண்டிருந்தபோது பிரபல நாதஸ்வர வித்வான் மகுடி மருதக்கண்ணு பிள்ளையைச் சந்தித்தாள். இருவருக்கும் மனசு பிடித்துப்போய் பரிச்சயம் ஏற்பட்டது. மருதக்கண்ணு பிள்ளையைத் தவிர மற்ற யாரும் பரதநாட்டியம் சரஸ்வதியை நெருங்கவே பயந்தார்கள். ஜமீந்தார்க்குரிய ஒருத்தியை கண்ணால் திரும்பிப் பார்ப்பதற்குக் கூட அந்த வட்டாரத்தில் பெரிய பெரிய கைகளெல்லாம் பயப்படும். பெரிய ஜமீந்தார் அது விஷயத்தில் மிகவும் கெடுபிடியாகவே இருப்பார். மேலும் பெண்கள் சம்பந்தமாகப் பல கொலைகள் செய்தார் என்று ஊரிலே கதை கதையாகச் சொல்லிக்கொண்டிருந்த காலம். அந்தக் கொலைகளைக் கேட்டால் தேகம் புல்லரிக்கும். ஆனால் மருதக்கண்ணு பிள்ளை இதையெல்லாம் பொருட்படுத்தவில்லை. என் அம்மா உள்ளூரப் பயந்தாலும் அதை வெளிக் காட்டிக்கொள்ளவில்லை. இருவருக்கும் தொடர்பு நீடித்தது. இருவருக்கும் மனசு ஒருமித்து புருஷன் மனைவி போல் திருக்கோகர்ணத்திலேயே வாழ்ந்து வந்தார்கள். இனி வாழ்க்கை முழுவதும் இருவரும் புருஷனும் மனைவியுமாக வாழ்வது என்றும் சுவாமி சந்நிதியில் சத்தியம் செய்து கொண்டார்கள். என் தாயும் ஜமீந்தாரின் உறவை அடியோடு நீக்கி விடுவதாக மகுடி மருதக்கண்ணு பிள்ளைக்கு சத்தியம் செய்து கொடுத்தாள். ஆனால் ஜமீந்தார் திரும்பி வந்தால் என்ன செய்வது, அவரிடம் இதை எப்படிச் சொல்லுவது, அதனால் என்னென்ன விபரீதங்கள் உண்டாகும். தனக்கும் தன்னைத் துணிந்து மனைவியாக்கிக் கொண்ட மருதக்கண்ணு பிள்ளைக்கும் என்ன ஆபத்துகள் நேருமோ என்று உள்ளூர நடுங்கிக் கொண்டிருந்தாள் என் அம்மா.

"மலாயாவுக்குச் சென்ற பெரிய ஜமீந்தார் ஒன்பது மாதங் கழித்து சோளபுரத்துக்கு திரும்பி வந்தார். அப்போது ஜமீந்தாரின் சொந்த மனைவி, பட்டத்துக்குரிய ஜமீந்தாரிணி பத்து

மாதக் கர்ப்பிணி. என் அம்மாவும் எட்டு மாதக் கர்ப்பிணி. ஜமீந்தாரிணியாகையால் பிரசவ ஆஸ்பத்திரியில் கொண்டு போய் வைத்திருந்தார்கள்.

"என் அம்மாவுக்கு அகாலப் பிரசவமாகுமோ என்ற அறிகுறிகள் தோன்றியதால், என் அம்மாமீது உயிரை வைத்திருந்த மகுடி மருதக்கண்ணு பிள்ளை, மிகவும் பயந்து போய், என்ன செலவு ஆனாலும் ஆகட்டும் என்று ஜமீந்தாரிணி இருந்த அதே பிரசவ ஆஸ்பத்திரியில் கொண்டுபோய் என் அம்மாவையும் சேர்த்தார். ஜமீந்தாரிணி படுத்திருந்த அடுத்த வார்டில் தான் என் அம்மா படுத்திருந்தாள். ஒரேநாளில் ஜமீந்தாரிணியும் என் அம்மாவும் பிரசவித்தார்கள். ஜமீந்தாரிணிக்குப் பிறந்தது ஒரு பெண் குழந்தை. என் அம்மாவுக்குப் பிறந்தது ஓர் ஆண் குழந்தை!" என்று சௌந்தரவடிவு மூச்சு வாங்குவதற்கு நிறுத்தினாள்.

பொன்னையன் நிமிர்ந்து உட்கார்ந்தான். "அப்புறம்...?" என்றான் பரபரப்போடு.

"பெரிய ஜமீந்தார் தனக்கு ஓர் ஆண்குழந்தை பிறக்க வேண்டுமென்று தவம் இருந்தவர். ஏனென்றால் தனக்கு ஆண் சந்ததி இல்லாமல் போய்விட்டால் தன் பெரிய ஜமீன் தாயாதிகளின் கையில் போய்விடுமே, தனக்குப் பின்னால் தன் பெயரும் தன் ஜமீன் பெயரும் விளங்காமல் போய்விடுமே என்ற எண்ணம் அவருக்கு நெடுநாளாக உண்டு. மேலும் அவருக்குத் தன் வயதான காலத்தில் வேறு ஆண் சந்ததி உண்டாகும் என்று நம்பிக்கையுமில்லை. ஜமீந்தாரிணியும் பிரசவ ஜன்னி கண்டு பெண்குழந்தை பிறந்த மறு நிமிஷமே உயிர் துறந்தாள். ரத்தக் கொதிப்பால் க்ஷீணித்திருந்த பெரிய ஜமீந்தாரின் உடல்நிலையும், அவர் ஆயுள் இன்றோ நாளையோ என்று சூசகம் காட்டிக் கொண்டிருந்தது. என்ன செய்வது என்று தவித்தார் பெரிய ஜமீந்தார். தான் செய்த பாவகிருத்தியங்களால்தான் தன் மனைவிக்கு ஒரு ஆண் குழந்தை கூடக் கொடுக்காமல் பெண் குழந்தையைக் கொடுத்துத் தெய்வம் தண்டித்ததோ என்று மன வேதனைப்பட்டார்.

"பிறகு எதையோ முடிவு கட்டிக்கொண்டு என் அம்மா படுத்திருந்த வார்டுக்கு வந்து அம்மாவைத் தனியாகச் சந்தித்தார். அப்போது மகுடி மருதக்கண்ணு அருகில் இல்லை. குழந்தை பிறப்பதற்கு மூன்று நாட்களுக்கு முன்னதாகவே மருதக்கண்ணு பிள்ளை பொன்னமராவதிக்கு முக்கியமான நாதஸ்வர கச்சேரி செய்யப் போய்விட்டார். எங்க அம்மாவும்

பெரிய ஜமீந்தாரும் வெகுநேரம் ஆஸ்பத்திரி வார்டில் தனித்துப் பேசினார்கள். அப்போது என் அம்மா மனதிலுள்ளதை எல்லாம் திறந்து சொன்னாள். மகுடி மருதக்கண்ணு பிள்ளையோடு மனமொத்து புருஷன் மனைவியாகத் தான சந்தோஷமாக வாழ்ந்த விபரங்களையும் மருதக்கண்ணு பிள்ளைக்குத்தான் அந்த ஆண் குழந்தை பிறந்தது என்றும், தங்களை வித்தியாசமாக நினைக்காமல் மன்னித்து ஆசீர்வதிக்க வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டாள்....

" அந்த சூழ்நிலையில், தள்ளாத வயதில் ஜமீந்தார் மிகவும் மனமுருகினார். அவளை மன்னித்து ஆசீர்வதிப்பதாகவும் அதற்குப் பிரதியாக அவள் ஒரு பெரிய உதவிசெய்ய வேண்டுமென்றும் கேட்டார். என் அம்மாவும் தன்னை ஜமீந்தார் மன்னித்து வாழ அனுமதி கொடுத்து விட்டார் என்ற உற்சாகத்தால் எந்த உதவியும் செய்வதாக வாக்குறுதி சொன்னாள். பெரிய ஜமீந்தாரோ, தமக்கு தன் ஜமீனை ஆள ஆண் சந்ததி இல்லையென்றும், தனக்கு இப்போது வெகு நாட்கழித்து பிறந்திருப்பதும் பெண் குழந்தைதானென்றும் குறைப்பட்டுக்கொண்டு, அவளுடைய ஆண் குழந்தையை தனக்கு தர வேண்டுமென்றும், அதைத் தன் மனைவிக்குப் பிறந்தது என்று ஏற்பாடு செய்து கொள்வதாகவும் கேட்டார். அதற்கு என் அம்மா, 'அப்படியானால் மகுடி மருதக் கண்ணு பிள்ளைக்கு என்ன பதில் சொல்வது' என்று கேட்க, தன் மனைவிக்குப் பிறந்த பெண் குழந்தையை என் அம்மாவுக்குப் பிறந்ததாகச் சொல்வதென்றும், இந்த ரகசியத்தை ஆஸ்பத்திரியில் யாரும் வெளியிடாமல் பார்த்துக் கொள்வது தன் பொறுப்பென்றும் சொன்னார், என் அம்மாவும் வெகுநேரம் தாய்மை உள்ளத்தோடு போராடி, கடைசியில் ஜமீந்தாரின் திட்டத்திற்கு இசைந்தார். பிறகு குழந்தைள் இரண்டும் மாற்றி வைக்கப்பட்டன. அந்தப் பெண் குழந்தையும் ஆண் குழந்தையும் யாரென்று உங்களுக்கு இப்போது தெரிந்திருக்குமே ?" என்று கேட்டாள் செந்தரவடிவு.

" ஜமீந்தாரிணிக்குப் பிறந்து, உன் அம்மாவின் கட்டிலில் மாற்றி வைக்கப்பட்ட பெண் குழந்தைதானே, நீ? உன் அம்மாவான பரத நாட்டியம் சரஸ்வதியம்மாளுக்குப் பிறந்த ஆண் குழந்தைதான் இப்போது சோளபுரம் ஜமீனை ஆளும் சின்னத் தம்பி ! நான் சொல்வது சரியா, சௌந்தரவடிவு? ஆனால் இந்த ரகசியம் வேறு யாருக்கும் தெரியுமா ?"

"நான், எங்க அம்மா, காலஞ்சென்ற பெரிய ஜமீந்தார், இப்போது ஜமீனை ஆளும் சின்னத்தம்பி இந்த நாலுபேரைத்

தவிர வேறு யாருக்கும் தெரியாது! மகுடி மருதக்கண்ணு பிள்ளைக்குக் கூடத் தெரியாது. அவருக்கும் சொல்லக்கூடாது, வேறு யாருக்குமே சொல்லக்கூடாது என்று ஜமீந்தார் என் அம்மாவிடம் சத்தியம் வாங்கிக் கொண்டார்!"

"ஏன்?"

"இது தெரிந்தால் பின்னால் தன் ஜமீனுக்கும் பலர் வாரீசு கொண்டாட முன் வரக் கூடுமென்றும், குடும்பத்தில் சிக்கல் களும், வீண் வழக்குகளும், கெட்ட பெயரும் உண்டாகு மென்றும், அதனால் இதை என்றுமே ரகசியமாக வைத்திருக்க வேண்டுமென்றும், ஜமீந்தார் நினைத்தார். உதாரணமாக இந்த ரகசியம் தெரிந்தால், நாளை என்னைக் கலியாணம் செய்து கொள்ளுகிறவன், ஜமீன் தனக்கு சேரவேண்டுமென்று வியாச் சியம் போடலாமல்லவா?"

"ஆமாம், ஆமாம்! இது ரகசியமாக இருக்க வேண்டு மென்று ஜமீந்தார் நினைத்தது மிகவும் சரிதான்! ஆனால் சின்னத்தம்பி உனக்கு விலைமதிப்புள்ள வைர நெக்லெஸ் செய்து அதில் சி. த. என்ற தன் பெயரைப் பொறித்து உன் னிடம் கொடுக்கக் காரணம் என்ன?"

"இதுகூட உங்களுக்குத் தெரியவில்லையா? சின்னத் தம்பி வயதானவுடன், பெரிய ஜமீந்தார் தன் மரணத் தருவாயில் இந்த ரகசியத்தை அவனிடம் கூறி, எங்கள் குடும் பத்துக்கு எவ்வளவு செய்தாலும் தகும் என்று சொல்லி யிருக்கிறார். அதைக் கேட்ட பிரமிப்பில் தனக்காக ஒரு அம்மாளும், ஒரு பெண்ணும் ஒரு பெரிய ஜமீனைத் தியாகம் செய்வது போல இந்தப் பரம ரகசியத்தைக் காப்பாற்றிவருகிறார் களே என்ற ஆச்சரியத்தில், இந்த வைர நெக்லஸ் செய்து, என்னிடம் ஓடிவந்து இதைக் கொடுத்துத் தன் நன்றியறிதலின் நினைவாக என்றும் என் கழுத்தில் போட்டிருக்க வேண்டு மென்று சின்னத்தம்பி கேட்டுக்கொண்டான். அது முதல் இந்த வைர நெகலஸை நான் குளிக்கும்போது கூடக் கழட்டுவது கிடையாது. காரணம், இது நீங்கள் எண்ணுவதுபோல் ஆறுயிரம் ரூபாய் மதிப்புள்ள வைர நெக்லஸ் என்பதினால் அல்ல! அவன் ஜமீந்தார் மகன் என்ற அகங்காரத்தைவிட்டு என்னிடம் ஓடி வந்து, 'நீ உடன் பிறந்த சகோதரியைவிட மேலானவள்' என்று கூறிய அன்பினால்தான்!" என்றாள் சௌந்தரவடிவு கண்களில் நீர் ததும்ப.

பொன்னையனுக்குச் சகலமும் விளங்கத் தொடங்கியது. "சௌந்தரம், அப்புறம் என்ன?" என்று கேட்டான் பொன் னையன்.

"மகுடி மருதக்கண்ணு பிள்ளை விரும்பாத நிலையில், என் அம்மா எவ்வளவு நாசூக்காகச் சொல்லியும், பெரிய ஜமீந்தார் எங்கள் வீட்டுக்கு, திருக்கோகர்ணத்துக்கு அடிக்கடி வருவார். அதைத் தடுப்பதற்காக மருதக்கண்ணு பிள்ளை என் அம்மாவை குளத்துமலைக்கே அழைத்து வந்து பகிரங்கமாகத் தன் வீட்டிலேயே வைத்துக் கொண்டார். அப்படியும் பெரிய ஜமீந்தார் குளத்துமலைக்கு அடிக்கடி வர ஆரம்பித்தார். எல்லாம் என்னைப் பார்க்க வேண்டுமென்ற பாசத்தால்தான்! நான் பெரிய ஜமீந்தாரின் சொந்த மனைவிக்குப் பிறந்த பெண் அல்லவா? பாசம் விடுமா? என் அம்மாவும் பெரிய ஜமீந்தார் வரும்போது அவர் மகன் சின்னத் தம்பியையும் அழைத்து வரும்படி சொல்லுவாள். அவன் என் அம்மா பெற்ற பிள்ளையல்லவா? பிள்ளைப் பாசத்தை யார்தான் தடுக்க முடியும்? எங்க அம்மா சில சமயங்களில் என்னையும் கூட்டிக்கொண்டு தன் பிள்ளை சின்னத் தம்பியைப் பார்க்கச் சோளபுரம் ஜமீனுக்கு ரகஸ்யமாகப் போவதுமுண்டு. பெரிய ஜமீந்தார், என் பேராலும் என் அமமா பேராலும் நிலபுலங்களை எழுதி வைப்பதும், எங்கள் வீட்டுக்கு வேண்டிய வெள்ளிப் பாத்திரங்கள், பண்டங்கள், நகைகள் செய்து கொடுப்பதுமாக, என் அம்மாவின் தியாகத்தைப் பாராட்ட முயன்றார். குழந்தை மாற்றலான ரகஸ்யம், மகுடி மருதக்கண்ணு பிள்ளைக்குத் தெரியாதாகையால், பெரிய ஜமீந்தாரும் அவர் மகனும் எங்கள் ஊருக்கு அடிக்கடி வருவதை ஊரில் உண்டாகும் புரளியை வைத்துக்கொண்டு தடுக்க முயன்றார். அந்தச் சந்தர்ப்பமொன்றில் மருதக்கண்ணுபிள்ளை எங்க அம்மாவுக்கு எழுதிய கடிதமொன்றைத்தான் உங்களிடம் தோடி சிவக்கண்ணுபிள்ளை காட்டி உங்கள் மனசைக் கலைச்சிருப்பார்!"

பொன்னையனுக்குத் தூக்கி வாரிப்போட்டது. "உனக்கு எப்படி இது தெரியும்?" என்று கேட்டான்.

"மோகனம் வேவு பார்த்து என்னிடம் எதையும் சொல்லி விடுவாள். அவள் வாயில் ஒரு ரகசியமும் நிற்காது. அதனால் தான் மோகனத்திடம் கூட நான் பிறந்த ரகசியத்தைச் சொல்லவில்லை!"

"ஆமாம், உங்கள் மாடிப் படிக்கு ஏறும் சுவற்றின்மீது தொங்கும் பெரிய ஜமீந்தார் படத்துக்கு உன் அம்மா பூ போட்டு தெய்வம் போல கும்பிடுகிறாளே, இது ஏன்?" என்று கேட்டான் பொன்னையன்.

"ஆமாம், அந்தப் பெரிய ஜமீந்தார் என் அம்மாவுக்கு தெய்வம் போலத்தான்! மருதக்கண்ணுபிள்ளையோடு வாழும்

படி மனப்பூர்வமாக அனுமதித்த பிறகு, பெரிய ஜமீந்தார் என் அம்மாவிடம் ஒரு தந்தையைப் போலவே சிறிதும் களங்கமில்லாமல் வாஞ்சையோடு நடந்து கொண்டார். அவர் என் அம்மாவைப் பார்க்கும் பார்வையில் கூட சிறிதும் சலனம் இராது. முன்பு வேறு விதமாகப் புருஷனும் பிரிய ஸ்திரீயாகவும் பழகிவிட்டு, ஓயாமல் விபரீதப் பார்வையாகப் பார்த்துக் கொண்டிருந்த நிலைமைக்குப் பிறகு, இப்போது பார்வையில் கூட சலனமில்லாமல் பார்க்கும் மனோபாவம் இருக்கிறது என்றால் அவருடன் பழகிய என் அம்மா அவரைத் தெய்வம் போலத்தானே நினைப்பாள்? மேலும் என்ன கொலை விழுமோ என்று நடுங்கிக்கொண்டிருந்த அவளுக்கு, அவள் மனப்படி மருதக்கண்ணு பிள்ளையோடு வாழ வசதிசெய்து கொடுத்த அந்த பெரிய ஜமீந்தாருக்கு எந்த ஜன்மத்திலும் என் அம்மா நன்றிமறக்க முடியாது!

"அதனால்தான் இந்த ரகசியத்தை என்ன நேர்ந்தாலும் காப்பாற்றவேண்டும், நான் ஜமீனுக்குரிய பெண் என்ற ரகசியம் வெளியே தெரிந்து அதனால் வழக்குகளோ, வாரிசு வம்புகளோ ஏற்படக்கூடாது என்று அம்மா கட்டாயமாக நினைக்கிறாள். எனக்கும் அதுதான் சரியென்று தோன்றுகிறது. எனக்கு ஜமீன் வேண்டாம். என் நாதஸ்வரமும், மனசுக்குப் பிடித்த மணவாளனும் இருந்தால் போதும். ஆனந்தமாக வாழ்வேன்!"

இவ்வளவையும் தெளிவாகக் கேட்டுக்கொண்டு வந்த பொன்னையன், "இதற்கு அத்தாட்சி என்ன?" என்று கேட்டான்.

"உங்களுக்கு அடிவேர்வரை சந்தேகம் இருக்கும் போலிருக்கு! நாளை எனக்கு வரப் போகிற புருஷன் இப்படிச் சந்தேகப் பிராணியாயிருந்தால் என்ன செய்வது? ஜமீந்தார் அந்த விபரங்களையெல்லாம் குறிப்பாகக் காட்டி தன் நன்றியைத் தெரிவித்து அவர் மரணத் தருவாயில் என் அம்மாவுக்கு எழுதிய கடிதம் ஒன்றை பூஜைப் பெட்டிக்குள் வைத்திருக்கிறாள்" என்றாள் சௌந்தரவடிவு கம்பீரத் தொனியோடு.

"எங்கே, அந்த ஜமீந்தார் எழுதிய கடிதத்தைக் கொண்டு வா, அடியோடு என் சந்தேகம் தீர்ந்துவிடும்!" என்றான் பொன்னையன் கடைசியாக.

சௌந்தரம் உள்ளே ஓடி, கொஞ்ச நேரத்தில் ஒரு கடிதத்தைக் கொண்டு வந்து பொன்னையன் முன் நீட்டி, "இதோ

அந்தக் கடிதம். என் கையிலிருந்த வாறே படித்துப் பாருங் கள். உங்கள் கையில் கொடுக்க மாட்டேன். கொடுத்தால் இந்த கடிதத்தை வைத்துக் கொண்டு நாளை இந்த ஜமீன் உங்கள் வருங்கால மனைவிக்குச் சொந்தமென்று வியாஜ்யம் போட்டு விட்டால் என்ன செய்வது என்ற சந்தேகம் எனக்கு!" என்றாள் சௌந்தரம் சிரித்துக்கொண்டே.

பொன்னையன் முகம் பிரகாசம் அடைந்தது. சௌந்தர வடிவின் தாயாரான பரதநாட்டியம் சரஸ்வதியம்மாள் உள்ளிருந்தவாறு மெல்லக் கனைக்கும் சப்தம் கேட்டது.

சௌந்தரம், ஒரு நெருப்புக் குச்சியை உரசி வைத்துக் கையிலிருந்த ஜமீந்தார் கடிதத்தை எரித்தாள்!

"ஏன் சௌந்தரம், இப்படி கடிதத்தை எரிக்கிறாய்?" என்று கேட்டான் பொன்னையன்.

"நாளைக்கு புருஷனாக வரப்போகிறவரிடம் கடிதத்தைக் காட்டி சந்தேகத்தைத் தீர்த்தவுடனே இதை எரித்துக் கொளுத்திவிட வேண்டுமென்று அம்மா சொல்லியிருக்கிறாள்" என்று சௌந்தரவடிவு கடைக்கண்ணால் பொன்னையனைப் பார்த்தாள்.

"சௌந்தரம்!" என்று பொன்னையன் மடை திறந்த வெள்ளம்போல் அன்பை வாரித் தெளித்துக்கொண்டே, சௌந்தரவடிவின் முழங்கால் வரை தொங்கும் நீண்ட சடையைப் பற்றியிழுத்தான். அப்படியே அவன் மார்பில் சௌந்தரம் முகம் புதைத்தாள். இரு காதலர்களும் சிறிது நேரம் மெய்மறந்து நின்றார்கள்.

சௌந்தரம் பொன்னையன் ஜோடி சேர்ந்து புதுமணத் தம்பதிகளான இரண்டு வாரத்துக்குப் பிறகு நடந்த ஒரு மிகவும் துக்ககரமான சம்பவத்தையும் சொல்லி இக் கதையை முடிப்போம். மோகனமும் ஜமீந்தார் சின்னத்தம்பியும் ஜோடி சேர்வதற்கு இடையூறாக இருந்த சின்னத்தம்பியாரின் மனைவி சிவலோக பிராப்தி அடைந்தாள்!

முற்றும்

புதிய வெளியீடு

( மலிவுப் பதிப்பு )

---

பிரேமா பிரசுரம்

மலிவுப் பதிப்பாக வழங்கும்

# விக்கிரமாதித்தன் கதைகள்

(புதிய தமிழ் நடையில் புதிய கதைகளுடன்)

தமிழில் வழங்கிவரும் கதைகளனைத்தும் உணர்ச்சியோட்ட மிக்க புதுமைத் தமிழில் விரிவாகத் தரப் பட்டுள்ளன. அத்துடன் வடமொழி மூலங்களைப் பரிசோதித்து, இதுவரை தமிழில் வெளிவராத பல புதிய கதைகளும் சேர்க்கப்பட்டுள்ளன.

உட் கதைகளுக்கு ஏராளமான சித்திரங்களும் இதற்கெனவே பல ஓவியர்களைக்கொண்டு வரையப் பட்டுள்ளன. நல்ல தாளில் அச்சிடப்பட்டு பல வர்ண முகப்பு அட்டையுடன் கண் கவரும் பதிப் பாக வெளியிடப்படுகிறது.

பதிப்பாசிரியர் : **அரு. ராமநாதன்**



அடுத்து வெளிவரும் மலிவுப் பதிப்புகள்.

**வீரபாண்டிய கட்டபொம்மன்**

**மதனகாமராஜன், மரியாதை ராமன், கதைகள்**

**ஹாத்திம் தாய்**

ஒவ்வொன்றும்

**விலை ரூ. 1—50**

# புதுமுறை மர்ம நாவல்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | பேய் வீடு | (சிரஞ்சீவி) | ... | ரூ. | 1—50 |
| 2 | குல்மால் குபேரன் | ,, | ... | ரூ. | 1—50 |
| 3 | கல் நெஞ்சன் | ,, | ... | ரூ. | 1—50 |
| 4 | சவப் பெட்டி | ,, | ... | ரூ. | 1—50 |
| 5 | மர்மத் தீவு | ,, | ... | ரூ. | 1—25 |
| 6 | காதலன் கொலை வழக்கு | ,, | ... | ரூ. | 1—25 |
| 7 | ரத்தப் பசி | ,, | ... | ரூ. | 1—25 |
| 8 | மர்மக் கொலை | ,, | ... | ரூ. | 1—00 |
| 9 | நீதிமயக்கம் | ,, | ... | ரூ. | 1—00 |
| 10 | புல்புல் ரம்பா | ,, | ... | ரூ. | 1—50 |
| 11 | புலிப் பாண்டியன் | (வேலவன்) | ... | ரூ. | 1—50 |
| 12 | கொலைப் பித்தன் | ,, | ... | ரூ. | 1—25 |
| 13 | மர்ம மனைவி | (உமா காந்தன்) | ... | ரூ. | 1—50 |
| 14 | இரட்டைக் கொலை | (ஜெகசிற்பியன்) | ... | ரூ. | 1—25 |
| 15 | மடிந்தவளின் மர்மக் கடிதங்கள் | (சேரன்) | ... | ரூ. | 1—00 |
| 16 | கவிழ்ந்த ரயிலில் | (சந்திர மோகன்) | ... | ரூ. | 1—00 |
| 17 | சந்திரகாந்தாவின் கொக்கு வேட்டை | (மேதாவி) | ... | ரூ. | 1—50 |
| 18 | மர்மக் கணவன் | ,, | ... | ரூ. | 1—50 |
| 19 | மர்மமாய் மறைந்த மாப்பிள்ளை | ,, | ... | ரூ. | 1—50 |
| 20 | மலபார் ஹோட்டல் மர்மப் பெண்மணி | ,, | ... | ரூ. | 1—50 |
| 21 | அபிராம சுந்தரியின் குடும்ப ரகசியம் | ,, | ... | ரூ. | 1—50 |
| 22 | சரபோஜிக்கோட்டை சதி | ,, | ... | ரூ. | 1—50 |
| 23 | மாயச் சமாதியில் மர்மப் புதையல் | ,, | ... | ரூ. | 1—50 |
| 24 | பாரிஸ்டர் பரிமேலழகர் | ,, | ... | ரூ. | 1—50 |
| 25 | திரிசங்கு சொர்க்கம் | ,, | ... | ரூ. | 1—50 |
| 26 | சவுக்கடி சாந்தப்பா | ,, | ... | ரூ. | 1—50 |
| 27 | பாதாள பவனம் | ,, | ... | ரூ. | 1—50 |
| 28 | சந்தனபுரி மர்மம் | ,, | ... | ரூ. | 1—50 |
| 29 | ரகசிய அறை | ,, | ... | ரூ. | 1—50 |
| 30 | துப்பறியும் காதலி | ,, | ... | ரூ. | 1—50 |
| 31 | ரயிலைத் திருடியவள் | ,, | ... | ரூ. | 1—50 |
| 32 | மலையாளச் சீட்டின் மர்மம் | ,, | ... | ரூ. | 1—50 |
| 33 | சூரக்கோட்டை மர்மம் | ,, | ... | ரூ. | 1—50 |
| 34 | பச்சை மாளிகை மர்மம் | ,, | ... | ரூ. | 1—25 |
| 35 | மாய மனிதர்கள் | ,, | ... | ரூ. | 1—25 |
| 36 | எமகாதகன் | ,, | ... | ரூ. | 1—25 |
| 37 | துப்பறியும் ராஜு | ,, | ... | ரூ. | 1—00 |

# ஆராய்ச்சி நூல்கள்

**நீங்கள் உயரமாக வளர்வது எப்படி?** கார்த்திகேயன்

ஆணுக்கும், பெண்ணுக்கும் எடையும் உயரமும் எப்படி யிருக்க வேண்டும்? கவர்ச்சிகரமான உடல் தோற்றத்திற்கு ஒவ்வொரு அங்கத்தின் அளவு முறை என்ன? பெண்களில் சிலர் ஆண்மைத் தோற்றத்துடனும் ஆண்களில் சிலர் பெண்மைத் தோற்றத்துடனும் காணப்படுகிறார்களே, அத்தகைய பருவ வளர்ச்சிக் கோளாறுகளுக்குக் காரணம் என்ன? பரிகாரங்கள் என்ன? குட்டையானவர்கள் எவ்வளவு அங்குலங்கள் வரை வளரமுடியும்? அதற்குரிய ஆகார நியதிகள், பழக்க வழக்கங்கள், தேகப் பயிற்சிகள் எவை? உங்களுடைய குழந்தைகள் நெட்டையாக வளர நீங்கள் கவனிக்க வேண்டியவை எவை?

ஏராளமான விளக்கப் படங்களும், தேகப்பயிற்சிச் சித்திரங்களும் அடங்கிய உடற்கலை நூல். விலை ரூ. 1—50

**ரேடியோ நாடகம் எழுதுவது எப்படி?** பி. எஸ். ராமையா

கலை இயல், வெற்றிகரமாக ரேடியோ நாடகம் எழுதுவதற்கு வேண்டிய கதைப்பின்னல், உரையாடல், பாத்திர சிருஷ்டி, ஓசை ஒலிக் குறிப்புகள் முதலான சகல விஷயங்களும், ஒரு சிறு கதையும், அதைக் கால் மணி நேர ரேடியோ நாடகமாக மாற்றியமைத்துக் காட்டும் மாதிரி வடிவமும் அடங்கிய சிறந்த நூல்.

விலை ரூ. 1—50

**மேடையில் பேசுவது எப்படி?** டி. எம். காளியப்பா, எம். ஏ

சென்னை முதலமைச்சர் திரு. காமராஜ் அவர்களின் முகவுரையுடன் கூடியது. 1. தன்னம்பிக்கையை வளர்ப்பதெப்படி? 2, பேச்சைத் தயாரிப்பதெப்படி? 3. புகழ்பெற்ற பேச்சாளர்கள் எவ்வாறு பேசினார்கள்? 4. வெற்றிப் பாதையை எட்டிப்பிடிப்பதெப்படி? 5. ஞாபகசக்தியை வளர்ப்பதெப்படி? 6. மேடைத் தோற்றம் எப்படி இருக்கவேண்டும் 7. பேச்சைத் துவக்குவது எப்படி? முதலிய 18 அத்தியாயங்களும், பிரபல மேடைப் பேச்சாளர்களின் போட்டோக்களும் அடங்கிய பயிற்சி நூல்.

விலை ரூ. 1—50

**இலாகிரிப் பொருள்களா? எம தூதர்களா?**

சு. அ. ராமசாமி புலவர்

காபி, தேனீர், புகையிலை, பொடி, சிகரெட், வெற்றிலை பாக்கு, மது—முதலானவற்றைப் பற்றிய ஆராய்ச்சி அடங்கியது.

விலை ரூ 1—50

**புதுமணத் தம்பதிகளுக்கு** ‘இளவேனில்’

மணமான ஒவ்வொரு தம்பதியும் அவசியம் படித்துப் பயன் பெற வேண்டிய, நல்ல தமிழ் நடையில் எழுதிய அருமையான விஞ்ஞான ஆராய்ச்சி நூல். விளக்கப்படங்களுடன் கூடியது. இரண்டாம் பதிப்பு. விலை ரூ. 2—25

# சுவையான புத்தகங்கள்

### சிந்தனையாளர் வரிசை

[ஒவ்வொரு சிந்தனையாளரின் வரலாறும் நூற் சுருக்கங்களும், சிந்தனைகளும், சித்திரங்களும் அடங்கிய நூல் வரிசை ; ஒவ்வொன்றும் விலை ரூ. 1—25]

1. **டார்வின்** (ஜெகசிற்பியன்)
2. **பிளேட்டோ** (அரு. ராமநாதன்)
3. **கார்ல் மார்க்ஸ்** (ரா. தண்டலன்)
4. **ரூஸோ** (கோமேதகவேலு)
5. **பெஞ்சமின் பிராங்ளின்** (அரு. ராமநாதன்)
6. **அரிஸ்டாடில்** (கிருஷ்ணன் பாலா)
7. **இங்கர்சால்** (இராதாமணாளன்)
8. **எமர்ஸன்** [சிங்காரவேலு]

### ஆராய்ச்சி :

1. **ரேடியோ நாடகம் எழுதுவது எப்படி?**
2. **நீங்கள் உயரமாக வளர்வது எப்படி?**
3. **மேடையில் பேசுவது எப்படி?**
4. **இலாகிரிப் பொருள்களா? எமதூதர்களா?**
   ஒவ்வொன்றும் விலை. ரூ. 1-50
5. **புதுமணத் தம்பதிகளுக்கு** விலை ரூ. 2--25
6. **பறக்கும் தட்டு** ரூ. 2—00

### நாவல்கள்

1. **சுரங்கம்** (எமிலிஜோலா) ரூ. 3—00
2. **அழகுராஜா** (மாபஸான்) ரூ. 3—00
3. **நாநாவின் தாய்** (எமிலிஜோலா) ரூ. 4--00
4. **எதிர்வீட்டு ஜன்னல்** (கோ. த. ச.) ரூ. 1--00
5. **சிலந்திக் கூடு** (பாலர் நாவல்) ரூ. 1-00
6. **ஒற்றைக் கண்ணன்** (பாலர் நாவல்) ரூ. 1--00
7. **ஆசை வெள்ளம்** (சுகி'யின் நாவல்) ரூ. 0—75
8. **பேசும் ஓவியம்** (தில்லை வில்லாளன் எழுதியது) ரூ. 1—25

### அரு. ராமநாதன் எழுதியவை

1. **கதாநாயகி**
2. **அம்பிகாபதி**
3. **பழையனூர் நீலி**
4. கோழிப் பந்தயம்
5. **வேதாளம் சொன்ன கதைகள்**
   (ஒவ்வொன்றும்) ரூ 1--25
6. **இராஜராஜசோழன்** (சரித்திர நாடகம்) ரூ. 2--25
7. **அசோகன்காதலி** ரூ. 1-50
8. **நாயனம்** சௌந்தரவடிவு 1-25

### பொன்மொழிகள் வரிசை

1. **ஔவையார்**
2. **விவேக சிந்தாமணி**
3. **பைபிள்** 4. **குர்ஆன்**
5. **பஞ்சதந்திரம்**
6. **புத்தர்** 7. **சங்கரர்**
8. **காந்தி**
   (ஒவ்வொன்றும்.) 0--50

**பிரேமா பிரசுரம் : : சென்னை-24**